# திருக்குறள் உரை





தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருக்குறள் உரை : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

பதிப்பாசிரியர் : தவத்திரு பொன்னம்பல அடிகளார்

முதற் பதிப்பு : ஆகஸ்ட் 2005 - திருவள்ளுவராண்டு 2036

உரிமை : திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி

பக்கங்கள் : 360

படிகள் : 1000

அட்டைக்கட்டு : நூல்கட்டு

விலை : ரூ. 160/-

பதிப்பு : **அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

### முத்துவிழா வெளியீடு

ஒளி அச்சுவடிவமைப்பு : சொ. அருணன்
கபிலன் பதிப்பகம்.

அச்சிட்டோர் : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ் (பி) லிட்.,
15/2, P.S.R. ரோடு, சிவகாசி.
போன்: 04562-223315

# பொதுமறை திருக்குறள்

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

மனித குலத்தின் மேம்பாடு அறிவின் வழிப்பட்டது; ஆள்வினையின் வழியது. மனிதகுலத்தின் அமைதி, நீதியைச் சார்ந்தது. மனிதகுலத்தின் உயிர்ப்பு, விழுமிய கடவுள் நெறி. இத்தகு உயர்நெறியில் மனிதகுலத்தை உய்த்துச் செலுத்தக்கூடிய ஒரு நூல் தேவை. அந்த நூல் எதுவாக இருக்கக் கூடும்?

நூல்கள் காடுகள் போல் பல்கி உள்ளன. அவற்றுள் பல, நூலின் இலக்கணத்திற்கு மாறுபட்டவை. நூல்கள் மனக்கோட்டத்தைத் தவிர்க்க வேண்டியவை. ஆனால் இந்த நூல்களில் பெரும்பாலான நூல்கள் மனக்கோட்டத்தை உண்டாக்குவனவாக அமைந்துள்ளன. இலக்கியக் காட்டில் ஒரே ஒரு நூல் உயர்ந்து விளங்குகின்றது. சர் ஆல்பர்ட் சுவைட்சர், சிந்தைக்கினிய செவிக்கினிய வார்த்தைகளால் அந்த நூலைப் பாராட்டுகிறார். ''உயர்ந்த நீதி இலக்கியங்களில் திருக்குறளே சிறந்தது. மனிதராகப் பிறந்தோர் பேசும் வேறு எம்மொழியிலும் திருக்குறளை ஒப்ப ஒரு நூல் இல்லை'' என்று பாராட்டியுள்ளார். திருவள்ளுவர் தந்த திருக்குறளுக்கு என்ன சிறப்பு?

திருக்குறள் ஒரு முழுநூல்; வாழ்க்கையின் அனைத்துப் பகுதிகளையும் தழுவி வளர்க்கும் வாழ்க்கைநூல்; அறநூல்; அரசியல் சாத்திரநூல்; அரசியல் உண்மைகளைச் சதுரப்பாட்டுடன் காட்டும் பெருநூல்; மெய்யுணர்வினை நல்கும் ஞானநூல்; மனித வளர்ச்சியின் பருவம்தோறும் துணை நின்று வழிநடத்தும் வாழ்வுநூல்; உலகப் பொது நூல்.

திருக்குறள் கடவுளை நம்புகிறது. ஆனால் கடவுளுக்காகச் செய்யப்பட்ட நூலன்று; மதச்சார்பான நூலன்று. திருக்குறள் அரசனை நம்புகிறது. ஆனால், அரசனுக்காகச் செய்யப்பட்ட நூலன்று. திருக்குறள் ஓர் அரசியல் நூலே. மக்களின்

உரிமைகளுக்கு அரண் செய்து நிற்கும் நூலே. கடவுளையும் அரசனையும் முன்னிலைப்படுத்தி, அவர்களுக் காகவே தோன்றும் இலக்கியங்கள் மக்களை மறந்து விடுவனவாக அமைந்து விட்டன. திருக்குறள் மனிதனை முன்னிலைப்படுத்துகிறது. ஆதலால், திருக்குறள் புதுமை நிறைந்தது; பொதுமை தழுவியது.

திருக்குறள் மனித சமுதாயத்தைச் சீருற வளர்த்து அவ்வழி அந்தச் சமுதாயத்தின் ஒரு பகுதியாக இருக்கும் குடும்பத்தைச் செழுமைப்படுத்தி அதன் பயனாகத் தனிமனிதனைச் செழுமையாக வளர்த்து மீண்டும் சமுதாயம் பயனுறும் வகையில் சமுதாயத்தை இயக்கும் நூல். மனித குலத்தை வேறுபடுத்திப் பகை வளர்க்கும் எந்த ஒரு கொள்கையையும், கோட்பாட்டை.யும் ஏற்றுக் கொள்ளாதது. திருக்குறளுக்குரிய ஒரே பெருமை, நாடு, மொழி, இனம், சமயம் ஆகிய வேறுபாடுகளைத் திருக்குறள் தழுவவில்லை. மாறாக, முற்றாக ஒதுக்கியிருக்கிறது. நாட்டுப்பற்றும்கூட எல்லை கடக்கும்பொழுது பகையை வளர்க்கிறது. என் நாடு சிறந்தது எனப் போரிடத் தொடங்குகின்றனர். திருக்குறள் நாட்டின் இலக்கணம் பேசுகிறது. ஆனால், அது தமிழ்நாட்டைப் பற்றிப் பேசவில்லை. திருக்குறள் உலகம் தழீஇய ஒட்பம் உடையது.

திருக்குறள், வாழ்க்கையில் பிறந்த வாழ்வியல் நூல்; திருக்குறள் வாழ்க்கையோடிசைந்த அறநூல். திருக்குறள் சமய நூல். ஆனால் உலகப் பொதுச் சமயநூல்; சமயங்களைக் கடந்த பொதுநெறி நூல். திருக்குறள் மானுடத்தின் வெற்றியைக் குறிக்கோளாக உடையது. திருவள்ளுவத்தின் வழி வையகம் இயங்கும்போது இன்பம் மலரும்; துன்பம் நீங்கும் !



# பதிப்புரை

## தவத்திரு பொன்னம்பல அடிகளார்

அருள்நெறித்தந்தை தமிழ்மாமுனிவர் நமது குருமகா சந்நிதானம் அவர்கள் திருக்குறள் நெறியைப் பட்டி தொட்டி எங்கும் பரவும் வகை செய்தார்கள்; திருக்குறள் பேரவை கண்டு ஒல்லும் வகையில் எல்லாம் திருக்குறள் தொண்டு ஆற்றினார்கள்; திருக்குறள் காட்டிய துறவு நெறியைத் தம் வாழ்நாளில் உயர்த்திப் பிடித்து அளவிடற்கரிய பெருமை பெற்றார்கள்; திருக்குறளின் தெளிவாய் வாழ்ந்த நமது மகாசந்நிதானம் அறம், பொருள் இரண்டிற்கும் அற்புதமாய் உரை தீட்டி உள்ளார்கள்.

''தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.''

என்ற குறளுக்கான விளக்கவுரை இதுவரை எந்த உரைகாரரும் சிந்திக்காத புதிய சிந்தனை! கற்பு உடல் சார்ந்தது என்று எண்ணுகின்ற மரபைத் தகர்த்து விட்டு உயிர் சார்ந்தது என்று கூறியிருப்பது புதிய நோக்கு. அதனால்தான் அதைப் பிறர் காத்தல் அரிது; சம்பந்தப்பட்ட உயிர்தான் காக்க வேண்டும் என்ற 'தற்காத்து' என்பதற்கான விளக்கம் முழுமையாக ஏற்புடையது.

''கொண்டாற் பேணல்'' என்பது காதல் இன்பம் குறைபடாதவாறு ஒழுகி வழங்கும் வழி தன் கணவனின் கற்புக்குத் துணையாய் அமைதல் என்ற விளக்கம் உடலியல், உளவியல் கோட்பாட்டின்படி ஏற்புடையதாக விளங்குகின்றது.

''சொற்காத்தல்-உண்மையும் இலாமையும் குறைகளும் குற்றங்களும், ஊடலும் மற்றவர் அறியாதவாறு பாதுகாத்தல்.''

இரும்புப் பெட்டகத்தில் பொன்னை, மணியை, வைரத்தை, வைடூரியத்தைப் பூட்டி வைக்கின்ற உலகம் இதயப் பெட்டகத்தில் அன்பை, நட்பை, சகதுணையின் குறைநிறைகளைப் பூட்டி வைப்பதில்லை. அப்படிச் சக உயிரின் குறைநிறைகளைப் பாதுகாக்கின்ற நம்பிக்கையில்தான் இல்லறத்தின் அடித்தளம் ஆழங்கால்பட்டு நிற்க முடியும். இத்தகு அறம் சார்ந்த இல்லற வாழ்வில் எந்தச் சோதனைகளுக்கும் சோர்வுபடாது வாழ்தல் என்ற விளக்கம் எவ்வளவு அருமையுடையது! பானைச் சோற்றுக்குப் பதம் ஒரு சோறு போல இந்த ஒரு குறளின் விளக்கத்திலேயே இந்த முழு உரையின் அருமையை நாம் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

அறம் சார்ந்த இல்லற வாழ்வைத் தெளிவாக வரையறுத்து விளக்கிய பெருமான், இன்பத்துப்பாலைப் புறம் தள்ளி இருப்பாரா? இன்பத்துப்பால் உரை கிடைக்காததற்குக் காலம் நம் கைநழுவிப் போய் விட்டதுதான் காரணம். இறையருளில் நம் மகாசந்நிதானம் இரண்டறக் கலந்து விட்டதால் இன்பத்துப்பால் விளக்கம் இலக்கிய உலகத்திற்கு இல்லாமல் போய் விட்டது பெருங்குறையே! அன்பர்களுக்குத் திருக்குறள் முழுமையும் கிடைக்க வேண்டும் என்பதைக் கருதி இன்பத்துப்பால் மூலம் இணைத்து வெளியிடப் பெறுகிறது.

மகாசந்நிதானம் என்ற திருக்குறளின் எளிய இனிய உரையாய் விளங்கும் நம் ஆதீனப்புலவர் மரு. பரமகுரு அவர்கள் வழக்கம்போல் இப்பணியிலும் கடுமையாய் உழைத்திருக்கின்றார். நம் அருள்நெறிப் பதிப்பக வெளியீடாய் வரும் இத்திருக்குறள் உரைப்பதிப்புப் பணியில் தம்மை முழுமையாய் ஒப்படைத்திட்ட நம் மகாசந்நிதானத்தின் வளர்ப்புச் செல்வமாகிய இளவல் கிருங்கை சேதுபதி, அவர்தம் அருமை இளவல் அருணன் ஆகியோருக்கு இதயம் நிறைந்த நல்வாழ்த்துக்கள்!

என்றும் குருமகாசந்நிதானத்தின் பணியின் வழியில்
கரைந்தும், கலந்தும் உங்களோடு,

குன்றக்குடி.

01.08.2005

என்றும் வேண்டும் இன்ப
அன்புடன்
**பொன்னம்பல அடிகளார்**

# பொருளடக்கம்





# அதிகார அகராதி

# அறத்துப்பால்

பாயிரவியல்

## 1. கடவுள் வாழ்த்து

உயர் ஞானமும் வரம்பிலாற்றலும் உடைய கடவுளைத் தொழுது ஞானத்தையும் ஆற்றலையும் பெற்று எண்ணிய பணியை இனிதே முடித்திட விரும்பிக் கடவுளை வாழ்த்துதல்.

காணப்படுவதைக் கொண்டு காணப்படாத காரணங்களைக் கண்டுபிடிக்க, கடவுள் வாழ்த்து துணை செய்யும்.

உயிர் இன்ப துன்பங்களிலிருந்து விடுதலை பெறுதலே பிறவிக் கடல் நீந்துதல்.

வைகுந்தம், சொர்க்கம் எல்லாம் இந்த மானுட உடம்பிலேயே என்ற வள்ளலார் நெறி அறிக; உய்த்துணர்க.

1. அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

எழுத்துக்கள் எல்லாம் அகரத்தை முதலாக உடையன. உலகம் அம்மையப்பனை முதலாக உடையது. ஆதி பகவன் ஆற்றலாகிய சக்தியை பங்கிலே உடையவன்; முதல் தலைமை பற்றியது.

அகரம், எல்லா எழுத்துக்களுக்கும் முதல். மற்ற உயிர் எழுத்துக்களில் கலந்து நிற்பது; மெய் எழுத்துக்களை இயக்குவது. கடவுள் உலகத்திற்கு முதல். உயிர்களுக்கு உயிராக நின்று உணர்த்தி இயங்குவது; மாயையாகிய சடப்பொருளை இயக்கி உலகத்தைத் தோன்றச் செய்வது. 1.

2. கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

கல்வியின் பயன் தூய அறிவினனாகிய கடவுளின் நல்ல திருவடிகளைத் தொழுதல்.

வாலறிவு - அறியாமைக் கலப்பில்லாத தூய அறிவு.

நற்றாள் - நன்மை பொருந்திய உயிர்களைத் தாங்கும் இயல்புடைய திருவடிகள்.

தூய அறிவினனாகிய கடவுளைத் தொழுதல் மூலம் உயிர் அறிவு நலம் எய்தும். உயிர் அறிவுமயமாதலே வீடு. இந்த அறிவு ஞானம் என்று அழைக்கப்பெறும்.

தொழுதல் - வழிபடுதல் - வழிப்படுதல் - நெறிநிற்றல். 2.

3. மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

உள்ளத் தாமரையின்கண் தங்கிய இறைவன் திருவடிகளை நினைந்து உணர்வால் ஒன்றானார், இந்நிலவுலகத்தின்கண் நெடுநாள் இன்புற்று வாழ்வர்.

சேர்தல் - நினைந்து இறைநெறியில் ஒன்றி நிற்றல்.

நிலமிசை - இந்நிலவுலகத்தின்கண். 3.

4. **வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.**

விருப்பு வெறுப்பில்லாத இறைவன் அடிசேர்ந்தார்க்கு எங்கும் துன்பமில்லை.

இடும்பை - துன்பம்.

விருப்பு, வெறுப்பு துன்பங்களின் வாயில்கள்; விரும்பியது கிடைக்காத போதும் தாம் விரும்புவதையே பிறிதொருவர் விரும்பியபோதும், எல்லோருக்கும் கிடைக்காதபோதும் துன்பம் வருதல் தவிர்க்க இயலாதது. வேண்டாதது வந்தடைவதாலும், வெறுப்பதனாலும், வெறுக்கப்படுவர் வெகுண்டு எழுவதாலும் துன்பம் வரலாம். விருப்பும் வெறுப்பும் இல்லாத இறைவனைத் தொழுதலின்வழி அத்தன்மையை அடைதலால் துன்பமில்லை என்பதாம். 4.

5. இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

இறைவனின் பொருளுடைய புகழை விரும்பியவர்களை மயக்கம் செய்யும் நல்வினை, தீவினை வந்தடையா.

இருள் சேர்- அறியாமை வழிப்பட்ட.

''பொருள்சேர் புகழ்'' பொருள் நிறைந்த - அர்த்தமுள்ள உண்மையான பயன் பொருந்திய புகழ்.

இறைவனின் புகழைச் சொல்லுதல் தன் முனைப்பை நீக்கும்; இறைவனைப் புகழ்தலால் யாரும் இகழப்படுவதில்லை. ஆதலால், அழுக்காறில்லை. எனவே வினைபடு வாயில்கள் தோன்றா. 5

6. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

ஐம்பொறிகளை -பொறிகளின் வாயிலாகிய புலன்களைப் பக்குவப்படுத்தி ஒழுக்க நெறியில் நிற்போர் நெடிய நாள் வாழ்வர்.

பொறிகளுக்கு வாயிலாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகியவற்றை முறைப்படுத்துதல் - பக்குவப்படுத்துதல் நெடிய நாள் வாழ்வைத் தரும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் இவற்றின் வகையறிந்து பக்குவப்படுத்துவதின் மூலம் மரணமிலாப் பெருவாழ்வு கிடைக்கும்.

அவித்தல்: பயன் கொளத் தக்கவாறு பக்குவப்படுத்துதல். 6.

**7.தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்**
**மனக்கவலை மாற்றல் அரிது.**

தனக்கு உவமையில்லாத இறைவனின் திருவடிகளைச் சேராதவர்கள் மனக்கவலைகளை மாற்றிக்கொள்வது அரிது.

உவமை கூறற்கியலாத உயர்வுடையானைச் சார்தல் வழி உயர்ந்த நலன்களைப் பெறுவதால் மனக்கவலை நீங்குகிறது. 7.

**8. அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்**
**பிறவாழி நீந்தல் அரிது.**

அறக்கடல் வடிவினனும் செந்தண்மை பூண்டவனுமாகிய இறைவனுடைய தாள் சேர்ந்தவர்களே அல்லாமல், மற்றவர்கள் பொருள், இன்பக் கடல்களை நீந்துதல் அரிது.

அறமும் செந்தண்மையும் கொண்டொழுகியவர்களிடம் தான் பொருளும், இன்பமும் வந்து பொருந்தும். அப்படி வந்து பொருந்திய பொருளும் இன்பமும் கவலை தரா. வாழ்க்கைக்குப் புணைபோலப் பயன்படும்.8.

**9. கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை.**

எட்டுக் குணங்களையுடைய இறைவன் தாள்களை வணங்காத தலை பயனற்றது.

குறிக்கோளும் குணமும் இல்லாத பொறிகள் பயனற்றவை.

எண் குணம் - தன் வயம்; தூய்மை, இயற்கையறிவு, முற்றறிவு, கட்டின்மை, பேரருள். எல்லையிலாற்றல்-வரம்பில் இன்பம் .

**10. பி றவிப் பெருங்கடல் நீந்துவார் நீந்தார்**
**இறைவன் அடிசேரா தார்,**

இறைவன் திருவடியை அடைந்தவர், பிறவிப் பெருங்கடலை நீந்திக் கரையேறுவர், சேராதார் நீந்தமாட்டார்.

பெருங்கடல் நீந்திக் கரையேறுதற்கு அருமையானது.

பிறவிக்குக் காரணமாகிய அறியாமைக் கடலை நீந்தும் இயல்பு இறைவனைச் சேர்தலால் கிடைக்கிறது. 10.

## 2 .வான் சிறப்பு

அறிவாக, ஆற்றலாக இருந்து உலகை இயக்கும் கடவுளை வாழ்த்திய பிறகு, இந்த மண்ணகத்தை - மானுட வாழ்க்கையை வளப்படுத்தி வாழ்வளிக்கும் வான் மழையைச் சிறப்பித்துக் கூறுவது வான்சிறப்பு.

கடவுளை ஒப்ப, வான்மழை உலகை வாழ்வித்தலான கடவுள் வாழ்த்து அதிகாரத்தை அடுத்துக் கூறப்பெற்றது. வாழ்க்கையின் தொடக்கம் வான்மழையே. ஆதலால், வான் மழையின் சிறப்பு கூறப் பெற்றது.

11. வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுஉணரற் பாற்று.

உயிரினத்தின் தொடர்ச்சியான வாழ்க்கை வான்மழையால் நிகழ்வதால் வான்மழை அமிழ்தம் என்றுணர்க.

உலகில் உயிரினங்களின் வாழ்க்கை இடையறவுபடாமல் தொடர்ந்து நிகழ்வதற்குக் காரணமாக உள்ள மழை சாவாமல் தடுக்கும் அமிழ்தம் போன்றது.

அமிழ்தம் - சாவா மருந்து.

உலகத்திற்கு அழிவுகள் இல்லை; மாற்றங்கள் உண்டு: பயன்படாத அளவுக்கு ஏற்படும் மாற்றங்கள் அழிவை ஒத்தவை. 11.

12. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை.

துய்த்து வாழ்பவருக்குத் துய்ப்புக்குரிய பொருள்களைப் படைத்தும், தானே துய்ப்புக்குரியதாகவும் அமைந்து விளங்குவது மழை.

உணவுப்பொருள்கள் விளைய மழை உதவி செய்கிறது; பருகவும் பயன்படுகிறது. 12.

13. விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியன்உலகத்து
உள்நின்று உடற்றும் பசி.

வான் மழை பொய்ப்பின் கடல் சூழ்ந்த உலகத்தினுள் பசி வருத்தும். மழை இல்லாவிடில் விளைவு இல்லை. அதனால் பஞ்சமும் பசியும் உலகத்தை வருத்தும்.

''விரிநீர் வியனுலகம்'' என்றது, தண்ணீர்ப் பரப்பளவில் மிகுந்திருந்தும் பயன்படாத நிலை உணர்த்தப்பட்டது. உப்புநீர் விளைவிக்கப் பயன்படாது.

பயன்படாத பொருளும் உதவ இயலாத படையும் இருந்து என்ன பயன்? 13.

14. ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

மழைவளம் குறையின் உழவர்கள் உழ மாட்டார்கள்; உழவு செய்யாமையால் உணவு இல்லை என்பது. 14.

15. கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற்று ஆங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை.

ஒருவரைக் கெடுப்பதும், கெட்டவர்களை மீண்டும் எடுத்து ஆக்கம் தருவதும் மழை.

பெருமழை பெய்து கெடுப்பது, பெய்யாமற் கெடுப்பது என்ற இருவகையில் கேடு.

பெய்ய வேண்டிய காலத்தில், பெய்யவேண்டிய அளவு பெய்து எடுப்பது நன்மை ஆக்கும் வகை.

நன்மை தீமை விகிதம் மழையிலும் தீமையே கூடுதலாக இருக்கின்றது.

மழை கெடுத்தாலும் பின் எடுத்து விடும்; கொடுத்து விடும். அதுபோலச் சான்றோர்கள் கெடுதல் செய்ய மாட்டார்கள். ஒரோவழி செய்ய நேரிட்டாலும் பின் எடுத்து நிறுத்திவிடுவர். 15.

16. விசும்பின் துளிவீழின் அல்லால்மற்று ஆங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது.

வான் நின்று மழைத்துளி விழாது போனால், பசும்புல் கூடத் தென்படாது. வான் நின்றிழியும் மழைத்துளிகளே மண்ணின் மடியில் புதைந்து மறைந்து கிடக்கும் பசும்புல்லைத் தரைநீக்கி மண்ணிற்கு வெளியே தலை காட்டச் செய்வனவாம்.

மண்ணின் வளத்திற்கு வான்மழையே துணை. நிலப்பரப்பின்மீது ஓர் அடி அளவு மேற்பரப்புள்ள மணற்பரப்பே, தாவரங்களைத் தாங்கும் தகுதி உடையது; மழைத்துளிகள் விழாதுபோனால், நிலத்தின்மேற்பரப்பு மணல்-புழுதியில் அப்புறப்படுத்தப்படுவதால் புல் முளைக்காது. 16.

17. நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்துஎழிலி
தான்நல்கா தாகி விடின்.

வான்மழை பெய்யாதாயின் ஆழமும் அகலமும் காணற்கரிய நீர்ப்பரப்பும் உடைய கடலும் கூடத் தனது பரப்புத் தன்மையிற் குன்றும்.

கடலின் நீர்வளம் கதிரவனால், காற்றால், உயிர்களால், குறைக்கப்படுவதை மீண்டும் நிறைவுபடுத்துவது வான்மழையேயாம். வான்மழையின் துணையினாலேயே ஆழ்கடல் வற்றாமல் இருக்கிறது. 17.

18. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.

சிறந்த விழாவும், பூசனையும் வானோர்க்குக் கிடைக்காது, வான்மழை பெய்யாது வறண்டு விடுமாயின்!

வானோர்க்குரிய பூசைக்கும் வான்மழையே துணை. 18.

19. தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்
வானம் வழங்கா தெனின்.

மழை பெய்யாதெனில் மற்றவர்க்கு வழங்கப்பெறும் தானமும், தான் உண்மையில் சிறப்பாக வாழத் தவம் செய்வதும் முறையாக நடைபெற மாட்டா.

உதவி செய்வதற்குரிய பொருள் வளத்தையும் தானம் செய்தலுக்குரிய ஒப்புறுதியையும் வான்மழையே தருகிறது. 19.

20. நீர்இன்று அமையாது உலகுஎனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு.

தண்ணீர் இல்லாமல் உலகியல் இல்லை. எல்லாருக்கும் வான்மழையின்றி ஒழுக்கம் இல்லை.

ஒழுக்கங்கள் வளர வளமான மழை தேவை. 20.

## 3. நீத்தார் பெருமை

கடவுள் அறிவாக, ஆற்றலாக விளங்கினாலும் வான்மழை வளம் பலவற்றை வையத்தில் படைத்தளித்தாலும் இவற்றின் அருமைப்பாட்டையும் பயன்பாட்டையும் அறிந்து கொள்ளும் ஆற்றல் இயல்பாக மானுடர்க்கு இல்லை. ஆதலால், நீத்தாராகிய சான்றோர் அறிவுறுத்தியும் தெளிவூட்டியும் வழிநடத்துகின்றனர். ஆதலால், நீத்தார் பெருமை பேசப்படுகிறது.

21. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு.

உலகியல் ஒழுக்கமாகிய பற்றுக்களை விட்டு நீங்கியவர்களின் பெருமை எல்லாவற்றுள்ளும் சிறந்தது என்பது நூல்களின் முடிவு.

தண்ணீர், மேட்டிலிருந்து பள்ளத்திற்கு வருதலே இயற்கை. அதுபோல் அவாக்களில் வீழ்தலே உலகியல் இயற்கை; உலகியல் ஒழுக்கம்; இவ்வொழுக்கத்தினின்றும் நீங்குதலே நீத்தல். இங்கு உலகியல் ஒழுக்கம் என்று குறிப்பிடப்பட்டது மற்றவர்க்குத் துன்பம் செய்கின்ற பொதுமை நீங்கிய கடும் தன்னலப் பற்றுகளையாம். 21.

22. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.

துறந்தார் பெருமை அளவிடற்கரியது, மண்ணகத்தில் இறந்தாரை எண்ணிச் சொல்ல முடியாதது போல. 22.

23. இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு.

பிறப்பு, வீடு இவற்றின் இயல்புகளை அறிந்து துறவறம் பூண்டவர்களின் பெருமை உலகின்கண் விளங்கித் தோன்றிற்று.

இருமை - இன்பம் துன்பம் என்றும் கொள்ளலாம்.

அறம் பூணுதல் - மற்றவர்களுக்குத் துன்பம் தராது இன்பம் தருதலுக்குரிய துறவற வாழ்க்கை. 23.

24. உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரன் எனும் வைப்பிற்கோர் வித்து.

அறிவு என்னும் துறட்டியினால் பொறிகளாகிய யானைகளை அடக்கித் தம் நெறியில் நிறுத்திக்காப்பவன் வீட்டின்பத்திற்கு வித்து ஆவான்.

பொறிகளின் இயற்கை தத்தம்வழி வெறிபிடித்த நிலையில் உயிர்களை இழுத்துச் செல்லல். அத்தகு பொறிகளை அறிவால் அடக்கித் தாம் மேற்கொண்டுள்ள நெறியில் நிறுத்தி, தமக்கு உரியவாறு பயன்படுத்துதல், இன்பங்களை விளைத்தற்குரியது. அதனால், வித்துப் போலாம். 24.

25. ஐந்துஅவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலும் கரி.

ஐம்புலன்களையும் அடக்கிய முனிவனின் ஆற்றலுக்கு வானுலகத் தலைவன் இந்திரனே சான்றாவான்.

ஐம்புலன்களை அடக்கி ஒழுகி ஆற்றல் பெற்றோர் முன் இந்திரன் பதவி இழத்தல் என்னும் மரபு வழிச் செய்தியறிக.

அவித்தல் : பக்குவப்படுத்துதல் - கிழங்கு அவித்தல் என்பதறிக.
25.

**26. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்**
**செயற்கரிய செய்கலா தார்.**

செய்ய முடியாத அருஞ்செயல்களைச் செய்து முடிப்பவர்கள் பெரியவர்கள். அத்தகு செயற்கரிய செயல்களைச் செய்து முடிக்க இயலாதவர்கள் சிறியவர்கள்.

செய்தற்கரிய அருஞ்செயல்களைச் செய்வோரே பெரியர். அத்தகைய அருஞ்செயல்களைச் செய்ய வாய்ப்பிருந்தும் சோம்பலின் காரணமாகச் செய்யாது விடுபவர் சிறியவர். 26.

**27. சுவைஒளி ஊறுஓசை நாற்றம்என்று ஐந்தின்**
**வகைதெரிவான் கட்டே உலகு.**

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தின் கூறுபாடுகளை அறிந்தவனின்கண் உலகம் அடங்கும்.

புலன்களின் வாயிலையும், ஐம்பூதங்களின் இயல்பையும் அறிந்தும் அவற்றை வகைப்படுத்தி ஒழுகுதற்குரிய அறிகருவிகள், செய்கருவிகள் இவற்றின் இயல்புகள் அறிந்தும் தத்தம் இயல்புக்கு ஏற்றவாறு அடக்கி வாழ்பவர்களின்கண் உலகம் அடங்கிக் கிடக்கும். இல்லையெனில் துன்புறுத்தும். 27.

**28. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்.**

பயன் நிறைந்த சொற்களைக் கூறுபவர்களின் பெருமையை, அவர்கள் அருளிய மறைமொழிகள் காட்டும்.

மறைமொழி : மறைகளுக்கு மொழிவரையறை இன்று எம்மொழியிலும் தோன்றலாம். வளர்ந்த மனிதர், முனிவர், ஞானியர் அருளுவனவே மறைமொழிகள். 28.

**29. குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது.**

நற்குணம் என்னும் குன்றின் மீது ஏறி நின்றவர்கள், வெகுளியை ஒரு நொடியும் பேணிக் காக்க மாட்டார்கள்.

அதாவது, வெகுளியை ஒரு பொருளாகக் கொள்ள மாட்டார்கள். அவர்கள் வெகுளல் அரிது. ஒரோவழி, வெகுண்டாலும் உடன் மாறும் என்பதாம். 29.

30. அந்தணர் என்போர் அறவோர்மற்று எவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.

எல்லா உயிரினங்களிடத்திலும் குளிர்ந்த அருள்தன்மை பூண்டொழுகுபவர் அந்தணர்; அறவோர்.

அந்தணர் பிறப்பால் அன்று; அந்தணர் என்பது சாதிப்பெயரன்று; எல்லா உயிர்களுக்கும் அருள் நலம் செறிந்த தண்ணளியை வழங்கி ஒழுகி வாழ்பவரே அந்தணர். 30.

## 4. அறன் வலியுறுத்தல்

வாழ்க்கை குறிக்கோளுடையது. வாழ்க்கை முழுமையுடையது ஆதலே குறிக்கோள். வாழ்க்கை முழுமையாதல் இயல்பாக நடைபெறக்கூடியதன்று. அறஞ்சார்ந்த வாழ்க்கையே வாழ்க்கையை முழுமைப்படுத்தும். சான்றோர் உணர்த்தும் அறநெறிக்கு ஆன்ற பொருள் தருவதாக வாழ்க்கை அமைதல் வேண்டும். நல்வாழ்க்கை அமைந்தாலே வான்சிறப்புத் தந்த வளம் பயனுடையதாக அமையும். கடவுளும் வாழ்த்துப் பொருள் நிலையிலிருந்து வாழ்நிலைப் பொருளாக மாறும். ஆதலால் அறம் சார்ந்த வாழ்க்கையே வாழ்க்கை என்று உணர்த்த அறன் வலியுறுத்தலாயிற்று.

வையக வரலாற்றில் சிலபோது சைத்தானும் வேதங்கள் ஓதும். அதன் காரணமாக நீத்தார் எடுத்துக்கூறுதலே அறம் என்பதனை உணர்த்த நீத்தார் பெருமையைத் தொடர்ந்து, அறன் வலியுறுத்தல் கூறியது. அதாவது, சாதி முதலிய புன்மைச் சார்பும் பொருள் முதலியன சேர்க்கும் தற்சார்பும் - ஆணவச்சார்பும் இல்லாதவர்கள் சொல்லுவதே அறம் என்று அறிக.

31. சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தின்ஊஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு

சிறப்பாகிய புகழினையும் செல்வத்தினையும் தரும் அறத்தினும் உயிர்க்கு ஆக்கம் தருவது பிறிதொன்று உளதோ!

சிறப்பு : கண்டோரால் மதிக்கப்பெறுதல் - பாராட்டப்பெறுதல். வீடு பேறு என்று கூறுவதும் ஏற்புடையதே! 31.

32. அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு.

அறத்தில் சிறந்த ஆக்கமும் இல்லை. அறத்தினை மறத்தலைப் போல வேறு கேடும் இல்லை. 32.

33. ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்.

தம் ஆற்றலுக்கு இசைந்தவாறு தமக்கு வாய்த்த வாயில்களில் எல்லாம் அறச்செயல்களை இடையீடின்றிச் செய்திடுக. அறச்செயல்கள் செய்தற்குரிய வாயில்கள் அளப்பில. இதுதான் அறம் என்பதன்று; மிகச்சிறிய பணிகள் கூட மற்றவர்க்கு நன்மை பயக்கும் வழி அறமாகும்.

1. ஒவ்வொருவரும் தம்வாழ்க்கையை அமைத்துக்கொள்வதன் மூலம் சுற்றுப்புறத்தூய்மையைப் பேணுதல் சிறந்த அறம்.

2. தாம் வாழும் நிலைகளில் உழைப்புக்களத்தில், வாழ்க்கைக்களத்தில் மற்றவர்களுக்குரிய பங்களித்து வாழ்தல் அறம்.

3. எந்தச் சூழ்நிலையிலும் இனியன கூறுதல், குற்றம் உடையார் மீதும் பகை காட்டாமல் திருத்தம் காண முற்படுதல் அறம்.

4. குற்றங்களை மறந்தும் மறைத்தும் குணங்களைப் பாராட்டி வாழ்வித்து வாழ்தல் அறம்.

5. தம் வாழ்க்கைக்குத் துணையாய் அமைந்து வளம் தரும் நிலம், தண்ணீர், மரம், விலங்கு முதலியனவற்றை முறையாகப் பாதுகாத்தல் அறம்.

6. யாரிடமாவது, யாரைப் பற்றியாவது பேச வேண்டிய இன்றியமையாமை ஏற்படும் பொழுது குணங்களை மட்டுமே எடுத்துக்கூறுதல் அறம். 33.

34. மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற.

மனத்துக்கண் குற்றமிலராகித் தூய்மையோடு வாழ்தலே அறம். அதுவே அறம்; மற்றவையெல்லாம் விளம்பரம். பொறிகளில் புறத்தே தூய்மை காட்டி சில அறச்செயல்களைச் செயல்களைச் செய்தாலும் மனத்தில் தூய்மை இருந்தாலே உரிய பயனைத் தரும். 34.

35. அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்.

மற்றவர் வாழ்க்கையைக் கண்டு பொறாத மனம், தேவையில்லாதவற்றை அழுக்காற்றின் வழி ஆசைப்படுதல், பெறாத பொழுது வெகுளுதல் (கோபப்படுதல்) தமது முறைகேடான ஆசைக்கு இணங்காதாரைத் திட்டுதல் ஆகியவற்றின் இழுக்கையிற் செல்லாது அறநெறியில் நின்று வாழ்தல் அறம்.

அவா, வெகுளி முதலியன அழுக்காற்றின் அடிப்படையில் வருவனவாம். அழுக்காற்றினைக் கைவிடின் அவாவும் வெகுளியும் போய் விடும் என்பதூஉம் அறிக.

அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் ஆகிய நான்கும் அறத்திற்குப் பகை. இவையுள்ள இடத்தில் அறம் இருக்காது. இருப்பதைப் போலத் தோன்றின் அஃது ஆரவாரம். 35.

36. அன்றுஅறிவாம் என்னாது அறம்செய்க மற்றுஅது
பொன்றுங்கால் பொன்றாத் துணை.

அறம் செய்வதற்குரிய காலம் இதுவல்ல என்றும், அது வரும் காலம் அறிவோம் அப்போது செய்வோம் என்றும் எண்ணாது காலம் தாழ்த்தாது அறத்தினைச் செய்க. அங்ஙனம் செய்த அறம் இறுதிக்காலத்தில் அழியாத் துணை. 36.

37. அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை.

சிவிகை ஊர்ந்து செல்வோன் - தூக்கிச் செல்வோனிடையில் உள்ள வேறுபாட்டை அறத்தின் பயன் என்று கூறும் பழக்கம் உடைய சமுதாயத்தை மறுத்துக் கூறியது.

இதுவென வேண்டா : வியங்கோள்.

''உள்ளது மறுத்தல்'' என்ற குறிக்கோளுடையது இப்பா. பொறுத்தல் துன்பம் தருவது. அறத்தில் வளர்ந்தவர்கள் மற்றவர் துன்புறுதலை அதுவும் தமக்காகத் துன்புறுதலை ஒருபொழுதும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அப்படியே ஏற்றுக்கொண்டால் அறம் பிழைத்துப் போய் விடுகிறது. 37.

38. வீழ்நாள் படாஅமை நன்றுஆற்றின் அஃதுஒருவன்
வாழ்நாள் வழியடைக்கும் கல்.

வாழ் நாள் வீழும் தன்மையது; இடையீடு உடையது; வாழ்நாள் கழிந்து கொண்டே போகின்றது. ஆதலால், நாள்கள் வீணாகப் போகாமல்

நன்றாற்றின் அந்த நன்மை ஒருவனது வாழ்நாள்கள் வீழ்நாள்களாக அழிந்து விடாமல் வழியடைத்து வளர்ப்பது ஆகும்.

பிறப்பைத் தடை செய்யும் என்பது கருத்து. வாழ்ந்த நாள்கள் பயனுடையனவாய் அமைந்துவிடின் வீழ்நாள்களாகக் கருதப்பெறா என்றும் கொள்ளலாம். 38.

39. அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல.

அறவழியில் வருவதே இன்பம். மற்றவையெல்லாம் புறம்பானவை. புகழுக்குரியனவும் இல்லை.

அறநெறி வழிவராத இன்பம், அழுக்காறு முதலியனவற்றைத் தோற்றுவித்தலால் இன்பம் அன்று. ஒரோவழி அறநெறி சாராத புகழ் இன்று கிடைக்கிறது. அஃது உண்மைப் புகழன்று. 39.

40. செயற்பாலது ஓரும் அறனே ஒருவற்கு
உயற்பாலது ஓரும் பழி.

செய்யத்தக்கது அறமே. பழிச்செயல்களைச் செய்யாமல் தப்பித்துக் கொள்ளுவதே ஒருவர் உய்யும் நெறி. 40.

## 5. இல்வாழ்க்கை

காதல் வயப்பட்ட ஒருவனும் ஒருத்தியும் தம்முள் கலந்து கூடி வாழ்தல் இல்வாழ்க்கை என்பதாகும். அறநெறி கண்டுணர்த்திய வாழ்வியல் நெறியில் இல்லற நெறி தலையாயது. அன்பின் விரிவுக்கும் சமூக வரலாற்றின் நீட்சிக்கும் துணை செய்யக்கூடியது இல்வாழ்க்கையேயாம். இல்வாழ்க்கை அர்ப்பணிப்பு உணர்வுடன் கடமைகளைச் செய்யும் களமாகும். இல்வாழ்க்கை அருள்நலம் கனிந்த இறை நல வாழ்க்கைக்கு ஒப்பாகும். அறநெறியின் வழியதாகி அறநெறிக்கு அரணாக அமைதலின், அறம் வலியுறுத்தலினைத் தொடர்ந்து அமைந்தது இல்வாழ்க்கை.

41. இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.

இல்வாழ்க்கையில் வாழ்பவன், இயற்கையிலமைந்த வழி கற்பவர், தவநிலை நிற்பவர், அந்தண வாழ்க்கை மேற்கொள்பவர் ஆகிய மூவகையினர்க்கும் அவர் தம் வழியில் நின்று ஒழுகத் துணையாவான். குலம், சுற்றம், ஊர் ஆகிய மூன்றினையும் என்றும் எடுத்துக்கொள்ளலாம். 41.

42. துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.

யாதொன்றும் பற்றுக் கோடாக் கொள்ளாது துறந்தார்க்கும், துய்த்து மகிழப் பெறாதார்க்கும், யாதொரு துணையுமின்றி இறந்துபோனவர்க்கும், இல்வாழ்வான் துணையாவான்.

துறந்தார்க்குத் துணையாய் அமைதல் அவர்தம் உயிர்வாழ்க்கை நடத்தலுக்குரிய இன்றியமையாதனவற்றைத் தருதலுக்கு.

துவ்வாதவர்க்குத் துணையாய் அமைதல் அவர்தம் துய்க்கும் வேட்கையைத் துய்க்கச் செய்து தணித்து அவ்வழி அழுக்காறு தோன்றாமல் தவிர்த்தலுக்காம்.

இறந்தார்க்குத் துணையாய் அமைதலாவது நல்லடக்கம் செய்தல். இப்பணி இறந்தார் நலம் கருதியது மட்டுமன்று, இருப்போர் நலம் கருதியதுமாகும். 42.

43. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.

முன்னோர், தெய்வம், விருந்தினர், சுற்றத்தார், தான் என்ற ஐவகையினரையும் பாதுகாத்து வளர்த்தல் தலையாய கடமை.

தென் புலத்தார் - முன்னோர், விருந்தினர்- நாட்டால், மொழியால், சமயத்தால், அயல்வழியினர், அறிமுகம் இல்லாதவர்.

ஒக்கல் : சுற்றம் - சுற்றம் குடும்பத்தின் விரிவு. தம் வழி வந்தோரும் தம்வாழ்க்கைத்துணைவழி வந்தோரும் -குருதி வழி - சுற்றத்தினர். 43.

44. பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.

பழிகளுக்கு அஞ்சுதலும், பகுத்துண்டலும் உடையவனின் வாழ்க்கை எப்பொழுதும் இடையறுதல் பெறாது.

பழியஞ்சுதல் - மற்றவர்களுக்குத் துன்பம் செய்தல் வழியும் ஒழுக்கமும் கெட்டு வாழ்தலாலும் வரும் பழிகளுக்கு அஞ்சி ஒழுகுதல். 44.

45. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

அன்பும் அறமும் உடைய இல்வாழ்க்கை பண்பும் பயனும் பெற்ற வாழ்க்கை ஆகும்.

அன்பு - குணம்; அறம் - வாழ்தல் - செயல். 45.

46. அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றின்
போஒய்ப் பெறுவது எவன்.

ஒருவன் அறத்தின் வழியே இல்வாழ்க்கை வாழ்வானாயின், அவன் அறமல்லாத நெறிகளில் சென்று பெறக்கூடியது என்ன?

புறத்தாறு - அறமல்லாத வழிகள், துறவுநெறி என்று வலிந்து பொருள் கொள்ளுதல் இயைபன்று. 46.

47. இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை.

இயல்பான இல்வாழ்க்கை வாழ்பவன் வாழ்க்கை முயற்சியில் ஈடுபட்டிருக்கும் அனைவரிலும் தலையாயவன்.

இயல்பினான் இல்வாழ்க்கை - வாழ்க்கை வாழ்வதற்கே, பொறிகளும் புலன்களும் துய்த்து மகிழ்வதற்கே! இதுவே வாழ்க்கையின் இயற்கை யாயமைந்த இயல்பு, மற்ற முயற்சிகள் செயற்கை. 47.

48. ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.

தவம் இயற்றுவோரை அவர்தம் நெறியில் ஒழுகச் செய்தும் தாம் அறநெறி பிறழாத இல்வாழ்க்கை வாழும் வாழ்க்கை நோற்பவர் வாழ்க்கையினும் சிறப்புடையது.

தாம் வாழ்தலோடன்றித் தவம் இயற்றுவோருக்கும் உதவி செய்வதால் சிறப்புடையதாயிற்று. 48.

49. அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று.

அறம் என்று சிறப்பித்துக் கூறப்பெறுவது இல்வாழ்க்கையே. அதுவும் பிறன் பழிக்கத்தக்கதாக இல்லாமல் இருந்தாலே நன்றாகும்.

தற்சார்பான பொருள் வாழ்க்கைவழியும் குடும்ப ஒற்றுமை இல்வழியும் நன்மக்கட்பேறு இல்வழியும் இல்வாழ்க்கை பழிப்புடையதாகும்.49.

50. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

இம்மண்ணில் வாழ்வாங்கு வாழ்பவன், வானுறையும் தெய்வங்களின் வரிசையில் வைத்தெண்ணப்படுவான்.

வாழ்வாங்கு வாழ்தல்: திருக்குறள் வகுத்து வழி நடத்தும் வாழ்வியல்வழி வாழ்தலே, வாழ்வாங்கு வாழ்தல். 50.

## 6. வாழ்க்கைத் துணைநலம்

தலைமகன் ஒருவனுடைய வாழ்க்கைக்குத் துணையாக அமைந்த நலம் பயக்கும் பெண்ணின் இயல்புகளையும் கடமைகளையும் கூறுவது. நல்ல துணை பயன் தருவது முடிவாதலின் வாழ்க்கைத் துணைநலம் என்றே கூறினார். ஒவ்வோர் ஆடவனின் புகழ்மிக்க வாழ்க்கையின் பின்னணியில் ஒவ்வொரு பெண் இருக்கிறாள், என்ற உரை உடன் எண்ணத்தக்கது.

**51. மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.**

மனையற வாழ்க்கைக்குரிய குணநலன்களைப் பெற்று, தன்னைக் கொண்ட தலைவனின் வருவாய்க்குத் தக்கவாறு வாழ்க்கையை நடத்துகிறவள் வாழ்க்கைத் துணை. 51.

**52. மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித்து ஆயினும் இல்.**

வாழ்க்கைத்துணை நலமாக அமைந்தவளிடம் மனையறத்திற்குரிய சிறந்த குணநலன்கள் இல்லாமற் போயின், வாழ்க்கை எத்துணைச் சிறப்புக்களைப் பெற்றிருப்பினும் இல்லாதது போலவேயாகும். பொருளுடைமை முதலிய சிறப்புகள் பயனுடையவாதல், வாழ்க்கைத் துணைநலத்தின் சிறப்பினாலேயாம். 52.

**53. இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை.**

வாழ்க்கைத் துணைநலமாகிய இல்லாள் பெருமைக்குரிய குணநலன்களைப் பெற்று விளங்கினால் இல்லாதது எது? அவள் பெருமைக்குரிய தகுதிகள் உடையவளாக இல்லாது போயின் உள்ளது எது ? இருப்பதும் இல்லாததும் பொருள்களின்பாற்பட்டனவல்ல. இவற்றோடு தொடர்பு கொண்டவர்களின் குணநலன்களைப் பொருத்தனவேயாம். 53.

**54. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மைஉண் டாகப் பெறின்.**

கற்பென்று சிறப்பித்துக் கூறப்பெறும் உறுதிப்பாட்டைப் பெறின், பெண்ணை விடப் பெருமைக்குரியது எது ? எதுவும் இல்லை என்பது கருத்து.

கற்புடையராதல் சிறப்பே. ஆயினும் அக்கற்பொழுக்கம் திண்மை யுடையதாக உறுதியும் ஆற்றலும் உடையதாக வளர்ந்து இடர்கள் வந்துற்றபோது போராடுதல் திண்மையாகும். இது மிகவும் விழுமியது. 54.

55. தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

தெய்வத்தைத் தொழாது கணவனைத் தொழுது எழுபவள் பெய்யெனப் பெய்யும் மழை போல்வாள்.

தேவையின் போது பெய்யும் மழை தப்பாது பயன் தருதல் போல் கணவனையே தொழுது வாழ்பவள் பயன்தரத்தக்கவளாக இருப்பாள். 55.

56. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

கற்பொழுக்கத்தில் தன்னைக் காத்துக் கொள்வதுடன் தன்னுடைய கணவனையும் பேணிக் காப்பாற்றுபவளும் சோர்விலாதிருப்பவளும் பெண்.

தற்காத்தல் :- கற்பு, உயிரினைச் சார்ந்த ஒழுக்கம் - பிறர் காத்தல் அரிது என்பதால் 'தற்காத்து' என்றார்.

தற்கொண்டான் பேணல் :- காதலின்பம் குறைபடாதவாறு, ஒழுகி வழங்குதல்வழி தன் கணவனின் கற்புக்குத் துணையாய் அமைதல்.

சொற்காத்தல்:- உண்மையும் இல்லாமையும் குறைகளும் குற்றங்களும் ஊடலும் மற்றவர் அறியாதவாறு பாதுகாத்தல்.

சோர்விலாள்:- குடும்பப் பாதுகாப்புப் பணி மிகப் பெரிது. சோர்வின்றி அனைத்துத் துறைகளையும் கண்காணித்துச் செய்தல். 56.

57. சிறைகாக்குங் காப்புஎவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

மகளிரின் கற்பொழுக்கமே தலையாயது. சிறைப்படுத்திக் காக்கும் காப்பால் யாதொரு பயனுமில்லை. 57.

58. பெற்றாற் பெறின் பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு.

பெண்மைக்குரிய சிறப்பியல்புகளை அடைந்து சிறப்புறும் பெண்ணை ஒருவர் வாழ்க்கைத் துணைநலமாகப் பெறின் இன்ப உலகினை எய்துவர். 58.

59. புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை.

புகழுக்குரியவளாக வாழ்க்கைத்துணைநலம் அமையாத வழி தலைமகனுக்கு அவனை இகழ்வார் முன் பெருமிதம் இல்லை.

புகழ் புரிதல் - 56-ஆவது திருக்குறளின்படி வாழ்தல். 59.

60. மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.

மனைவியின் குணநலன் மனையறத்திற்கு நன்மை. நன்மக்களைப் பெறுதல் அம்மனையறத்திற்கு நல்ல அணிகலம்.

நன்மக்கள் - காதலர்களின் குணச்சிறப்புக்களின் வழியில் நன்மக்கள் அமைவதாம். 60.

## 7. மக்கட்பேறு

இல்வாழ்க்கையின் பயன் மக்கட்பேறு. வாய்த்த வாழ்க்கைத் துணை நலத்தின் வழியிலேயே மக்கட்பேறு அமைவதால் வாழ்க்கைத்துணை நலத்தினைத் தொடர்ந்து மக்கட்பேறு கூறினார். நன்மக்களை ஈன்று புகழ் பெறுதலே இல்வாழ்க்கையின் குறிக்கோள் என்பது வள்ளுவத்தின் திரண்ட கருத்து.

அடையும் மக்கட்பேற்றினைப் பொறுத்துத்தான், இல்வாழ்வாருடைய புகழ் அமைகிறது. பயன் அமைகிறது. மக்கட் பேற்றிற்குரியதாகி மனிதகுல வரலாற்றினைத் தொடர்ந்து இயக்கப் பயன்படுவதனாலேயே இல்வாழ்க்கை அறமாயிற்று.

61. பெறுமவற்றுள் யாம்அறிவது இல்லை அறிவுஅறிந்த
மக்கட்பேறு அல்ல பிற

இல்லறத்தான் பெறக்கூடிய பேறுகளுள், அறிவறிந்த மக்களைப் பெறுதலை விடச் சிறந்த பேறு வேறு ஒன்று இருப்பதாக நாம் அறியவில்லை.

அறிவறிந்த மக்கட்பேறு - பெறக்கூடிய மக்கள் எப்படி அமைய வேண்டும் என்று எண்ணி ஒழுகிப்பெறும் மக்கள் அறிவறிந்த மக்கள்.

அறியக்கூடிய நூல்களை, கற்று அறியத்தக்க மக்கள் என்றும் கூறுவர். 61.

62. எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கள் பெறின்.

பழித்தற்குரியவாறு அமையாது நற்குணங்கள் உடைய குழந்தைகளைப் பெற்றால் எழுபிறப்பிலும் துன்பங்கள் வாரா.

தீயமக்களாயின் இம்மையில் புகழும் செல்வமும் குறையும், மறுமையில் இன்ப அன்பும் கிடைக்காது. 62.

63. தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும்.

தம் மக்களைத் தமது செல்வம் என்று பாராட்டுவர் பெற்றோர்; மக்கள் செய்யும் பொருளும் புகழும் அவர்கள் செயல்பாட்டுவழி பெற்றோரை வந்தடையும். 63.

64. அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.

தம்மக்களின் சிறிய கைகளால் துழாவிக் குழைக்கப்பெற்ற சோறு பெற்றோருக்கு அமிழ்தினும் இனிது. சுவையற்றதும் அன்பின் மிகுதியால் சுவையாகிறது. 64.

65. மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.

பெற்றோர் தமது குழந்தைகளின் உடம்பைத் தொடுதலில் உடலின்பத்தையும் அவர்தம் மழலைச் சொற்களைக் கேட்டலில் செவி இன்பத்தையும் பெறுவர். 65.

66. குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.

தம் குழந்தைகளின் மழலைச்சொற்களைக் கேளாதவர்கள் குழலிசையும் யாழிசையும் இனிது என்று கூறுவர்.

மழலை - குதம்பை போன்ற சொல் என்று கூறியமையின் உள்நோக்கம் இல்லாது இயல்பாக அமைந்த சொல். அது இன்பம் தருவது. 66.

67. தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

தந்தை மகனுக்குச் செய்யும் உதவியானது கற்றோர்கள் கூடியிருக்கும் அவையில் முதன்மை பெறச் செய்தல்.

கல்வி கேள்விச் சார்புகளால் மற்றவர் மதிக்கத்தக்க முதன்மை பெறுதல். 67.

68. தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க்கு எல்லாம் இனிது.

பெற்றோராகிய தம்மைவிடத் தமது குழந்தைகள் கல்வி யறிவுடையராயிருத்தல் இப்பெரிய உலகின் மக்கள் யாவர்க்கும் இனிது.

வளர்ச்சியே இயற்கை. ஆதலால் ''தம்மில் தம்மக்கள் அறிவுடைமை'' என்றார்.

நாடு மொழி சமய எல்லைகள் கடந்தும் அறிவு பயன்படுவதால் ''மாநிலம்'' என்றார். 68.

69. ஈன்ற பொழுதின் பெரிதுஉவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்.

தன்மகனை நல்லாண்மையுடைய சான்றோன் என்று உயர்ந்தோர் புகழ்ந்து கூறுவதைக் கேட்ட தாய் அம்மகனைப் பெற்ற பொழுதினும் பெரிது மகிழ்வாள். ஒருவர் செய்த நற்செயல்களின் பயனைக் கண்டவர்கள் மனம் கலந்து பாராட்டிக் கூறுவது புகழ்.

ஆசிரியர் காலத்தும் இன்றும் புறத்திணை - உலகியல், ஆண்மக்களால் நடத்தப் பெறுவதால் மற்றவர் புகழும் வாய்ப்பு ஆண்மகனுக்கே உண்டு. ஆதலால் ''மகன்'' என்றார். ஒரோ வழி மகளுக்கும் உண்டு. பொது விதியன்று; சிறப்பு வழியேயாம்.

''புகழ்'' என்பது கேட்பதற்குரியதே தவிர காண்பதற்குரியதன்று.

தந்தையினும் தாய் மகிழ்தல் இயற்கை. அதனால், தந்தைக்கு மகிழ்ச்சியில்லை என்பது பொருளாகாது. ஆயினும், ஒரே புறத்திணையில் தந்தையும் மகனும் ஈடுபடுவதால் ஒரோவழி தந்தையுள்ளம் பொறாது. ஏறிதே தகப்பனானவன் மகன் புகழில் அழுக்காறு கொள்ளுதல் நிகழலாம். அல்லது மகன் தந்தையை விஞ்சியதாகக் கருதி தந்தையிடத்து மதிப்பில்லாதபடி ஒழுகும்பொழுது தந்தைக்கு மகிழ்ச்சி வராது. 69.

70. மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்எனும் சொல்.

மகன் தந்தைக்குச் செய்யும் கைம்மாறாவது, ''இவனைப் பெறுவதற்கு இவன் தந்தை என்ன தவம் செய்தானோ?'' என்று வியக்கத்தக்க வகையில் நல்லவனாக, வல்லனாக சான்றோனாக நடந்து கொள்ளுதலேயாம்.

முந்தையோர் பெருமையில் வாழ்வது வளர்ச்சியைக் குறிக்காது. தாம் தமது அருஞ்செயல்களால் புகழுடையவராக வாழ்ந்து தம் குடும்பப் புகழை வளர்க்க வேண்டும். வளர்ந்து வரும் குடும்ப ஆய்வு ''அவரில்'' தொடங்காமல் ''இவரில்'' தொடங்கும். 70.

தொழிற்படுவது. அதனால், நட்பு வந்தமையும்; நட்பு தீமை அகலுதலுக்கும் நன்மை பெறுதலுக்கும் துணையாய் அமைவதால் ''சிறப்பு'' என்றார். 74.

75. அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு.

இவ்வுலகத்தில் இன்பம் துய்ப்பவர்களாகச் சிறப்புற்றவர்கள், பிறரிடத்தில் அன்புடையராய்ப் பொருந்தி வாழ்ந்ததனால் அமைந்த வழக்கமாகும். 75.

76. அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.

அன்பு, அறத்திற்கே துணை என்று கூறுவர் அறியாதவர். மறத்திற்கும் அன்பே துணை.

மறம் - தீமை.

தீமைக்குத் தீமை ஒருபொழுதும் தீர்வு ஆகாது. தீமைக்கும் நன்மையே தீர்வுக்குரிய வழி. தீமையையும் அன்பால்தான் வெற்றிபெற வேண்டும். 76.

77. என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.

எலும்பில்லாத புழுக்களை வெயில் சுட்டு அழிப்பது போல அன்பில்லாதவர்களை அறம் சுட்டு அழிக்கும். 77.

78. அன்பகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரம்தளிர்த் தற்று.

உள்ளத்தில் அன்பில்லாத உயிர்வாழ்க்கை, பாலை நிலத்தில் பட்டுப்போன மரம் தளிர்த்தல் போலும்.

பாலை நிலத்தில் பட்ட மரம் துளிர்க்காது. அதுபோல, உள்ளத்தில் அன்பில்லாதவரின் உயிர் வாழ்க்கையும் வளராது. 78.

79. புறத்துறுப்பு எல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு.

வாழ்க்கையைச் சிறப்புறச் செய்யும் உடம்பினுள் அகத்தில் இருந்து உதவி செய்யக்கூடிய அன்பை உறுப்பாகப் பெறாதவர், வாழ்க்கை சிறப்புறுதற்குத் துணை செய்யக்கூடிய புறத்துறுப்புக்கள் பெற்றிருந்தாலும் சிறப்படைய முடியாது.

அகத்துறுப்பு - அன்பு

## 8. அன்புடைமை

தந்தை, தாய், மக்கள் - இஃது ஓர் அன்பு விளைவு. இந்த விளைவு அன்பினால் ஆயது; அன்பிற்கே உரியது. அன்பு என்பது காமத்தின் முதிர்ச்சி; காதலின் பயன் இன்பம்; அன்பின் விளைவு- தியாகம்; அர்ப்பணிப்பு. அன்பின் பயன் இன்பம். அன்பிலே தொடங்கி, அன்பிலே வளர்ந்து அன்பாக அமைந்து விளங்குவதால் மக்கட்பேற்றினைத் தொடர்ந்து அன்புடைமை கூறப்பெற்றது.

71. அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கண்நீர் பூசல் தரும்.

அன்புணர்வு வெளிப்படாமல் அடைத்து வைக்கும் தாழ் இல்லை. அன்பு காட்டப்படுவோரிடம் துன்பங்கள் கண்டறியும்பொழுது கண்களிலிருந்து கண்ணீர் ஒழுகும்; அப்போது அன்பு உலகு அறியப் பெறும்.

அன்பு என்பது ஓர் இயக்கநிலை உணர்வு. செயல்பாடிலாத அன்பு இல்லை. செயற்பாடற்ற நிலைக்கு அன்பு என்று கூறுதல் தவறு. 71.

72. அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.

அன்பில்லாதவர்கள் எல்லாப் பொருள்களையும் தமக்கே உரிமையாக்கிக் கொள்வார்கள். அன்புடையவர்கள் பொருள்கள் மட்டுமின்றித் தமது உடலையும் கூட மற்றவர்க்கு உரிமைப்படுத்துவார்கள். 72.

73. அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு.

அருமையான உயிருக்கு எலும்புகளால் ஆகிய உடம்புடன் ஏற்பட்ட தொடர்பு அன்பினாலமைந்த வழக்கமாகும்.

காதலிருவர் கலந்த அன்பினால் உயிருக்கு உடம்பின் தொடர்பு கிடைத்தது. அன்பினால் வந்த வாழ்க்கையை அன்பிற்கே பயன்படுத்துக என்பதாம். 73.

74. அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்புஎன்னும் நாடாச் சிறப்பு.

அன்பு ஆர்வத்தைப் பெற்றுத் தரும்; ஆர்வம் நட்பினைப் பெற்றுத் தரும். அன்பு மேலும் வளர்ந்த செயற்பாட்டு நிலைக்கு ஆர்வம் என்று பெயர். ஆர்வம் மற்றவர்களை நோக்கி விரிந்து சென்று

புறத்துறுப்புக்கள் - இடம், பொருள், ஏவல் ஆகியனவாம். மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகள் என்று கூறினும் பொருந்தும். 79.

80. அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.

அன்பின் வழிநின்று ஒழுகும் உடம்பே உடம்பென்று வழங்கப்பெறும். அன்பு இல்லாதவரின் உடம்பு, எலும்பைத் தோலால் போர்த்த போர்ப்பே. 80.

## 9. விருந்தோம்பல்

விருந்து- புதியது. விருந்தினர் - புதியவர்கள். நாட்டிடைக் கடந்துவரும் புதியவர்கள். இவர்களுடன் கலந்து பேசி மகிழ்வதாலும், விருந்தளிப்பதாலும் அறிவு விரிவடைகிறது. அன்பின் பரிணாம எல்லை விரிவடைகிறது. வாழ்க்கையின் பயனும் உறுதிப்படுத்தப்படுகிறது. இல்லற வாழ்க்கையின் அமைப்பே விருந்தோம்புதலுக்குரியது. அதனால், இல்வாழ்க்கையினைத் தொடர்ந்து கூறப்பெற்றது.

81. இருந்தோம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தல் பொருட்டு.

கணவனும் மனைவியும் தம் இல்லத்தின்கண் இருந்து, தம்மையும், தம் மக்களையும் இல்வாழ்க்கைக்குரிய பொருள்களையும் பேணிக் காத்து வாழ்வதெல்லாம் விருந்தினரைப் பேணி அவர்களுக்கு உதவி செய்தல் பொருட்டேயாம். 81.

82. விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா
மருந்துஎனினும் வேண்டற்பாற் றன்று.

மரணமிலா வாழ்வைத் தரும் மருந்தேயானாலும் விருந்தினர் வீட்டிற்கு வெளியே இருக்க, தாம் தனியே உண்ணல் விரும்பத்தக்கதன்று. 82.

83. வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று.

நாள்தோறும் வரும் விருந்தினரைப் பேணுவானது இல்வாழ்க்கை வறுமையால் அழிவதில்லை. 83.

84. அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்.

முகனமர்ந்து நல்ல விருந்தினரைப் பேணுவானுடைய இல்லத்தின்கண் திருமகள் மனமகிழ்ந்து தங்கி வாழ்வாள். 84.

85. வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்துஓம்பி
மிச்சில் மிசைவான் புலம்.

விருந்தினரை முதலில் உபசரித்து உண்ணச் செய்தபின் மீந்ததைத் தாமுண்ணும் வேளாளனது நிலத்திற்கு, தாம் விதை தெளித்தல் வேண்டியதில்லை.
விருந்தோம்பி வாழ்வான் வயல் பலருக்கும் பயன்படுவதால் எவரும் விதைப்பர். உரியவன் விதைக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை என்பதே கருத்து. 85.

86. செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்துஇருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

முன்னே வந்த விருந்தினரை உபசரித்துப் பின்னும் வரும் விருந்தினர்களை உபசரிக்கக் காத்திருப்போன் வானத்தவர்க்கு நல்விருந்தாவான். 86.

87. இனைத்துணைத்து என்பதுஒன்று இல்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.

விருந்தினர்க்கு உணவு படைத்தலின் பயன், இவ்வளவினது என்று அளவிட்டுச் சொல்லுதல் எளிதன்று. விருந்தினர் தகுதியின் அளவே அதன் பயன். 87.

88. பரிந்துஓம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

விருந்தினரைப் பேணி உபசரிக்காதவர்கள் பொருளை வறிதே காத்து, இழந்தோம் என்பர். 88.

89. உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு.

செல்வநிலையில் வறுமை, விருந்து ஓம்பாத அறியாமை, பேதையரிடத்தில் உண்டு. 89.

90. மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

அனிச்சப்பூ, மோந்தால் வாடும். விருந்தினர், முகம் திரிந்து நோக்க வாடுவர். 90.

## 10.இனியவை கூறல்

இல்வாழ்க்கையிலும், சமூக வாழ்க்கையிலும் இணைப்பு தேவை. இணைப்புக்கு உரமிடுவது இனிய சொற்களேயாம். எல்லாம் நன்றாகச் செய்யினும் இனிய சொற்கள் கூறத் தெரியாவிடில் அனைத்தும் பாழ். ஆதலால், இனிய கூறலும் அறமாயிற்று. அதுவும், இல்வாழ்க்கைக்கு இனிய சொற்கூறுதல் தவிர்க்க இயலாத கடமை. விருந்தில் பரிமாறப்பெறும் சுவைமிக்க பண்டங்களைவிட இன்சொல்லே மிகுதியும் பயன்தரும் என்பதாயிற்று.

91. இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

வஞ்சனையில்லாத, மெய்ப்பொருளை அறிந்த சான்றோரின் வாய்ச் சொற்களே இனியவாய்ச் சொற்களாவன. 91.

92. அகன்அமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின்.

மனமுவந்து பொருளைக் கொடுத்தலினும் முகமலர்ந்து இனிய சொற்களை வழங்குவது நல்லது. 92.

93. முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி அகத்தான்ஆம்
இன்சொ லினதே அறம்.

ஒருவரிடம் மலர்ந்த முகத்துடன் இனிதே நோக்கி அகம் மலர்ந்த நிலையில் இனிய சொற்களைச் சொல்லுதல் அறமாகும். 93.

94. துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

யாரிடத்தும் இன்புறுத்தக்கூடிய இன்சொல்லை சொல்லுபவர்களுக்குத் துன்புறுத்தும் வறுமை இல்லை. 94.

95. பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணிஅல்ல மற்றுப் பிற.

அடக்கம் உடைமையும் இனிய சொல் கூறுதலுமே ஒருவனுக்கு அணிகள். மற்றப் பொன்னணிகள் அணிகள் அல்ல. 95.

96. அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.

நன்மையை நாடி இனிய சொற்களைக் கூறின் தீவினை நீங்கும். நல்வினைப் பயன் வளரும். 96.

97. நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல்.

நன்மையைச் செய்வதும் இனிமைப் பண்பிற் சிறந்ததுமாகிய இனிய சொல் நீதியையும் அறத்தையும் விளைவிக்கும். 97.

98. சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும்.

பிறர்க்கு நோய் செய்யாத இனிய சொற்கள் ஒருவருக்கு இருமையும் இன்பம் தரும். 98

99. இன்சொல் இனிதுஈன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது

பிறர் கூறிய இனிய சொல்லால் இன்பம் நுகர்ந்ததை அறிந்தவன், பிறரிடத்தில் வன்சொல்லை வழங்குவது ஏன்? 99.

100. இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

இனிய சொற்கள் எளிதில் சொல்ல வாய்ப்பிருக்கவும் கடுஞ்சொற்களைக் கூறுதல், கையகத்தே கனியிருக்க அதனை நுகராது, அயலிடத்தே உள்ள காயைக் கவர்வது போலாம். 100.

## 11.செய்ந்நன்றி அறிதல்

ஒருவர் செய்த உதவியை மறவாதிருத்தல் செய்ந்நன்றியறிதலாகும். மறவாதிருத்தல் என்பது, அந்த உதவியின் அருமைப்பாட்டினை அறிந்து, அந்த உதவியின் தன்மையினை, பயனைப் பேணி வளர்த்துப் பாதுகாத்துக்கொண்டு வாழ்வதன் மூலம் உதவியவர்களுக்கு மகிழ்ச்சியைத் தருதல் ஆகும். செய்ந்நன்றியறிதல் என்பது நடைமுறையில் உள்ள நன்றி கூறல் ஆகாது.

101. செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.

தான் முன் ஒரு உதவி செய்யாமலிருக்க, மற்றவர் ஒருவர் செய்த உதவிக்கு மண்ணுலகும் விண்ணுலக்குமும் கைம்மாறாகக் கொடுத்தாலும் ஈடு ஆகாது.

முதலிற் செய்த கைம்மாறு கருதியது அல்ல என்பதால் ஈடு ஆகாது. சிலர் செய்யும் உதவி, உதவிபோல நேரிடையாகப் புலப்படாது. ஆயினும் அது பெரிய உதவியேயாம். 101.

102. காலத்தி னால்செய்த நன்றி சிறிதுஎனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

ஒருவனது வாழ்க்கையில் உதவி தேவைப்படும் காலத்தில் செய்த உதவி சிறிதாயினும் அக்காலநிலை நோக்க நில உலகத்தினும் பெரியதாம்.

காலத்தினால் செய்த உதவி - உதவி தேவைப்படும் காலத்தில் செய்தல் அல்லது செய்யப்பெறும் உதவியால் பயன் மிகுதியும் அடையக்கூடிய காலத்தில் என்றும் கூறலாம். அதாவது, இளமையில் கற்பித்தல், மணப்பருவத்தில் மணம் செய்துவைத்தல், வறுமை வந்தடைவதற்கு முன்பே பொருள் செய்யத் துணை செய்தல் என்பன போலவாம். 102.

103. பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது.

நாம் இதைச் செய்தால் அவர் நமக்கு இன்னதைச் செய்வார் என்று எண்ணாமல் செய்த உதவியின் அருமையினை ஆராய்ந்து நோக்கின் அதன் நன்மை கடலினும் பெரியதாம். 103.

104. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்.

தனக்கு ஒருவன் தினை அளவு உதவி செய்யினும் அதனை பனையளவாகக் கருதி கைக்கொள்வர், அதன் பயனை உணர்ந்தவர்கள். ஒரு காலத்தில் ஒருவர் செய்த உதவி பொருளளவில் சிறியதாக இருப்பினும் அவ்வுதவியின் பயன் வளர்ந்து பெரும்பயனைத் தருதல் இயற்கை. இளமையில் கற்பிக்கும் ஆசிரியனே பின் வளரும் கல்விக்கு அடித்தளம் அமைக்கின்றான். வளர்ந்துவரும் தொழிலுக்குரிய மூலதனம் சிறியதாகவே அமையும். 104.

105. உதவி வரைத்தன்று உதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

செய்த உதவியின் பெருமை உதவியின் பொருளளவைப் பொறுத்தன்று. உதவியினைப் பெற்றவரின் மேன்மையளவினதேயாம்.

மிகச்சிறிய உதவியைப் பெரிதெனக் கருதுவது பண்பு என்பது உணர்த்தியது. 105.

106. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு.

துன்பக்காலத்து உதவியாயினார் நட்பை விடாது கொள்க. மாசற்றார் உறவையும் விடாது கொள்க.

மாசற்றார் உறவு, உறவளவிலே உதவும் இயல்பினது என்பதால் இடையீடு இல்லாது பேணுக என்பது கருத்து. 106.

107. எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு.

தனக்குற்ற துன்பத்தினை நீக்கியவருடைய நட்பை, ஏழு பிறப்பிலும் நினைப்பவர் நல்லோர்.

நெடிய காலம் அல்லது வாழ்நாள் முழுதும் நினைப்பர் என்பது குறிப்பு. 107.

108. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.

ஒருவர் செய்த நன்மையை மறப்பது அறமன்று. அவர் செய்த தீமையை அன்றே மறப்பது அறமாகும். 108.

109. கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும்.

தனக்கு முன்பொரு நன்மை செய்தவர், பின் தன்னைக் கொன்றால் ஒத்த தீமை செய்யினும் அவர் செய்த நன்மை ஒன்றை நினைத்த அளவிலேயே அவர் செய்யும் துன்பம் மறந்துபோகும். 109.

110. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

எத்துணைப் பெரிய அறங்களைக் கெடுத்தவர்க்கும் கழுவாய் உண்டு.

ஆயினும் ஒருவர் செய்த நன்றியைக் கெடுத்தவனுக்கு உய்தியே இல்லை. தாம் பொது அறம் செய்யாராயினும் ஒருவர் செய்த பொது அறங்களைக் கெடுப்பவருக்கு உய்தியே இல்லை. 110.

## 12.நடுவு நிலைமை

எல்லார்க்கும் ஒப்ப நடத்தல் நடுவுநிலையாகும். வலிமை யுடையாரிடத்தும், வலிமையில்லாரிடத்தும் ஒரே மாதிரியாக ஒழுகுதல் நடுவுநிலையாகும். நீதி காண்பதில் ஓரஞ்சாராதிருத்தலும் நடுவுநிலையின் பாற்பட்டதேயாகும்.

111. தகுதி எனஒன்று நன்றே பகுதியால்
பாற்பட்டு ஒழுகப் பெறின்.

பகை, உறவு, நட்பு என்னும் பகுதிதோறும் முறை தவறாது ஒழுகுதல் நேர்மையிலும் சிறந்தது.

நேர்மையிலும் சார்பின்றி நடுவுநிலையாக நிற்றல் நன்று. 111.

112. செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து.

நடுவுநிலைமையுடையவனது செல்வம் அழியாது. அவனுடைய வழியினர்க்கும் பாதுகாப்புத் தரும்.

எச்சத்திற்கு - அவன் வழித் தோன்றல்களுக்கு என்பது பொதுவான கருத்து.

ஒருவர் இறந்தபிறகும் அவர் நினைவாக எஞ்சியிருப்பது எச்சம். இங்ஙனம் எஞ்சி நிற்பது வழித்தோன்றல்கள் என்று உறுதியாகக் கூறமுடியாது. ஒருவருடைய மரணத்திற்குப் பிறகு அவருடைய புகழ் எஞ்சி நிற்கும். ஒருவர் நடுவு நிலையுணர்வுடன் செல்வத்தை ஈட்டினால் அதனால் வரும் புகழ் அவருக்குப் பாதுகாப்பாக அமையும் என்று கொள்ளுதலும் பொருந்தும். 112.

113. நன்றே தரினும் நடுவுஇகந்துஆம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்.

நன்மையே தரினும் நடுவுநிலை இழப்பதன் மூலம் வரும் பொருளை அப்போதே கைவிடுக.

நடுவுநிலைமை இழந்து பெறும் பொருள் கூடாது என்பது கருத்து.

"நன்றே தரினும்" என்றதால் நடுவுநிலை இழந்தபொருள் நன்மை தராது என்பது உணர்த்தியது. 113.

செய்து, பின் வைத்த பாரத்தையும் எடைக்கல்லையும் வரையறுக்கும் தராசு போல ஒருபால் சாயாமல் நடுவுநிற்றல் சான்றோர்க்கு அழகாகும்.

**114. தக்கார் தகவிலர் என்பது அவரவர்**
**எச்சத்தால் காணப் படும்.**

நடுவுநிலைப் பண்பால் உயர்ந்தவர், உயர்வு இல்லாதவர் என்பது அவருக்குப் பின் நிற்கும் புகழினால் அறியப்படும்.

எச்சம் - மக்கள் என்று கூறுவர்; தவறில்லையானாலும் முழு நிறைவான பொருள் ஆகாது; மக்கட்பேறு அப்படி வாய்த்து விடுவதில்லை. 114.

**115. கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்**
**கோடாமை சான்றோர்க்கு அணி.**

கெடுதலும் வாழ்தலும் இல்லாதனவல்ல, இயற்கையில் அமைந்தன என்பதை அறிந்து மனத்தின்கண் நடுவுநிலையராய் வாழ்தல் அறிவுடையார்க்கு அழகு.

கேடும் வாழ்வும் சமுதாய நிகழ்வுகளையும் ஆள்வினையையும் சார்ந்தவை. 115.

**116. கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்**
**நடுஒரீஇ அல்ல செயின்.**

ஒருவனுடைய நெஞ்சம் நடுவுநிற்றலை ஒழிந்து, நடுவு நிலையல்லனவற்றைச் செய்ய நினைக்குமானால் ''கெட்டுப் போவேன்'' என்பது அறிந்து நடுவுநிலை பிறழ்தலைக் கைவிடுக.

ஒருவரைக் கெடுக்க பகைவர் வேண்டுவதில்லை. அவர்தம் நடுவுநிலைப் பிறழ்வே போதும் என்பது கருத்து. 116.

**117. கெடுவாக வையாது உலகம் நடுவாக**
**நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.**

நடுவுநிலையாகிய நன்மையினிடத்துத் தங்கி நின்றவனின் வறுமையை வறுமையாகக் கருதார் உயர்ந்தோர். 117.

**118. சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்துஒருபால்**
**கோடாமை சான்றோர்க்கு அணி.**

முன், தான் சமனாக நின்று - இரண்டு தட்டுக்களையும் சமன்

சமன் செய்து :- தன்னைச் சமநிலை செய்து கொள்ளல். பழுதுற்ற தராசு சமநிலை காட்டாது. அதுபோலச் சார்புகளால் குறைப்பட்ட மனமுடையவர்கள் நடுவுநிலை இழப்பர்.

சீர்தூக்கல்:- இருவேறு கருத்துக்களையும் விருப்பு வெறுப்பின்றிச் சமநிலையில் எண்ணி உயர்வாராய்தல்.

கோடுதல் :- கருத்தின் உயர்வு பற்றியதாக இல்லாமல் சார்புகளாலாகிய காரணங்களுக்காக ஒருபால் சாய்தல் கோடுதலாகும்.

துலாக்கோல் :- நடுமுள். 118.

**119. சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா**
**உள்கோட்டம் இன்மை பெறின்.**

நடுவுநிலையாவது சொல்லின்கட்சார்பு இல்லாமல் நிற்பதாகும். இந்த நடுவுநிலைப்பண்பு மனத்தின்கண் சார்பு இல்லாமல் இருந்தாலே கைவரும்.

உட்கோட்டமின்மை பெறின் - மனத்தின் கண் சார்பின்றி இருத்தல் அரிது என்பது கருத்து. 119.

**120. வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவும் தமபோல் செயின்.**

பிறர் பொருளையும் தம் பொருள் போல் பேணி வாணிகம் செய்வோர்க்கு வாணிகம் நன்றாக அமையும்.

அதாவது, கொள்வது மிகையும் கொடுப்பது குறைவும் ஆகாமல் செய்வது வாணிகத்திற்கு ஆக்கம் தரும். 120.

## 13 . அடக்கமுடைமை

பொறி புலன்களை அடக்கநிலையில் பழக்கி இயக்குதல், அதாவது மற்றவர்க்குத் தீங்கு செய்யாநிலையில் இயங்குதல். அடக்கங்களுள் சிறந்தது நாவடக்கம்; அதாவது பேச்சில் கவனமாக இருத்தல். யார் மாட்டும் எப்போதும் யாதானும் ஒரு தீப்பொருள் உண்டாக்கக்கூடிய சொற்களைச் சொல்லாதிருத்தல். எதிர் கொண்டு அழைத்தல், இருக்க வைத்த பிறகு இருத்தல், அதுவும் ''இரு'' வெனக் கூறிய பிறகு இருத்தல் முதலியன அடக்கமுடைமையின் பாற்படும்.

**121. அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை**
**ஆரிருள் உய்த்து விடும்.**

ஒருவனை அடக்கமாகிய குணம் அமரர்கள் உலகத்துள் வைக்கும். அடங்காமை நரகத்துள் செலுத்திவிடும்.

சொர்க்கம், நரகம் - இன்ப துன்பங்களுக்கு அடக்கமும் அடங்காமையும் முறையே காரணம். அடக்கமாவது பொறி புலன்களைத் தம் வழியில் செல்ல விடாது நன்னெறிக்கண் செலுத்தி வழிநடத்தும் குணமாகும். 121.

122. காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங்கு இல்லை உயிர்க்கு.

உயிர்களுக்கு அடக்கத்தின் மிக்க செல்வம் இல்லை. ஆதலால் அடக்கத்தை உறுதிப்பொருளாகக் கொள்க.

பொருள் ஈட்டவும், ஈட்டிய பொருளைப் பேணிப் பாதுகாக்கவும் அடக்கம் துணை செய்யும். 122.

123. செறிவுஅறிந்து சீர்மை பயக்கும் அறிவுஅறிந்து
ஆற்றின் அடங்கப் பெறின்.

அடங்கி நடத்தல் அறிவின் பயன் என்றறிந்து அடங்குதலை நன்னெறியாக ஏற்று ஒருவன் அடக்கத்துடன் வாழ்வானாகில் அவனது அடக்கம் நல்லோரால் அறியப்பெற்று அவனுக்குச் செல்வத்தைக் கொடுக்கும். 123.

124. நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

தம் நிலையில் மாறுபடாது அடக்கத்துடன் வாழ்பவனது புகழ் உயர் மலையினும் பெரியதாகும்.

திரியாது அடங்கல் - அறிவு, அன்பு இவற்றின் வாயில்களாக விளங்கும் பொறிகளை புலன்களை அந்த நோக்கத்திற்கேற்றவாறு பழக்குதல், நிறுத்துதல் சிறப்பாகும். 124.

125. எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து.

பெருமிதமின்றி அடங்குதல், எல்லோருக்கும் நல்லது. அதிலும் செல்வமுடையோருக்கு மேலும் செல்வம் போல ஆகும்.

செல்வம் . செருக்கினைத் தரும். அதனால் அடக்கமுடைமை நல்லது என்கிறார். 125.

126. ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து.

ஆமை போல ஒருவன் ஒருபிறப்பில் ஐம்பொறிகளையும் அடக்க வல்லவனாயின் அவனுக்கு ஏழு பிறப்புக்களும் மேம்பாடுடையதாக அமையும்.

தனது நலத்திற்குத் துணைசெய்யாத துன்பத்தை விளைவிக்கும் சூழ்நிலையில் அனைத்துப் பொறிகளையும் உள்ளிழுத்து அடக்கிக் கொண்டு ஆமை தப்பித்துக் கொள்வதைப் போல், தீயநெறிகளிலிருந்து தமது பொறிகளையும் மீட்டுப் பாதுகாத்துக் கொள்ளுதல் மூலம் எழுமையும் மேம்பாடு அடையலாம். 126.

127. யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

எந்த ஒரு பொறியை அல்லது புலனைக் காக்கத் தவறினாலும் நாக்கு ஒன்றை மட்டுமாவது காத்துக் கொள்க. அங்ஙனம் நாக்கைக் காக்கத் தவறினால் சொற் குற்றப்பட்டுத் துன்புறுவர். 127.

128. ஒன்றானும் தீச்சொல் பொருள்பயன் உண்டாயின்
நன்றுஆகா தாகி விடும்.

ஒருவன் சொல்லும் சொல்லில் ஒரே ஒரு பொல்லாங்கு உண்டாயினும் அறமாகாதாகி விடும். 128.

129. தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு.

தீயினால் சுட்டபுண் வடுக்காணப்பட்டாலும் உள் ஆறும். ஆனால் நாவினால் சுட்ட வசையாகிய வடு எந்நாளும் ஆறாது. 129.

130. கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.

மனத்தில் கோபம் தோன்றாமல் காத்து கற்க வேண்டியன எல்லாம் கற்று அடங்க வல்லவனுடைய நன்மையை அதுவரும் வழிபார்த்து அறக்கடவுள் நின்று கொண்டிருக்கும் . 130.

## 14. ஒழுக்கமுடைமை

தனக்கும், தனது உடலுக்கும், தன்னைச் சார்ந்தும், சூழ்ந்தும் வாழ்வாருக்கும் யாதொரு தீங்கும் நிகழாதவாறு ஒழுகுதல் ஒழுக்கமாகும். அழுக்காறு , அவா, வெகுளி, இன்னா செய்தல், பிறர் மனை நயத்தல்,

வரைவின்மகளிரைச் சார்ந்து ஒழுகுதல், கள்ளுண்ணல், புகை பிடித்தல், கவறாடல் முதலியன தனக்கும், தன்னுயிருக்கும் தீங்கு செய்தலாகிய ஒழுக்கக் கேடுகள். சலத்தால் பொருள் செய்தல் சார்ந்தார்க்குச் செய்யும் தீங்காகும். ஆதலால், அது சமூக ஒழுக்கக் கேடாகும். அடக்கமுடைமையைச் சார்ந்து ஒழுக்கமுடைமை இருந்தால்தான் அடக்கமுடைமை நிலைபெறும்; அடக்கமுடைமையைச் சார்ந்த ஒழுகலாறு ஒழுக்கமுடைமை. எல்லா ஒழுக்கங்களும் மனித நேயம் என்ற பொது ஒழுக்கத்தினை மேற்கொள்ளுவதன் மூலம் எய்த இயலும்.

**131. ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்.**

ஒழுக்கம் எல்லாருக்கும் சிறப்பைத் தருவது. ஆதலால் அந்த ஒழுக்கம் உயிரிலும் சிறப்புடையதாகப் பேணிக்காக்கப்படும்.

''ஒழுக்கம்'' என்றால் நல்லொழுக்கத்தையே குறிக்கும்.

உயிர், உடம்பொடு கூடி வாழ்தல் சிறப்புக்களை அடையவேயாம். சிறப்புக்கள் பெறாத வாழ்க்கை இழிவானது; இரங்கத்தக்கது; அழிவை விடக்கொடியது. ஆதலால், ''உயிரினும் ஓம்பப்படும்'' என்றார். 131.

**132. பரிந்துஓம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்துஓம்பித்**
**தேரினும் அஃதே துணை.**

ஒழுக்கத்தை எவ்வகையிலும் கெடாதவாறு வருந்தியும் பேணிக் காக்க. பலவகையறங்களை ஆராய்ந்து அவற்றுள் இம்மை, மறுமை இரண்டுக்கும் துணையாவது யாதென்று தேர்ந்தாலும் இருமைக்கும் ஒழுக்கமே துணையாக அமையும்.

ஒழுக்கம் இம்மையில் ஆக்கத்தையும் புகழையும் தரும்; மறுமையில் வீடு பேற்றினைத் தரும். 132.

**133. ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்**
**இழிந்த பிறப்பாய் விடும்.**

நல்லொழுக்கமுடைமையே உயர்குலத் தன்மையாம். தீயொழுக்கம் தாழ்ந்த குலமாகி விடும்.

நல்லொழுக்கமுடைமையே நாட்டின் உறுப்பாகிய குடிமகனுக்குரிய இலக்கணம்; உரிமை. தீய ஒழுக்கம் உடையோர், தம் குடியுரிமையை இழக்க நேரிட்டு நாடற்ற அனாதைகளாவர்.

குடிமை - CITIZENSHIP குடிமைக்குரிய நல்லொழுக்கம், பரந்த நாட்டுச் சமுதாயத்துடன் இணக்கமாக வாழ்தல். 133.

134. மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

பார்ப்பனன், கற்ற வேதத்தை மறந்தாலும் திரும்பக் கற்றுக் கொள்ளமுடியும். ஆனால், பார்ப்பனப் பிறப்புரிமைக்குரிய ஒழுக்கம் குன்றக் கெடும்.

பிறப்பு:- இங்கு மானிடப் பிறப்பைக் குறிப்பதன்று. பார்ப்பனருக்கு "இருபிறப்பாளர்" என்று ஒரு பெயர் உண்டு. அதாவது முப்புரிநூல் அணிந்து பார்ப்பன ஒழுக்கத்தை மேற்கொள்ளும் இரண்டாவது பிறப்பாகும்.

பிறப்பொழுக்கமாவது:- ஓதல், ஓதுவித்தல் தொழிலில் காலூன்றி நிற்றல்; ஓதுதலுக்குரிய ஒழுக்க நெறிகளில் பயிலுதல்.

பார்ப்பனர், வேதத்தை மறந்தாலும் திரும்பக் கற்றுக்கொள்ளலாம். ஆனால், தம்மை உயர்த்திக் காட்டும் குலச் சிறப்பு, தமிழ ஒழுக்கம் குன்றக்கெடும் என்பார் பாவாணர். 134.

135. அழுக்காறு உடையான்கண் ஆக்கம்போன்று இல்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு.

பொறாமை உள்ளவனிடத்தில் செல்வம் இல்லாதது போல, ஒழுக்கம் இல்லாதவனிடத்து உயர்வு இல்லை. 135.

136. ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.

ஒழுக்கக் கேட்டால் உண்டாகும் கேட்டினை அறிந்து ஒழுக்கத்தில் சுருங்கார் அறிவுடையார். 136.

137. ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

ஒழுக்கத்தினால் எல்லாரும் உயர்வடைவர். ஒழுக்கத்திலிருந்து தவறுவதால் தமக்கு உரியதல்லாத பழியையும் அடைவர்.

ஒருவர் ஒழுக்கத் தவறுடையவராக இருப்பின் அவர் செய்யாத குற்றங்களுக்கும் கூட, அவரைப் பொறுப்பாக்குவது உலக இயல்பு. 137.

138. நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்.

ஒருவனுக்கு நல்லொழுக்கம் நன்மைக்குக் காரணமாய் அமையும். தீயொழுக்கம் எப்பொழுதும் துன்பத்தையே தரும். 138.

139. ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல்.

மறந்தும் தீய சொற்களைத் தம் வாயால் சொல்லுதல் ஒழுக்கமுடைய உயர்ந்தோர்க்கு இயலாது. 139.

140. உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.

உலக மக்கட் சமுதாயத்தோடு பொருந்த ஒழுகுதலைக் கல்லாதார், பல நூல்களைக் கற்றவரேனும் அறிவில்லாதவரே! 140.

## 15. பிறனில் விழையாமை

ஒழுக்கமுடைமையின் விரிவில் ஒன்று பிறனில் விழையாமை. பிறரின் மனைவியை - உரிமையை விரும்புதல் அறமன்று. அதனை அடைதலும் எளிதன்று. ஒரோவழி அடைந்தாலும் பயனில்லை. துன்பமே மிகுதி. பிறனில் விழைதல் தனி மனித அளவிலும் சரி, சமூக அளவிலும் சரி கேடு பயப்பதேயாகும்.

141. பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல்.

பிறன் மனைவியை விரும்பி ஒழுகும் மடத்தனம், நிலவுலகில் அறம், பொருள் நூல்களைக் கற்றறிந்தோரிடம் இல்லை. 141.

142. அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரின் பேதையார் இல்.

அறத்தினைச் செய்யாது வாழும் மாந்தரில் கடைசியில் நிற்போர், பிறன் மனைவியை விரும்பி, அவள் வாழும் வீட்டின் பின் வாயிலில் காத்து நிற்கும் பேதையாவர். 142.

143. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்துஒழுகு வார்.

தம்மை நம்பியவர் வீட்டில் அவர் மனைவியிடம் தீச்செயலைச் செய்து ஒழுகுபவர் இறந்தவரேயாம். இது உறுதி.

வாழ்க்கையின் பயனாகிய அறம், பொருள், இன்பம் அடையாமையினால் செத்தார் என்றார்.

நம்பிய இடத்தில் தீச்செயல் செய்வோரின் செயல் அறியப்பட்டால் பாதிக்கப்பட்டவர் கொல்வர் என்ற உறுதியால் செத்தார் என்றார். 143.

144. எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்.

எத்துணைப் பெரியோராக இருந்து என்ன, தாம் செய்யும் தீமையைத் தினையளவும் எண்ணிப் பாராது பிறன் மனைவியை விரும்பி அவன் இல்லத்துக்குள் புகுதல்? இத்தகையோருக்குப் பெருமை என்ன பயனைத் தரும்? 144.

145. எளிதுஎன இல்லிறப்பான் எய்தும்எஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

எளிதாக அமைந்ததெனப் பிறர் மனைவியின்கண் தீச்செயல் செய்தொழுகுபவன் என்றும் மறையாத பழியை அடைவான். 145.

146. பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்.

பிறன்மனைவியின்கண் நெறிகடந்து ஒழுகுபவரிடமிருந்து பகை, பாவம், அச்சம், பழி ஆகிய நான்கும் நீங்கா. 146.

147. அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

அறநெறியில் இல்வாழ்வான் என்பவன், பிறன் மனைவியை விரும்பி ஒழுகாதவன்.

பிறன் மனைவியை விரும்பாத நிலையிலேயே இல்லறம் சிறப்புறுகிறது. 147.

148. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு.

பிறன் மனைவியை விரும்பி ஒழுகாத ஒழுக்கம், நிறைந்த பேராண்மையுடைய சான்றோர்க்கு அறம். அறம் மட்டுமன்று; ஒழுக்கமும் கூட. 148.

149. நலக்குஉரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்
பிறர்க்குரியாள் தோள்தோயா தார்.

இந்நிலவுலகில் எல்லா நன்மைகளும் பெறுதற்குரியர் யார்? எவர்? எனின், பிறன் மனைவியை விரும்பி அவள் தோளைத் தழுவாதவரே யாம். 149.

150. அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

ஒருவன் அறநெறிகளை மேற்கொள்ளாது தீவினைகள் பலவற்றைச் செய்து ஒழுகினும், பிறன் மனைவியை விரும்பி ஒழுகாதிருத்தல் நல்லது.

அதாவது, பிறன்மனை நயந்து ஒழுகாமை, பிற தீவினைகளின் தாக்குதலைத் தவிர்க்கும் என்பது கருத்து. "செயினும்", செய்யற்க என்ற குறிப்புடையது. 150.

## 16. பொறையுடைமை

தனக்குப் பிறர் செய்த எல்லாப் பிழைகளையும் மறத்தலும், பொறுத்தாற்றிக் கொள்ளுதலும், பிழை செய்தார்க்கும் ஒல்லும் வகையால் நன்மை செய்தலும் ஆகியனவற்றை உணர்த்துவது இந்த அதிகாரம்.

ஒழுக்கமுடைமையின்கண் வஞ்சினம் கொள்ளாமையும் சாரும். ஒருவர் ஒழுக்கமுடையார் என்பதை உறுதிப்படுத்துவது பொறையுடைமைப் பண்பேயாகும்.

151. அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

தன்னை அகழ்ந்து புண்படுத்துவோரை வீழ்த்தாமல் வளர்த்துத் தாங்கும் நிலம் போலத் தம்மை இகழ்ந்து பேசுவோரைப் பொறுத்தல் தலையாய அறம்.

நிலம் கொத்தி, வெட்டி செய்யும் துன்ப வாயில்களையே தனது தர உயர்வுக்குப் பயன்படுத்திக் கொள்கிறது. அந்நிலத்தின் வளத்தைக் கண்டு, கொத்தி - வெட்டியவன் நிலத்திற்கு உரிமை கொண்டாடுவான். அதுபோலவே ஒருவனின் தாழ்ந்த நிலை கண்டு இகழ்ச்சி செய்பவர் அவன் வளர்ந்த பிறகு உறவு கொண்டாடுவர் என்பது கருத்து. அறம் நன்மையே செய்வது. ஒருபோதும் தீமை செய்யாது. தம்மை இகழ்ந்து செய்யும் செயல்களைத் தாங்கி, அந்த இகழ்வுகளின் வாயிலாகவே நல்லறிவு பெற்று உழைப்பவர் வளர்வர்; வாழ்வர். 151.

152. பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று.

தனக்குத் துன்பம் செய்தாரை ஒறுத்தலுக்குரிய ஆற்றல் இருந்தாலும் அவர் செய்த துன்பத்தைப் பொறுத்திடுக. அங்ஙனம் பொறுத்தலோடன்றி அந்தத் துன்பத்தை மனங்கொள்ளாது மறந்திடுதல் பொறுத்தலினும் நன்று. பொறுத்தல் ஆற்றாமையினாலும் நிகழும்; ஆதலால் சிறப்பாகாது. மறத்தல் அங்ஙனமன்று.

அதோடு பொறுத்தல் வழி மனத்தில் அந்தத் துன்பம் தங்கியிருந்து வாய்ப்புழி வெளிப்பட வழியுண்டு. மறத்தல் அங்ஙனமன்று. மேலும் மறப்புழி உறவு ஏற்பட்டு வளரவும் வாய்ப்புண்டு. அதனால், மறத்தல் நன்று என்றார். 152.

153. இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

வறுமையுள் வறுமை- விருந்தினரை ஏற்காது நீக்குதல். அதுபோல, வலிமையுள் வலிமை அறியாமையால் துன்பம் செய்தாரைப் பொறுத்தல்.

விருந்தை நீக்குதல் பொருளுடைமைக்கு அழகன்று. அதுபோல அறியாதவர் செய்யும் தீமையைப் பொறுக்காது ஒறுத்தல் வலிமைக்கு அழகன்று என்பது கருத்து. 153.

154. நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும்.

ஒருவன் தன்னிடம் சால்பு நீங்காது தங்கிச் சிறப்புறுத்த விரும்புவானாயின் அவன் பொறையுடைமைப் பண்பைப் போற்றிக் காத்து ஒழுகவேண்டும். 154.

155. ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து.

பிறன் ஒருவன் தீங்கு செய்த வழி, அதனைப் பொறுத்தாற்றாது, தீங்கு செய்தவனை ஒறுத்தாரை, அறிவுடையோர் மனத்துட் கொள்ளார். அத்தீமையினைப் பொறுத்தாரைப் பொன் போல் போற்றி நினைவிற் கொள்வர். 155.

156. ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

தனக்குத் தீங்கு செய்தவனை ஒறுத்தலால் உண்டாவது ஒரு நாளை இன்பமே; அத் தீமையைப் பொறுத்தார்க்கு உலகம் உள்ளளவும் புகழ் உண்டு.

ஒரு நாளை இன்பமாவது நினைத்ததை முடித்தோம் என்று கருதும் அளவில் தோன்றும் இன்பமாகும். 156.

157. திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று.

செய்யத் தகாத கொடிய செயல்களைத் தனக்குப் பிறர் செய்தாராயினும் அத்துன்பத்திற்குத் தான் நொந்து, அறம் அல்லாத செயல்களைச் செய்யாதிருத்தல் நன்று. 157.

158. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்.

மனச்செருக்கால் தனக்குத் தீயவற்றைச் செய்தாரைத் தன்னுடைய பொறையா லுயர்ந்த தகுதியால் வென்றுவிடுக. 158.

159. துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர்.

துறந்தாரினும் தூய்மை உடையவர் நெறியைக் கடந்தவர்களின் இன்னாத சொற்களைப் பொறுத்துக் கொள்பவர்.

துறந்தாரிலும் சிலர் இகழ்ச்சியினைப் பொறுக்க மாட்டாது இன்னாத செய்த புராணவழிக் கருத்தை மறுத்தது. 159.

160. உண்ணாது நோற்பார் பெரியார் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின்.

உண்ணாது தவம்செய்யும் பெரியர் பிறர் சொல்லும் கடுஞ்சொற்களைப் பொறுப்பார்க்குப் பின்னே வைத்து எண்ணப்படுவர். 160.

## 17. அழுக்காறாமை

பொறையுடைமைக்கு நேர் எதிர்ப் பண்பு, பொறுக்கமுடியாமை. அதாவது, ஒருவர் செல்வம், பெருமிதம் முதலியன உடையராதலைத் தாங்கிக் கொள்ள முடியாமை அழுக்காறாகும். ஒழுக்கக் கேடுகளுக்கெல்லாம் தலைமையானது அழுக்காறேயாம். அழுக்காறுடையார் ஒருபொழுதும் உயர்தல் அரிது. அழுக்காறாமை ஆக்கத்தையும் தரும்; மனிதக் கூட்டத்தையும் தரும்.

161. ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு.

ஒருவன் தன் நெஞ்சத்தில் பொறாமை இல்லாத தன்மையை ஒழுக்க நெறியாகக் கொள்க.

தீமை செய்யாமை மட்டும் ஒழுக்கமன்று. பிறர் நலம் கண்டு பொறாது எண்ணுதல் படிமுறையில் வளர்ந்து தீமை செய்யக் காரணமாக அமையும் என்பதறிக. 161.

162. விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லை யார்மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்.

யாரிடத்தும் பொறாமை என்னும் அழுக்காறில்லாது ஒழுகும் இயல்பை ஒருவன் பெறுவானாயின், மற்று அவன் பெறக்கூடிய பேறுகள் எதுவும் சிறந்ததில்லை இதைப்போன்று.

பிறர்நலன் காணும்பொழுது அழுக்காறின்மையால் மற்றவர் பகை இல்லை. அறநெறியும் பிறழவில்லை. மற்றவர் நலம் கண்டபொழுது அழுக்காறு கொள்ளாதிருப்பதால் அதே நிலைகளைப் பெறும் ஆர்வமும் முயற்சியும் தோன்றும் என்பது உண்மை. 162.

163. அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறன்ஆக்கம்
பேணாது அழுக்கறுப் பான்.

இம்மைக்கும் மறுமைக்கும் அறமும் செல்வமும் வேண்டாம் என்று சொல்பவன் பிறன் செல்வம் கண்டபொழுது மகிழாது பொறாமைப்படுபவன்.

மற்றவன் பெற்ற செல்வத்தைக் கண்டபொழுது அதற்காக மகிழ்ந்து, செல்வத்தைப் பெற்றவன் அச்செல்வத்தை இழந்து விடாமல் தம்மாலியன்ற பாதுகாப்பும் செய்தலே சிறந்த ஒழுகலாறு. அங்ஙனம் செய்யாதவர்கள் அழுக்காறுடையயவர்களேயாம். அழுக்காறு அறநெறியில் செலுத்தாது என்பதால் "அறனாக்கம் வேண்டாதார்" என்றார். 163.

164. அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து.

அறிவுடையோர் பொறாமை கொண்டு அறனல்லாதனவற்றைச் செய்யார், அங்ஙனம் அறமல்லாதன செய்வதால் இருமையிலும் கேடு வருவது அறிந்து.

தீமை செய்தலாவது, ஒருவர் கல்வி, செல்வம், ஆற்றல், அதிகாரம் ஆகியவைகளைப் பெற்று விளங்கினால் அவ்வாக்கத்திற்கும்

உடைமைகளுக்கும் குற்றங்கற்பித்தலும் சொல்லுதலும் செய்தல். இங்ஙனம் செய்தலின் பகை வளர்தலாலும், தன்னாக்கத்திற்கு முயலக் காலம் இல்லாது போதலாலும், துன்பம் வரும். 164.

165. அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடுஈன் பது.

மனத்தில் அழுக்காறுடையார்க்கு கேட்டினைச் செய்ய அழுக்காறே போதும், பகைவர் வேண்டியதில்லை.

பொறாமைக்காரனால் பிறருக்குத் தீங்கு செய்யும் ஆற்றல் இல்லாமல் போகலாம். அல்லது அச்சத்தால் தீங்கு செய்யாமல் இருக்கலாம். ஆனாலும் அப்பொறாமை, தன்னையுடையானுக்குத் தீமை செய்தல் இயற்கையின் நியதி . 165.

166. கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.

ஒருவன் பிறருக்குக் கொடுப்பதைப் பொறாமையால் தடுப்பவனுடைய சுற்றம் உடுப்பதூஉம், உண்பதூஉமின்றிக் கெடும்.

தேவைப்படுபவர்க்குத் தாம் உதவி செய்ய வேண்டியிருக்கத் தாம் உதவி செய்யாததோடன்றி மற்றவர் வழங்கும்பொழுதும் பொறாமையின் காரணமாகத் தடுத்தல் கொடுமையிலும் கொடுமை. இக்கொடுமையால் வழங்குவானின் அறவுணர்வு தடுக்கப்படுகின்றது. வறியவனுக்கு உதவி கிடைக்காமையால் அவனுடைய வயிற்றெரிச்சலும் சேர்கிறது.

ஒருவனுடைய ஒழுகலாற்றுக்கு அவன் வாழும் சுற்றமும் சமுதாயத்தின் சூழ்நிலைகளும் காரணம் என்பதால் ''சுற்றம் உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றிக் கெடும்'' என்றார். 166.

167. அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.

பிறராக்கம் கண்டவிடத்தில் பொறாமை கொள்பவனைக் கண்டு திருமகள் பொறாது தன்னுடைய அக்கையாகிய மூதேவிக்குக் காட்டிவிடுவாள்.

அழுக்காறுடையார் பிறர் செல்வத்தை இழக்கச் செய்யும் முயற்சியிலேயே ஈடுபடுவர். தாம் செல்வத்தைப் பெறுதலுக்குரிய முயற்சிகளில் ஈடுபட மாட்டார்கள். ஆதலால் வறுமையில் ஆழ்வர். 167.

168. அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்.

பொறாமை என்று சொல்லப்படும் பாவி தன்னையுடையவனை இம்மைக்கண் செல்வம் கொடுத்து, மறுமைக்கண் நரகத்தில் புகுத்தி விடுவான்.

இந்தியநாடு எல்லாவளங்களும் பெற்றிருந்தும் தகுந்த முயற்சிகள் இருந்தும் முன்னேறாததற்குக் காரணம் இந்த நாட்டில் ''அழுக்காற்றுப் பாவி'' நடமாட்டம் இருப்பதால்தான் இந்தப் பாவி துறவிகளையும் பிடித்து ஆட்டுவது வியப்பிற்குரியது . 168.

169. அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.

பொறாமையுடையவனுடைய செல்வமும் செம்மை நலமுடையானுடைய கேடும் ஆராய்தலுக்குரியன.

அறநூற்கொள்கைக்கு முரணான சமூக அமைப்பு, இயற்கை என்று கொள்ளத்தக்கதன்று. ஆராய்ந்து பார்க்க வேண்டிய ஒன்று. அரசின்முறை பிறழ்வாலும் இம்மாறுபாடுகள் நிகழலாம் என்பது கருத்து. அரசியல் பிழையும் இல்லையென்று துணிந்த பிறகே பழவினை என்ற முடிவுக்கு வரலாம். 169.

170. அழுக்காற்று அகன்றாரும் இல்லைஅஃது இல்லார்
பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல்

பொறாமைப்பட்டுப் பெரியவராயினாரும் இல்லை. பொறாமை யின்மையால் பேராக்கத்தை இழந்தவர்களுமில்லை. 170.

## 18. வெஃகாமை

வெஃகாமை என்பது பிறர் பொருளுக்கு ஆசைப்படாதிருப்பதாகும். பிறர் பொருள் என்பது ஒருவர் உழைப்பில் உருவான பொருளில் அவருக்குரிய நியாயமான கூலியைக் குறிக்கும். குறைந்த கூலி தருதலும் வெஃகல் குற்றத்தின் பாற்படும். 171.

171. நடுவுஇன்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்.

ஒருவர் உழைத்து ஈட்டிய பொருளை ஒருவன் நடுநிலையின்றி, ஆசைப்படுவானாயின் அவனுடைய குடி கேடுற்றுப் பல குற்றங்களையும் தரும்.

நன்பொருள் : உழைப்பின் வழி வந்த பொருள். 171.

172. படுபயன் வெஃகி பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.

நடுநிலையின்றி நடக்க அஞ்சி நாணுபவர்கள் பிறர் பொருளால் வரும் நன்மையைக் கருதிப் பழிக்கத் தக்க செயல்களைச் செய்யார். 172.

173. சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

சிறுபொழுது இன்பத்தை விரும்பிப் பிறர் பொருளுக்கு ஆசைப்பட மாட்டார்கள், சிறந்த இன்பத்தை வேண்டுபவர்கள்.

சிற்றின்பம் என்பதை இம்மை இன்பம் என்றோ, காதலின்பம் என்றோ கூறுவது தமிழ் மரபன்று. 173.

174. இலம்என்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

ஐம்புலன்களை வென்று குற்றமற்றவராக விளங்குபவர், வறுமையைக் கருதிப் பிறர் பொருளை விரும்ப மாட்டார். 174.

175. அஃகி அகன்ற அறிவுஎன்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

பிறர் பொருளுக்கு ஆசைப்பட்டு, அதன் காரணமாக எல்லாருக்கும் அற்பச் செயல்களைச் செய்பவர்கள் நுட்பமுடைய விரிவான அறிவைப் பெற்றிருந்தும் என்ன பயன் ?

நுட்பம் : உணர்வு. அகன்ற : பொருளறிவு. 175.

176. அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

அருளை விரும்பி அதனை அடைதற்குரிய நெறியில் நின்றொழுகுபவர்கள், பிறர் பொருளுக்கு ஆசைப்பட்டுக் கைப்பற்ற நினைத்துத் திட்டமிடும் அளவிலேயே கெட்டுப் போவர். 176.

177. வேண்டற்க வெஃகிஆம் ஆக்கம் விளைவயின்
மாண்டற்கு அரிதாம் பயன்.

பிறர் பொருளை விரும்பிக் கவர்தலால் வரும் ஆக்கத்தை விரும்ப வேண்டாம். அந்த ஆக்கத்தின் விளைவு நன்றாக அமையாது.

பிறர் பொருளைக் கவர்தலால் வரும் ஆக்கம் இன்பம் தராது; துன்பம் தரும். களவு அகப்பட்டு விடுமோ என்ற அச்சத்தின் காரணமாக இன்ப நுகர்ச்சி தடைப்படும். அகப்பட்டுழி துன்பம். 177.

178. அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

தன் செல்வம் குறையாமலிருக்க வழி யாதெனில், பிறர்க்குத் தேவையான கைப்பொருளைத் தாம் விரும்பாது ஒழுகுதலாகும். பிறன் பொருளை விரும்பிக் காத்துக் கிடப்பதால், தாம் ஈட்டுதல் இல்லாமல் போகும். அதனால் செல்வம் குன்றும்.

179. அறன்அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந்து ஆங்கே திரு.

பிறர் பொருளை விரும்பாதிருத்தல் அறம் என்ற தெளிந்து விரும்பாதொழுகும் அறிஞரிடத்தில், அவர் தம் திறமைகளின் துறைதோறும் திருமகள் சென்றடைவாள்.

உழைப்பு, தவறாது செல்வத்தைத் தரும். 179.

180. இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்
வேண்டாமை என்னுஞ் செருக்கு.

பிறர் பொருளை விரும்பிக் கவர எண்ணுதலின் எதிர் விளைவு சாவாக அமையும். பிறர் பொருளை வேண்டாம் என்று பெருமிதத்தோடு வாழ்தல் வெற்றிகளைத் தரும். 180.

## 19. புறங்கூறாமை

புறங்கூறாமையாவது ஒருவர் இல்லாத இடத்தில் அவர்மீது குற்றங்குறைகளைப் பிறரிடம் கூறாமை.

ஒருவருடைய குற்றம் யாரிடம் சொல்லப்பெறுகிறதோ, அவர் குற்றமுடையாரைத் திருத்தும் தகுதியும் உறவுமுடையோராயிருந்தால் சொல்லுதலில் தவறில்லை என்பதும் அறிக.

181. அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது.

ஒருவன் அறத்தினை எடுத்துக்கூறானாயினும் நல்லதல்லாதன செய்வானாயினும் அவன் புறங்கூற மாட்டான், என்று சொல்லப்படுதல் இனியது.

அறங்கூறாமையால் - நல்லது அல்லாதன செய்தலால் விளையும் தீமையைவிட புறங்கூறலால் விளையக்கூடிய தீமை அளவில் கூடுதல் என்பதை அறிக. 181.

182. அறன்அழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறன்அழீஇப் பொய்த்து நகை.

அறத்தினை அழித்து நல்லதல்லாதன செய்தலினும் தீயது, ஒருவனைக் காண்புழி நகைமுகம் காட்டி உவப்புடன் பேசி அவன் இல்லாத போது குற்றங்குறைகளைக் கூறல். 182.

183. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும்.

ஒருவரைக் காணாதவிடத்துப் பழிசொல்லியும் கண்டவிடத்து இனியவனாகப் பேசியும் பொய்ம்மையாக வாழ்வதை விட புறங்கூறுதலையும் பொய்ம்மையையும் தவிர்த்துச் சாதல் அறங்கூறும் பயனை இம்மையிலும் தரும்; மறுமையிலும் தரும்.

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்பவர் யாரிடத்தும் உண்மையாக நடந்து கொள்ள மாட்டார்; ஆதலின் வாழ்க்கை அமைய இயலாது; வாழ்க்கை அழியும் என்பது கருத்து.

புறங்கூறுதல் பலரிடம் பகை உணர்வைத்தான் தோற்றுவிக்கும். அதனால், சமுதாயமே சீரழியும். ஆதலால் புறங்கூறல் தீமையாயிற்று. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தல் பழக்கமாகி விட்டால் அவர் திருந்த வழி சாதலே என்பதும் உணர்த்தியவாறு. 183.

184. கண்நின்று கண்அறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல்.

ஒருவன் எதிரேநின்று, கண்ணோட்டமின்றிச் சுடுசொற்களைக் கூறினாலும் கூறுக. அவன் இல்லாத இடத்தில் அவனைப் பற்றிய குற்றங்களைக் கூறாதொழிக.

புறங்கூறலின் பின் விளைவு, துன்பமாக அமையும் என்பது கருத்து.

பின்னோக்காச் சொல் - நேற்று முன்தினம் பழி சுமத்துபவரிடம் அன்பொழுகப் பேசிய சொற்களை நினையாது கூறல்.

புறங்கூறல் மூலம் நட்பு கெடுதலால், பின் முகம்நோக்கி வாழ முடியாமை வரும் என்பதும் கருத்து. 184.

185. அறம்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறம்சொல்லும்
புன்மையால் காணப் படும்.

ஒருவன் அறம் சொல்லும் நெஞ்சுடையானல்லன் என்பதை அவனுடைய புறஞ்சொல்லும் புன்மையினாலே அறியலாம்.

புறங்கூறுபவர் அறத்திற்காகக் கூறுவதாகக் கூறுவர். அவ் அறத்தினை உடையவர். அவர் முன் சொல்லத் தடை என்ன? அங்ஙனம் நேரிற் கூறாது, புறத்தே கூறுவதால் அறம் நோக்கமன்று என்பது தெளிவு. 185.

186. பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்
திறன்தெரிந்து கூறப் படும்.

ஒருவன் இல்லாதவிடத்து அவன் பழியைக் கூறுவானுடைய பழிக்கத்தக்க செயல்களையும் கேட்போர் அறிந்து கூறுவர். 186.

187. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்.

மகிழுமாறு இனிய சொற்களைச் சொல்லி நட்பினைப் பெற்று வாழும் நன்மையைத் தெரிந்து அறியாதவர்கள்; பழகும் இருவரிடையிற் புறங்கூறுதல் மூலம் பகை உண்டாக்கிப் பிரித்து விடுவார்கள்.

ஆதலால், தனது நண்பனைப்பற்றித் தொடர்பேதும் இல்லாதவர்கள் வந்து தன்னிடம் சொல்பவை புறங்கூறல் என்று உணர்த்தியவாறு.187.

188. துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு.

தம்மோடு சேர்ந்து கலந்து வாழ்பவர் குற்றத்தையும் தூற்றும் இயல்புடையவர்கள் தமது பகைவர் மாட்டு எங்ஙனம் நடந்துகொள்வார்கள்.

புறங்கூறுபவர் தமது பகைவர் மாட்டு மிகவும் கொடுமையுடையவராக நடந்து கொள்வர் என்பது கருத்து. 188.

189. அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை.

ஒருவரைக் காணாதவிடத்து அவரைப்பற்றிப் பழிப்புரைகளைக் கூறித் திரிவாரை இந்நிலவுலகம் அறம் கருதிச் சுமக்கிறதோ? சுமத்தல்கூடாது என்பது கருத்து. 189.

190. ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுஉண்டோ மன்னும் உயிர்க்கு.

புறம்கூறுபவர், அயலார் குற்றமறிந்து சொல்வதுபோலத் தம்முடைய குற்றங்களையும் (புறங்கூறல் உள்பட) கண்டு, திருந்தி ஒழுகுவாராயின் உயிர்களுக்குத் தீங்குண்டோ? 190.

## 20.பயனில சொல்லாமை

பயனற்ற சொற்களைச் சொல்லுதலைத் தவிர்த்தல். எந்தவொரு முயற்சியும் பயனைக் குறிக் கொண்டதாகவே இருக்கவேண்டும். அதுவும் சொற்களைச் சொல்லுதலில் ஒருவனின் ஆற்றலும் காலமும் மட்டுமின்றிக் கேட்டவனின் ஆற்றலும் காலமும் கலந்து செலவழிக்கப்படுகிறது. அதுவும் மேடை அமைப்பாயின் கேட்பவர் பலராகி ஆற்றலும் காலமும் அதிகம் செலவாகிறது. ஆதலால், யாதானும் ஒரு நற்பயனைத் தரக்கூடிய சொற்களையே தேர்ந்து சொல்லவேண்டும். இம்முயற்சி பயனீட்டுக் கொள்கையை மட்டுமின்றிப் பண்பாட்டையும் வளர்த்துக் கொள்ளத் துணை செய்யும்.

191. பல்லார் முனியப் பயன்இல சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும்.

அறிவுடையார் பலரும் வெறுக்குமாறு வீண் சொற்களைச் சொல்பவன், எல்லாராலும் இழிவாய் எண்ணப்படுவான்.
பயனற்றவைகளை அறிவுடையோர் வெறுப்பர். 191.

192. பயன்இல பல்லார்முன் சொல்லல் நயன்இல
நட்டார்கண் செய்தலின் தீது.

ஒருவன் பயனற்ற சொற்களை அறிவுடையோர் பலர் முன் சொல்லுதல், தன் நண்பனிடத்து விரும்பப்படாத செயல்களைச் செய்தலினும் தீயதாம்.

நண்பர் அறிவுடையோராகவும், உயர்வுடையோராகவும் இருப்பின் தமக்கு வரும் தீங்கு கருதி மட்டுமே வெறுப்பர். ஆனால், அறிவுடையோர் பயனிலாமை கருதியே வெறுப்பர் என்று கூறுவது சிறப்பு.

மேலும், பயனிலாமை செய்தலே காலப் போக்கில் வளர்ந்து தீநெறியில் ஆற்றுப்படுத்தும் என்ற உண்மையையும் உணர்த்தியவாறு பயனிலாமை தீயதிலும் வெறுக்கத்தக்கது.

செயல்கள், பயன் என்ற சுழல்வட்டத்தில்தான் வாழ்க்கை அமைவுற அமைகிறது. பயனற்ற செயல்கள் தொடரும்பொழுது வாழ்க்கையின் அமைவு கெடும். அவ்வழி தீயது தோன்றுதல் தவிர்க்க இயலாதது. அதனால் பயனற்ற சொற்களைத் தவிர்ப்பதன் மூலமே தீமை தோன்றாமலும் தவிர்க்க இயலும் என்பதறிக. 192.

193. நயன்இலன் என்பது சொல்லும் பயன்இல
பாரித்து உரைக்கும் உரை.

பயனில்லாத பொருளை ஒருவன் விரித்துரைக்கும் உரையே அவன் நீதியில்லாதவன் என்பதனை வெளிப்படுத்தும்.

நீதி என்பது எந்த ஒரு செயலுக்கும் உரிய பயனை அடைவது அல்லது மற்றவர்க்கு வழங்குவது என்பதாகும். 193.

194. நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லா ரகத்து.

ஒருவன் பலரிடத்தும் பயனில்லாத - பண்பில்லாத சொற்களைச் சொல்லுவானாயின் அவனிடத்தில் நீதி சேராது. நன்மையிலிருந்து அவனை நீக்கும்.

பயனில்லாத சொற்களைச் சொல்லுதல் பயனுடைமைக்கு எதிராக இருப்பதாலும் பயனின்மை நீதியாகாதென்பதாலும் 'நயன் சாராது' என்றார்.

பயனிலாதன எதுவும் நன்மையாக இருத்தல் இயலாது. ஆதலின், 'நன்மையின் நீக்கும்' என்றார். 194.

195. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயன்இல
நீர்மை உடையார் சொலின்.

பயனில்லாத சொல்லை இனிய தன்மையுடைய உயர்ந்தோர் சொல்வாராயின் அவருடைய உயர்வும் மதிப்பும் நீங்கி விடும்.

'சொலின்' என்பது சொல்லமாட்டார்கள் என்ற நம்பிக்கையை உணர்த்திற்று.

ஆயினும் இன்றைய நடைமுறை இங்ஙனம் இல்லையென்பதையறிக. இன்று பலர் கூடிய அவையில் பயனற்ற சுவையற்ற தீமையை உமிழ்கின்ற சொற்களைப் பேசுவோர், உயர்ந்தோர் எனப் பாராட்டப்பெறும் புன்மை வளர்ந்து வருகிறது. 195.

196. பயன்இல்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி எனல்.

பயனில்லாத சொற்களைப் பலகாலும் விரும்பிச் சொல்லுபவனை மாந்தன் என்று சொல்லற்க; மக்களுள் பதர் என்று சொல்லுக.

பதர் உள்ளீடில்லாதது; ஆயினும் அதனை எரிபொருளாகப் பயன்படுத்தலாம். ஆனால் மாந்தருள் பயனற்றிருப்பவர் எவ்வகையிலும் பயன்படார். 196.

197. நயன்இல சொல்லினும் சொல்லுக சான்றோர்
பயன்இல சொல்லாமை நன்று.

நீதியோடு படாத சொல்லை பெரியோர் சொன்னாலும் சொல்க. அதனால் குற்றமில்லை. எக்காரணத்தை முன்னிட்டும் பயனற்ற சொல்லைச் சொல்லாதிருப்பதே நன்று.

நீதி தவறிய சொற்களை விடப் பயனற்ற சொற்கள் தீமையானவை. இங்கு நீதி தவறிய சொற்களைச் சொல்வோர் சான்றோர். ''சொல்லினும் சொல்லுக'' என்றதால் அவர்கள் சொல்லமாட்டார்கள் என்பது உண்மை. ஒரோவழி சொல்லினும் வெளிப்படையாக உணர்த்த முடியாத ஏதோ ஒரு நன்மையாம் பயனைக்கருதியே சொல்வர். அவ்வழி அது பயனுடையதாம். பயனற்ற சொற்களால் அத்தகைய நன்மை வராது என்று உணர்த்தப் பெற்றது. 197.

198. அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல்.

அறிதற்கு அரிய பயன்களை ஆராயவல்ல அறிவுடையவர்கள் பெரும் பயனில்லாத சொற்களை ஒருபோதும் சொல்ல மாட்டார்கள் .198.

199.பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர்.

மயக்கத்தினின்றும் நீங்கிய குற்றமற்ற அறிவுடையார் பயனில்லாத சொற்களை மறந்தும் சொல்லார்.

இங்கு மயக்கம் என்பது பயன் -பயனின்மை, நன்மை- தீமை, இன்பம் - துன்பம் இவைகளைப் பகுத்தறியமாட்டாத நிலை. 199.

200. சொல்லுக சொல்லில் பயனுடைய சொல்லற்க
சொல்லின் பயனிலாச் சொல்.

சொற்களில் பயனுடைய சொற்களைச் சொல்லுக; பயனற்ற சொற்களைச் சொல்லற்க.

பயனுடைய சொற்களைச் சொல்லுதலால் நன்மை வளர்கிறது. அதனால், சொல்லுக என்றார். பயனிலாச் சொற்களைச் சொல்வதால் பயனையும் பண்பையும் இழத்தலோடன்றித் தீமையும் வளர்கிறது. அதனால், பயனிலாதன சொல்லற்க என்றார். 200.

## 21. தீவினையச்சம்

தீய செயல்கள் செய்தற்கு அஞ்சுதல். தீய செயல்கள் அவற்றைச் செய்வோருக்கும் யாரை நோக்கிச் செய்யப்படுகின்றனவோ அவர்க்கும் ஒருசேரத் துன்பம் தருவன. தீய செயல்களை அஞ்சி ஒழுகுதல் இருமையும் இன்பம் தரும். தீய செயல்கள் செய்ய அஞ்சுவதனாலேயே நல்லன செய்ய நாட்டம் தோன்றும். தற்காப்பு மட்டுமின்றி ஆக்கத்திற்கும் பயன்படும்.

பயனில சொல்லாமைக்குப் பின் வைக்கப் பெற்றதற்குக் காரணம், பயனில சொல்லுதலில், பொழுது பாழாகிறது. சோம்பல் வந்து அமைகிறது. சோம்பலுடையவர்கள் தங்களுடைய நுகர்வுகளைத் தவிர்த்து விடுவதில்லை. சோம்பேறிகள் நுகர்வுக்குத் தலைப்படும் பொழுது தீவினை செய்தல் இயல்பு. ஆதலால், தீவினையஞ்சி வாழ நல்லன செய்தலில் நாட்டம் வேண்டும்.

201.தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னும் செருக்கு.

செருக்கினால் தீவினையாளர்கள் தீவினை செய்ய அஞ்சமாட்டார்கள். நல்லவர்கள் தீவினை செய்தற்கு அஞ்சுவார்கள்.

செருக்கு, மனச்சான்றை மழுங்கச் செய்து விடும். அதன் காரணமாக எதையும் செய்யத் துணிவர். நல்லோர்க்கு மனச்சான்று செழுமையாக இருக்கும். 201.

202. தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

ஒருவன் தனக்கு இன்பம் என்று கருதிச் செய்யும் தீவினைகள் இன்பம் தரா. தீமையே தரும். அதனால் தீயை விடத் தீவினை அஞ்சத்தக்கது.

தீ ஒரோவழி நன்மையும் செய்யக் கூடியது. தீவினையால் யாதொரு நன்மையும் இல்லை. அதனால், தீயினும் அஞ்சப்படும் என்றார்.

தீயின்றி உலக இயக்கமில்லை; தீவினை இல்லாதிருத்தலே சிறந்த உலக இயக்கம். 202.

203. அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல்.

தம்மைப் பகைப்பவர்க்கும் தீமையைச் செய்யாது விடுதலே அறிவுச் செயல்களுள் தலையாயது என்று அறிஞர் கூறுவர்.

தீமைக்குத் தீமை செய்தாலும், அங்ஙனம் தீமை செய்தலால் மனம் மொழி மெய் கெட்டு விடுவதனால் தீமை செய்தாருக்கும் தீமை செய்யற்க என்றார்.

தீமை செய்வாரை அறிவு கொளுத்தித் திருத்தல் சிறப்பு. தண்டம் விதித்தும் திருத்தலாம். இங்கு தண்டம் விதிப்பது தீமை செய்தலாகாது. 203.

204. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு.

ஒருவன் மற்றவர்க்குக் கேடு செய்யக் கூடிய வினையை மறந்தும் எண்ணக்கூடாது. அங்ஙனம் கேடு சூழின் அவனுக்கு (கேடு சூழ்வோனுக்கு) அறக்கடவுள் சூழ்ந்து கேடு செய்யும். 204.

205. இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்
இலன்ஆகும் மற்றும் பெயர்த்து.

தான் வறியவன் என்று கருதி வறுமை நீக்கத்திற்காகப் பிறர்க்குத் தீமையானவற்றைச் செய்யற்க. வறுமை நீக்கத்திற்காகத் தீமை செய்யின் அவ்வழி வளமுடையனாதல் அரிது; மீண்டும் வறியவனாவான்.

வறுமை நீக்கத்திற்கு பொருள் பெறும் தகுதியாகிய அறிவறிந்த ஆள்வினையில்லாமல் பிறரை வஞ்சித்து ஏமாற்றி அவர் பொருளைக் கொள்வது பொருளுடைமையாகாது. அங்ஙனம் ஈட்டும் பொருள் துய்ப்புழி நீங்கிவிடும். பின் எய்துதல் அரிது. அது மட்டுமன்று; யாரை வஞ்சித்துப் பொருள் கொள்ளப்படுகிறதோ அவர் அப்பொருளைத் திருப்ப முயன்று பறித்துக் கொண்டாலும் கொள்வர். ஆதலால், வறுமை நீக்கத்திற்குப் பொருளுடைமை நேரிடையான மாற்று அல்ல. பொருள் ஈட்டுதற்குரிய தகுதியைப் பெறுதலே சரியான மாற்றம். 205.

206. தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால
தன்னை அடல்வேண்டா தான்.

துன்புறுத்துவனவாகிய குற்றங்கள் தம்மையடைந்து வருத்தக்கூடாது என்று நினைப்பவன் தீயனவாகிய பாவங்களைப் பிறரிடத்துச் செய்யாது தவிர்த்திடுக. 206.

207. எனைப்பகை யுற்றாரும் உய்வர் வினைப்பகை
வீயாது பின்சென்று அடும்.

எத்துணைப் பெரிய பகையுடையாரும் அப்பகையினின்றும் தப்பித்து உய்தல் கூடும். ஆனால், பிறர்க்குத் தீவினை செய்தால் அத்தீவினை, செய்தவரைத் தொடர்ந்து சென்று துன்புறுத்தும்.

தீவினை செய்தற்குரியனவாக அமைந்த உணர்வுகள் நீங்காமையின் துன்புறுதல் இயற்கை.

பிறர்க்குத் தீவினை செய்தால் அத்தீவினையின் விளைவால் தப்பாது கெடுவர். 207.

208. தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடிஉறைந் தற்று.

ஒருவனது நிழல் அவன் எங்கு சென்றாலும் அவனைத் தொடர்ந்து அவனிடத்திலேயே தங்குவதுபோல், ஒருவன் தீவினை அவனைத் தொடர்ந்து வந்து துன்புறுத்தும். 208.

209. தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்.

துன்பப்படாமலிருக்க ஒருவன் தனக்குத்தானே ஆசைப்படுவானாயின் யாதொரு தீமையும் பிறர்க்குச் செய்யாது விடுக.

பிறர்க்குத் துன்பம் செய்பவன் இன்பத்தை அடைதற்கு இயலாது என்பது நியதி. 209.

210. அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின்.

ஒருவன், செந்நெறியினின்று ஒருபக்கமாக விலகிச் சென்று பிறர்க்குத் தீமை செய்யானாயின் அவன் கேடில்லாதவன் என்பதை அறிக.

''அருங்கேடன்'' என்று சொன்னார், கேடு வருவது அருமை என்பதனால். கேடு வருதல் அருமையென்று கூறியதால் ஒரோவழி வரும் என்பதும் பெறப்பெற்றது.

அங்ஙனம் வரும் கேடு உண்மையில் கேடன்று. '' நத்தம் போல் கேடு'' என்று பொருள். 210.

## 22. ஒப்புரவறிதல்

தமக்கு இன்பமாயின என்னவெனத் தெரிந்து வாழ்பவர்கள் அத்துணை இன்பங்களும் மற்றவர்க்கும் வேண்டுவனவே என்ற உணர்வுடன் மற்றவர்கள் கேளாமலே உதவி செய்து வாழ்தல் ஒப்புரவு. ஈதலினும் ஒப்புரவு உயர்ந்தது. இந்த ஒப்புரவுக் கொள்கை தருமகருத்தாக் கொள்கையை ஒத்தது. சம வாய்ப்புச் சமுதாயம் காணத் துணை செய்வது.

ஒப்புரவு - சமுதாயத்திற்கு பயன்படக்கூடிய பொது அறம்.

211. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்ஆற்றும் கொல்லோ உலகு.

உலகத்தவர்கள் தமக்கு மழை பொழிந்து உதவி செய்யும் முகிலுக்கு (மழைக்கு) எத்தகைய கைம்மாறு செய்ய இயலும்? அதுபோலவே, பருவம் அறிந்து ஒப்புரவு செய்து ஒழுகுவது கைம்மாறு நோக்குடையதல்ல. 211.

212. தாளாற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தப் பொருட்டு.

ஒப்புரவாளன் முயற்சி செய்து தொகுத்த செல்வம் முழுவதும் தகுதியுடையவர்க்கு உதவி செய்தல் பொருட்டாம்.

உழைத்து முயன்று பொருளீட்டுதலும் ஒப்புரவு செய்தலும் உடனிகழ வேண்டியன. 212.

213. புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல்அரிதே
ஒப்புரவின் நல்ல பிற.

ஒப்புரவு செய்தலைப் போன்ற நல்ல செயல்களைத் தேவருலகத்திலும் இந்த உலகத்திலும் பெறலரிது.

இன்றும் அரிதாகவே ஒப்புரவு விளங்குகிறது. 213.

214. ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

உலகியல்பு அறிந்து ஒப்புரவு செய்து வாழ்வோனே வாழ்கின்றான். ஒப்புரவு செய்யாதவன் செத்தார் கணக்கில் வைத்து எண்ணப்படுவான்.

உயிர்க்குலத்திற்கு உற்றதறிந்து செய்தலே உயிருடைமையின் அடையாளம் அஃதின்மையால் ''செத்தார்'' எனப்பட்டது. 214.

215. ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

உலகின் உயிர்க்குலம் அனைத்தையும் வாழ்விக்க விரும்பி ஒப்புரவு செய்யும் பேரறிவாளனின் செல்வம் ஊர்வாழ்நரின் குடிநீர்க்குளம் நிரம்பினாற் போன்றது. 215.

216. பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயன்உடை யான்கண் படின்.

ஒப்புரவு செய்யும் நேர்மையாளனிடம் செல்வம் சேருமாயின் அது பயன்படு மரம் ஊர் நடுவே பழுத்தாற் போன்றது.

செல்வம் ஒப்புரவாளனிடம் சேர்தல் அரிது என்பதால் 'நயனுடையான்கண் படின்' என்றார். எளிதில் கிடைப்பது கருதி 'உள்ளூர்ப் பழுத்தற்றால்' என்றார். 216.

217. மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்.

ஒப்புரவு செய்யும் பெருந்தகையாளனிடம் செல்வம் சேரின் அது தப்பாது நோய் நீக்கப் பயன்படும் மருந்து மரத்தை ஒக்கும்.

'தப்பா' என்றது எளிதில் அடைதலையும் நோய் நீக்கமாகிய பயன் தருதலையும் உணர்த்த. 217.

218. இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடன்அறி காட்சி யவர்.

செல்வம் சுருங்கிய காலத்திலும் கடப்பாடுணர்ந்த அறிவுடையோர்கள் ஒப்புரவு செய்தற்குத் தயங்க மாட்டார்கள்.

இடர்ப்பாடுற்ற சூழ்நிலையில் இயற்றும் ஒப்புரவே உயர்வுடையது. 218.

219. நயன்உடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர
செய்யாது அமைகலா வாறு.

ஒப்புரவாளன் வறியனாதலாவது, தாம் தவறாது செய்யும் வேளாண்மைச் செயல்களைச் செய்ய இயலாது கிடக்கும் நிலையேயாம்.

செல்வம் இன்மை வறுமை அல்ல. ஒப்புரவு செய்யாமையே வறுமை. 219.

220. ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்கது உடைத்து.

ஒப்புரவினால் ஒருவனுக்குப் பொருட்கேடு வருமாயினும் அக்கேடு தன்னை விற்றாயினும் கொள்ளத் தகுதியுடையது. ஒப்புரவினால் வரும் கேடு புகழுக்குரியது; மறுமை இன்மைக்குரியது. 220.

## 23. ஈகை

(வறுமையுற்றோருக்கு வழங்கி உதவுதல் ஈகை)

221. வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

பொருளில்லாத வறியவர்க்குக் கொடுப்பதே ஈகை. வளமுடையவர்க்குத் தருவதெல்லாம் ஈகைஅல்ல. அவை திரும்பிப் பெறும் குறிப்புடையன.

வறியார், தம் வறுமைக்கு மருந்தாகவே பெறுவர். வறியவரால் பெற்றதைத் திருப்பித் தர இயலாது, வறியவராதலால் வேறு எவ்வகையிலும் திருப்பி ஈடு செய்ய முடியாது. வளமுடையோர் திருப்பித் தர இயலும். பொருள் அளவில் இல்லையானாலும் புகழ்தல் முதலியவற்றாலும் இயலும். 221.

222. நல்ஆறு எனினும் கொளல்தீது மேலுலகம்
இல்எனினும் ஈதலே நன்று.

பிறரிடத்தில் வாங்குவது வீட்டுலகைத் தரும் நல்லவழி என்றாலும் பெற்றுக் கொள்ளுதல் தீதேயாம். வீட்டுலகத்தை அடைய முடியாது என்றாலும் ஈதலே நன்று.

இரந்து ஏற்பதும் இழிவன்று, வீட்டுலகம் கிடைக்கும் என்ற புறநெறி வழக்கு மறுத்தது. 222.

223. இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன்உடையான் கண்ணே உள.

ஒருவன் தான் ஏழை என்று கூறி இரப்பதற்கு முன், அவன் வறுமையறிந்து கொடுத்தல் நற்குலத்திற்குரியானின் சிறப்பு.

வறுமையைக் கூறி இரப்பதன்வழி இரப்பவனின் இழிவு வெளிப்படுதலால் கூறாமலே அறிந்து கொடுத்தல் குலச்சிறப்பு என்றார். நற்குலத்தில் தோன்றியோர் எவ்வகையாலும் பிறர்க்கு இழிவு தோன்றுதலுக்கு உடன்படார் என்பது தமிழ் மரபு.

இன்று ''ஏழைகள்'' - ''அநாதைகள்'' என்று பெருவழக்காக வசதியும் வாய்ப்புமுடையோர் பேசுதல், தமிழ் நாகரிக மரபன்று என்பதறிக. அதுவும் அவர்களை ஏழையாக்கியவர்களே கூறுதல் அறமன்று.

வாங்குவோனின் ஏழைமையைப் பிறர் அறியக்கூறாமல் கொடுத்தல் என்றும் பொருள் கொள்ளலாம்.

ஏற்பவனுக்குக் கொடுக்கும் குண நிலையில், பொருளால் இல்லையானாலும் குணத்தால் உயர்ந்திருப்பவர்கள் தம் வறுமையைக் கூறாமல் கொடுப்பர் என்றும் பொருள் கொள்ளலாம்.

ஏற்பான் மீண்டும் தனது வறுமையைப் பிறிதோரிடத்தில் சென்று கூறி இரவாவண்ணம் அவன் வறுமை தீரக் கொடுத்தல் என்றும் பொருள் கொள்ளலாம். 223.

224. இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகம் காணும் அளவு.

இரத்தல் மட்டும் துன்பமன்று. இரக்கப்படுதலும் குடிப்பிறந்தாருக்குத் துன்பமே. எப்படி? இரப்போனின் துன்பம் நீங்கப்பெற்று இன்முகம் காணும் அளவுக்குக் கொடுக்க வேண்டும் என்ற கோட்பாடுடையராதலின் இரக்கப்படுதலும் துன்பமேயாம்.

இரப்போரின் வறுமை மிகுதியும், ஈவோரின் பொருள்களும் ஒத்து வராத போது, அறம் நோக்கி வருந்துதலின் இரக்கப்படுதலும் துன்பம் என்றார். 224.

225. ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்.

தவம் செய்வோரின் ஆற்றல் தமது பசியைப் பொறுத்துக் கொள்வதில் இருக்கிறது. இந்த ஆற்றல் பசித்துன்பத்தை ஈகையால் மாற்றுவார் ஆற்றலின் பின்னே வைத்து எண்ணப்படும்.

அதாவது, பசியைப் பொறுத்தலிலும் பசியை மாற்றுவார் ஆற்றல் சிறப்புடையது.

பசியைப் பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் என்பது பழக்கத்தினால் கூட எளிதாக அமையும். ஆனால், அறிவறிந்த ஆள்வினையால் பொருளீட்டி

அப்பொருளின் மீது பற்று இல்லாமல் பசியால் வருந்துவோருக்கு வழங்கிப் பசியை மாற்றுவது என்பது எளிதில் வரக்கூடிய பண்பன்று. பசியைப் பொறுப்பாரிடம் விஞ்சியிருப்பது ஆற்றும் பண்பே. பசியை மாற்றுவோரிடம் ஆள்வினை பொருள் பற்றின்மை ஈகை ஆகிய முத்திறப் பண்புகள் சிறந்து விளங்குதல் அறிக. 225.

226. அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதுஒருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

வறியவரை அழிக்கும் பசியை ஆற்றுவதே பொருள் பெற்றவன், பொருளைச் சேமித்துப் பாதுகாக்கும் வழி.

''பொருள் வைப்புழி'' - இன்றைய வங்கியை நினைவு கூர்க! நாம் சேர்த்த பொருளைப் பாதுகாப்பாக வங்கியில் இட்டுவைக்கிறோம். வங்கிகள் அந்தப் பொருளினை வறியவர்க்கு வழங்கி வாழ்வளிக்கிறது. வங்கிச் செயல் முறையால் பொருள் பாதுகாப்பு பொருள் (வட்டி மூலம்) வளர்ச்சி, வறியவர் வாழ்வு பெறுதல் ஆகிய பணிகள் நடைபெறுவதை அறிக.

பக்கத்து வீட்டில் பசியால் வாடும் வறியவன் இருந்தால் ஒருவன் பெற்றுள்ள பொருள் கொள்ளை போகும் என்பதூஉம் அறிக. வறுமையற்ற சமுதாயம் அமைத்தல் வளத்தைப் பேணிப் பாதுகாக்கும் வழியுமாம். 226.

227. பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்
தீப்பிணி தீண்டல் அரிது.

எப்போதும் பலரோடும் பகுத்துண்டு பழகியவனை வறுமையால் வரும் பசி தீண்டாது.

''பசி'' உடல் நலத்தின் அடையாளம், ஆதலால் வாளா பசியென்று கூறாது, பசியென்னும் ''தீப்பிணி'' என்றார்.

பகுத்துண்ணும் பழக்கமுடையோருக்குப் பலரை உண்பிப்பதிலேயே உண்டது போன்ற மனநிறைவு ஏற்படும். அதனால்,''பசியென்னும் தீப்பிணி தீண்டலரிது'' என்றார்.

மேலும், பகுத்து உண்பவரின் பசியை மற்றவர்கள் தாங்க மாட்டாது போற்றுவர். அதனாலும் தீண்டலரிதாகும். 227.

228. ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

தாம் உடைய பொருளை ஈயாது வைத்திருந்து பின்பு கள்வர் முதலியவரால் கொள்ளப் பெறுதலால் இழக்கும் கல்நெஞ்சர், வறியார்க்கு வேண்டியவற்றைக் கொடுத்து மகிழும் இன்பத்தை அறியாரோ?

பசித்துன்பம் மனிதனைக் கள்வனாக்குகிறது. பொருள் இழப்பு ஏற்படுத்துகிறது. ஈத்துவத்தல் என்பதும் பழக்கத்தினால் அமைவது. முதலில் ஈகை எளிதன்று. தொடங்கிய பின் இன்பமேயாம். 228.

229. இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்.

பொருள் நிறைய உடையவர் வறியவர்க்கு இட்டு உண்ணாது தாமே தமியராக உண்ணல் இரத்தலினும் பொல்லாதது.

பொருள் நிறைய சேர்க்கவேண்டும் என்ற எண்ணத்தில் தனியே உண்ணல் என்றும் கூறுவர். ஏற்புடையதே. 229.

230. சாதலின் இன்னாதது இல்லை இனிதுஅதூஉம்
ஈதல் இயையாக் கடை.

ஒருவனுக்குச் சாவை விடக் கொடியது பிறிதொன்று இல்லை; ஆயினும் ஈகையாளனுக்கு அந்தச் சாவும் ஈதல் இயலாவிடத்து இன்பந் தருவதாம். 230.

## 24. புகழ்

புகலப்படுவது புகழ். ஒருவருடைய வாழ்க்கையின் சாதனையால் பலர் வாழும்பொழுது அந்தப் பலர் உளமாரக் கூறும் சொற்கள் புகழாகும். புகழ் வேறு; விளம்பரம் வேறு. இன்று, விளம்பரமே நிலவுகிறது. புகழுடையார் யாருளர்?

231. ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு.

வறியார்க்கு வழங்கல்; புகழ் பெற வாழ்தல் அப்புகழன்றி உயிர்க்குலம் பெறக்கூடிய பேறு வேறு இல்லை.

பொருள் பற்று நெகிழ்ந்துவிடாத ஒன்று, அதனால் வறியார்க்கு ஒன்று வழங்கும் இயல்பு எளிதில் வராது.

பொதுவாகப் பொருளுடையோர் செய்யாத ஈதலைச் செய்தலால் புகழ் வரும் என்பது கருத்து. ஆனாலும், ஈதலால் மட்டும் புகழ் வருவதன்று என்பதறிக. 231.

232. உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ்.

உலகத்தில் ஒருவரைப் பலர் கேட்க - கற்க உரைக்கும் தகுதி பெற்றோர் சொல்வதெல்லாம் வறுமையால் இரப்பவர்க்கு அவர் வேண்டியதொன்றை ஈவார் மேல் நிற்கும் புகழே. 232.

233. ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்று இல்.

தனக்கு இணை இல்லாது உயர்ந்த புகழல்லாமல் இவ்வுலகத்தில் அழியாது நிற்பது வேறொன்றுமில்லை. 233.

234. நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு.

ஒருவன் நிலவுலகத்தில் நிலையான புகழைச் செய்வானாயின் தேவருலகம் அறிவால் சிறந்தவரை விரும்பாது.

அறிவுடையோரினும் மனித உலகத்திற்குச் செய்ய வேண்டிய கடமைகளை இயற்றுவோர் விரும்பத்தக்கவர் என்பது கருத்து. 234.

235. நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது.

வளர்ச்சி போலக் காட்டிக் கேட்டினை அடைதலும் வாழும் நிலையிலேயே இறத்தலை அடைதலும் திறப்பாடுடையவர்க்கேயாம்.

செல்வத்தை வளர்த்தல்போல் காட்டி அறத்தில் ஈட்டிய செல்வத்தை அழித்தலும் இறந்தாலும் இருக்கும் நிலையிலேயே புகழுடம்பில் வாழ்தலும் அரிய பயிற்சியுடையார்க்கே கூடும். செல்வக்கேடு போல் காட்டி செல்வத்தை அறம் செய்தல் மூலம் ஈட்டலும் இறந்தும் இருப்பது போல் புகழுடம்பில் வாழ்தலும் என்றும் கூறலாம். 235.

236. தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.

பலர்முன் தோன்றும்பொழுது புகழொடு தோன்றுக. அங்ஙனம் தோன்ற இயலாதாயின் பலர்முன் தோன்றாதிருத்தலே நன்று.

புகழொடு தோன்றுதலாவது புகழினைப் பெறுதற்குரிய தகுதிகளோடு தோன்றுக என்பது கருத்து. காரணம் காரியமாகக் கூறப் பெற்றது. 236.

237. புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை
இகழ்வாரை நோவது எவன்.

தமக்குப் புகழுண்டாக வாழாதவர், தம்மை இகழும்பொழுது புகழ்பட வாழாத தம்மையே நொந்து கொள்ளாது இகழ்வாரை நொந்து கொள்வது ஏன்? எல்லாரும் புகழை விரும்புவர். ஆயினும் புகழ்பட வாழ விரும்பார் என்பது உலகியல். 237.

238. வசைஎன்ப வையத்தார்க்கு எல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்.

ஒருவன் தனது புகழை நிலை நிறுத்தாவிடின் அது உலகத்தார்க்கு எல்லாம் பழிப்பாகும்.

பழிப்புக்குரியவற்றை நீக்குதல் மூலம் புகழ் அடைதல் வாழ்க்கை முறை. புகழ் பெறாதிருத்தல் வையகத்திற்கு வசைநிலையாயிற்று என்பது கருத்து. 238.

239. வசைஇலா வண்பயன் குன்றும் இசைஇலா
யாக்கை பொறுத்த நிலம்.

புகழைச் செய்யாத உடம்பைச் சுமந்த நிலத்தில் பழிப்பில்லாத விளைச்சல் குறையும்.

அறிவுடன் கூடிய உழைப்பின் வழி பொருள் ஈட்டலே புகழுக்கு வாயில்.

இத்தகு உழைப்பில்லாதவர்கள் வாழ்வதால் நிலம் விளைச்சல் குறைகிறது என்பது கருத்து. 239.

240. வசைஒழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

பழியில்லாமல் வாழ்பவரே உயிர் வாழ்பவர். புகழின்றி வாழ்பவர் உண்மையில் வாழாதவரேயாம். வாழாமையும், வாழ்தலும் புகழில் அமைந்து கிடக்கிறது. 240.

## 25. அருள் உடைமை

சார்பும் குறியெதிர்ப்பும் இல்லாது எல்லா உயிர்கள் மாட்டும் அன்புகாட்டுதல் அருளுடைமையாகும். துறவிகளுக்குச் சார்பும் குறியெதிர்ப்பும் இருக்காது. ஆதலால், அவர்கள் காட்டும் அன்பு அருளுடைமையாயிற்று.

241. அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள.

செல்வங்கள் எல்லாவற்றுள்ளும் சிறந்தது அருட்செல்வம். மற்ற பொருள் முதலிய செல்வங்கள் கீழ் மக்களிடத்தும் உள்ளன.

அருட்செல்வம் உயர்ந்தோரிடத்திலேயே இருக்கும் என்பது கருத்து. 241.

242. நல்லாற்றால் நாடி அருளாள்க பல்லாற்றால்
தேரினும் அஃதே துணை.

நல்ல முறையில் நாடி ஆராய்ந்து அருளாக்கத்தினை உடையவராக விளங்குக. பல்வேறு முறைகளால் ஆராய்ந்தாலும் உயிர்க்குத் துணையாவது அருளே; பிறிதொன்றும் இல்லை. 242.

243. அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்.

இருள்செறிந்த துன்ப உலகம் புகுதல் இது என்று சுட்டிக் காட்டப்பட்டதாய்ப் பொறி புலன்களைக் கடந்து கிடப்பது. இதனைத் துணிந்து ஏற்பார் இன்று இல்லை. ஆயினும் ''துன்ப உலகம்'' என்றே கூறினார். இந்த உலகிலேயே கூட அறியாமை, வறுமை, பிணி, பகை முதலியவற்றால் வருந்தித் துன்புற்று வாழ்தலும் நரகம் என்று எண்ணினாலும் தவறில்லை. 243.

244. மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை.

நிலையான உயிர்களைப் பேணி அந்த உயிர்களிடத்தில் அருளுணர்வைக் காட்டுவானுக்குத் தன் உயிருக்காக அஞ்சும் தீவினை இல்லை.

போட்ட வித்தே முளைக்கும். பிறிதொன்று முளைக்காது. அதுபோலச் செய்தனவே அனுபவத்திற்குரியன. மற்ற உயிர்களுக்கு அருள் காட்டுபவன் அதனையே திரும்பப் பெறுவான். ''மன்னுயிர்'' என்பதற்குப் பிற உயிர் என்று பொருள் கொள்ளலும் தவறாகாது. 244.

245. அல்லல் அருள்ஆள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி.

அருளுடைமையராய் வாழ்வார்க்கு அல்லல் இல்லை; இதற்கு காற்று வழங்கும் இந்தப் பெரிய உலகம் சான்று.

உலகில் அருளொழுக்கம் பூண்டோர் அழிந்ததில்லை.

காற்றியக்கத்தால் உலகம் - உலகிடைப் பொருள்கள் அழியவில்லை என்பதும் கருத்து. 245.

246. பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்துஒழுகு வார்.

உயிர்களுக்கு அருளினைச் செய்யாது கொடுமை செய்து ஒழுகுபவர்கள் வாழ்க்கையின் உறுதிப் பொருள்களாகிய அறத்தினை மறந்தவர்கள் என்று கூறப்படுவர். 246.

247.அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு.

உயிர்களிடத்து அருள் இல்லாதவர்களுக்கு வீட்டின்பம் இல்லை. பொருள் இல்லார்க்கு இவ்வுலகத்து இன்பம் இல்லாதது போல.

பொருள்- உண்பனவும் துய்ப்பனவுமாம்.

'அவ்வுலகம்', சேய்மைக் குறிப்புணர்த்துவது. தம்மின் வேறாக அமைந்து இயங்கும் சமுதாயம் என்ற பொருள் மாறுபாடுடைய தன்று. 247.

248. பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார்மற் றாதல் அரிது.

ஒருபொழுது வறியவரானவர் பிறிதொரு பொழுது செல்வராகலாம். ஆனால், அருளொழுக்கத்தை இழந்தவர்கள் மீண்டும் ஆக்கம் உடையவராய் வாழ்தல் அரிது. 248.

249. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்.

உயிர்களிடத்தில் அருள் இல்லாதவர் செய்யும் அறம், தெளிந்த அறிவில்லாதவன் மெய்ப்பொருள் கண்டது போலும்.

மெய்ப்பொருள் காண்டலுக்குத் தெளிவு தேவை. தெளிவில்லாதார் 'சைத்தானைக் கூட'ப் பரம்பொருள் என்று காட்டி விடுவர்.

"சிந்தையும் தெளிவுமாகி
தெளிவினுட் சிவனுமாகி" - அப்பர். 248.

250. வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து.

தன்னின் வலியார் தன்னைத் துன்புறுத்தும் பொழுது தான் நிற்கும் நிலையை எண்ணுக, தான் மெலியார் மீது தாக்குதல் செய்யும் பொழுது.

தாம் அஞ்சுவதைப் பிறரிடம் செய்யற்க என்பது கருத்து. 250.

## 26.புலால் மறுத்தல்

உயிர்க் கொலையால் வரும் உணர்வைத் தவிர்த்தல். புலால் உணவு அன்புக்கு மாறானது. ஆதலால், புலாலைத் தவிர்த்தல் அறம். இன்று புலால் உணவு என்றால் விலங்குகள், பறவைகள் முதலியவற்றின் இறைச்சியை மட்டுமே தவிர்க்கும்படி கூறுகின்றனர். தாவரங்களைத் தவிர்ப்பதில்லை. ஏன்? தாவரங்களுக்கு உயிருண்டு என்பதுதானே இலக்கணம்.

ஆம்! தாவரங்களுக்கு உயிருண்டு. எத்தகைய உயிர் தாவரங்களுக்கு? மனிதர் தாவர விதைகளைத் தண்ணீரோடும் மண்ணோடும் பொருத்தினாலே உயிர் தோன்றும்; தாமாகத் தோன்றா. தாவரங்களுக்குக் காதற் பசியும் காதல் சேர்க்கையும் கிடையாது; கூட்டு உண்டு. ஆனால், தேடிப்போய் அல்ல. மற்ற உயிர்கள் மூலம் சேர்க்கை உண்டு. ஆதலால், தாவரங்களை உண்ணுதல் புலால் ஆகாது. மேலும், உயிர்த்தாதுக்கள்இல்லாத தாவரங்களை உண்ணுதலையே தவம் என்று கூறுவோரும் உண்டு. அருளுடையார் புலால் உண்ணமாட்டார் என்பதால் அருளுடைமையின் பின் வைக்கப் பெற்றது.

251. தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிது ஊன்உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்.

தன் உடம்பு பெருத்து வளர்வதற்காகப் பிறிதோருயிரின் உடம்பினைத் தின்பவன் எப்படி அருளுணர்வுடையவனாக இருப்பான்?

புலால் உணவு உண்பார்க்கு அருளுடைமை இல்லை என்பது கருத்து.

பிற உயிர்நலம் மறுத்த தன்னலம் அருளுடைமைக்குப் பகை என்பதுமாம். 251.

252. பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு.

பொருளால் பயன் கொள்ளல் அதனைப் பாதுகாத்துக் கொள்ளாதவர்க்கு இல்லை. அதுபோல அருளால், பயன் கொள்ளல் புலால் உண்பவர்க்கு இல்லை. 252.

253. படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றுஊக்காது ஒன்றன்
உடல்சுவை உண்டார் மனம்.

கொலை செய்யும் கருவியைக் கையில் வைத்திருப்பவரின் நெஞ்சம், கொல்லாமை அறத்தின்பாற் செல்லாது. அதுபோல, வேறோர் உயிரின் உடலைச் சுவைத்து உண்டவர் மனம் அருளை நோக்காது.

பிற உயிர்களை வருத்தாமல் புலால் உண்ண இயலாது. பிற உயிர்களை வருத்தாமையும் வருத்தினால் மாற்றுதலும் அருள்உடைமை. அருளுடைமையும் புலால் உண்ணுதலும் முரண்பட்டவை. 253.

254. அருளல்லது யாதெனில் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல்.

அருள் என்பது கொல்லாமை. அருள் அல்லது யாதெனின் கொல்லுதல். கொலைவழி கிடைக்கும் ஊனைத் தின்னுதல் பொருளுமல்ல. அது பாவமுமாம். 254.

255. உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு.

உயிர் நிலையாகிய ஊனுடம்பு ஊனுண்ணாமையிலேயே உள்ளது. ஊனை உண்ட ஒருவனை நரகம் திரும்பத் தராவண்ணம் எடுத்துக் கொள்ளும். 255.

256. தினல்பொருட்டால் கொல்லாது உலகுஎனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்.

ஊன் உண்ணுதலுக்காக உலகு கொல்லாமை மேற்கொள்ளின், ஊனை விற்பவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள்.

''கொன்றால்தான் பாவம்; தின்றால் இல்லை'' என்ற கொள்கையுடையாரை மறுத்தது இது. தின்பார் இருப்பதால்தான் கொலை செய்து அவ்வூனை விற்பாருளராவர். ஆதலால், ஊனுண்பார் தாமே கொலை செய்யாவிடினும் கொலையினால் வரும் ஊனைத் தின்பதால் அவ்வழி வரும் பாவம் அவரைச் சாராமல் போகாது. 256.

257. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதுஒன்றன்
புண்அது உணர்வார்ப் பெறின்.

புலால் ஆவது பிறிதோர் உடம்பின் தசை? தூய்மையற்ற புண் போன்றது என்று உணர்வார், ஊனை உண்பதைத் தவிர்க்க வேண்டும்.257.

258. செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன்.

மயக்கமற்ற தெளிந்த அறிவுடையார் உயிர் நீங்கிய ஊனை உண்ணமாட்டார். 258.

259. அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று.

தீயின்கண் நெய் முதலியவற்றை அவியாகச் சொரிந்து ஆயிரம் வேள்வி செய்வதினும் சிறந்தது, ஒன்றின் உயிரைப் போக்கி அதன் ஊனை உண்ணாமை.

வேள்வியினும் சிறந்தது கொல்லாமை. வேள்வி முதலியவற்றின் காரணமாகக் கொலை நிகழ்ந்தமையை மறுத்தது இது. 259.

260. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்.

ஓர் உயிரையும் கொல்லாதவனாக புலால் உண்ணாதவனாக இருப்பானை, எல்லா உயிர்களும் கைகூப்பித் தொழும். 260.

## 27. தவம்

உயிர், அன்பொழுக்கத்தில் நிறைந்ததாகவும், செந்தண்மை யுடையதாகவும் வளர்தலுக்குரிய முயற்சியில் ஈடுபடுதல் தவம்.

விருப்பங்கள் நிறைவேறாவழி வெறுப்புத் தோன்றும். வெறுப்பு பகையை உருவாக்கும். விருப்பு-வெறுப்புகளில் சமநிலை உணர்வுடன் துன்பம், இன்பம் காரணமாக மாறுபடாது அன்பில் நிற்றல் தவம்.

261. உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு.

உடலுக்கு வந்த நோயினை நொந்து வருந்தாது தாங்கிக் கொள்ளுதல், மற்ற உயிர்களுக்குத் துன்பம் செய்யாமை இவையே தவத்திற்குரிய பண்பியல் வடிவம்.

தற்சார்பான விருப்பமின்மையால் துன்பத்தைத் தாங்கிக் கொள்ளுதலும், மற்ற உயிர்களின் மீது வெறுப்பின்மையால் துன்பம் செய்யாமையும் கைகூடும். 261.

262. தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம்அதனை
அஃதுஇலார் மேற்கொள் வது.

தவம், தவநெறியினை உரிமையாகக் கொண்டவர்களுக்கே ஆகும். அங்ஙனம் தவநெறி உணர்வின்றிப் பிற காரணங்களால் தவத்தினை மேற்கொள்வது மாறான பலனையே தரும். அதாவது தவம் நிறைவேறாது.

இங்கு ''உரிமை'' என்றது விருப்பத்துடன் மேற்கொள்ளும் ஒழுகலாறு. பிற காரணங்கள் என்று குறிப்பிட்டது, வறுமை, உறவில் பொருத்தப்பாடின்மை, பொருளீட்டும் வேட்கை, இன்ன பிற காரணங்களுக்காகத் தவத்தை மேற்கொள்வது. 262.

263. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றைய வர்கள் தவம்.

துறவிகளுக்கு உண்டி முதலியன வழங்கித் தவத்தில் நிறுத்துவதற்காகவே மற்றவர்கள் தவத்தை மறந்துவிட்டனர் போலும்!

பொருள் செய்யும் முயற்சியில் ஈடுபட்டால் தவத்தில் குறை நேரிடினும் நேரிடலாம். அல்லது தவப்பயிற்சிக்குரிய காலம் போதிய அளவு கிடையாமல் போகலாம். அதுமட்டுமன்று. பொருளை விரும்பி ஈட்ட முயற்சி செய்தால் ஒரோவழி பற்றுள்ளம் மிகுந்து தவத்திற்கு இடையூறு ஏற்படலாம். அதனால் தவம் செய்வார் பொருள் செய்யும் முயற்சியில் ஈடுபடுவதில்லை. தவம் செய்வோர்க்கு உரிய வாழ்க்கைத் தேவைகளைத் தவம் மேற்கொள்ளாதவர்கள் வழங்குவர். இங்ஙனம் வழங்குவோர் தவம் செய்வோர்க்குத் துணை செய்வதால் தவத்தை மறந்தனர் போலும் என்பது கருத்து.

'மற்றையவர்' என்பதற்கு இல்லறத்தார் என்று உரை காண்பார் உண்டு. இல்லறத்தில் தவமில்லை என்பது தமிழ்மரபுக்குப் பொருந்தாது.263.

264. ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்.

பகை செய்வாரைக் கெடுத்தலும் தமக்கு உவப்புடையார்க்கு ஆக்கமளித்தலும் தவத்தால் கைகூடும்.

பகைவரைக் கெடுத்தல், வேண்டியார்க்கு ஆக்கம் தருதல் ஆகியன தவமுடையார் எண்ணிய அளவிலேயே செய்ய இயலும். ஆயினும், உண்மைத் தவமுடையார் இதனைச் செய்யார். ஒரோவழி செய்யின் தவம் கெடும்.264.

265. வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

தவமுடையார் தாம் வேண்டியவற்றை வேண்டியபடியே அடைதலால் தவம் செய்யும் முயற்சி இப்பொழுதே மேற்கொள்ளப்படும்.

வேண்டிச் செய்யப்படுவது தவமன்று; இங்கு, வேண்டிய வேண்டியாங்கு எய்தல் என்றது உயிர் இன்ப அன்பில் திளைத்தலேயாம்.

'ஈண்டு முயலப்படும்' என்றது காலந்தாழ்த்தாது செய்ய வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்காம். 265.

266. தவம்செய்வார் தம்கருமம் செய்வார் மற்றல்லார்
அவம்செய்வார் ஆசையுள் பட்டு.

தவம் செய்பவர்கள் தாம் மேற்கொண்ட தவத்திற்குரிய கடமையைச் செய்பவர்கள். அங்ஙனமில்லாதார் கடமையைச் செய்யாது தவம் செய்வார் போலக் காட்டி மாறுபட்டனவற்றைச் செய்து ஆசை வழிபட்டுக் கேடு செய்பவராவார்.

தவம் செய்வாருக்குரிய கடமையாவது மகவெனப் பல்லுயிரும் ஒக்கப் பார்த்துச் செந்தண்மை பூண்டு ஒழுகுதல்.

தவத்திற்கு மாறுபட்ட செயல்களாவன: சாதிகளை வளர்த்தல், மதப் பிணக்குகளை வளர்த்தல், காசுக்கு மந்திரத்தை விற்றல் முதலியன.266.

267. சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

பொன் சுடச்சுட ஒளிவிடும். அதுபோலத் தவநெறி மேற்கொண்டோருக்கு ஏற்படும் துன்பம், தவத்தின் ஆற்றலை - ஒளியை வளர்க்கும்.

துன்பம், தவமுடையாரை மேலும் தவத்தில் ஈடுபடுத்தும். துன்பத்தில் துவள்பவர் தவத்திற்குரியவரல்லர். 267.

268. தன்உயிர் தான்அறப் பெற்றானை ஏனைய
மன்னுயிர் எல்லாம் தொழும்.

உயிரின் இயற்கை முனைப்பாகிய 'தான்' என்ற உணர்வு அற்ற தவமுடையாரை மற்ற உயிர்களெல்லாம் தொழும்.

'தான்' அறப்பெற்றவர்களே மற்றவர்களால் மதிக்கப்படுவர்; வணங்கப்படுவர். 268.

269. கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

தவத்தின் ஆற்றல் கைவரப் பெற்றவர்களுக்கு, காலனை எதிர்த்து வெற்றி பெறுதலும் கைகூடும். தவமுடையார்க்கு மரணபயம் இல்லை என்பது கருத்து. 269.

270. இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர்பலர்நோலா தவர்.

தவம் செய்பவர்கள் உலகத்தில் சிலராயினர். அதன் காரணமாக இலர் பலராயினர். நோற்பார் பலராக இல்லை.

இங்கு நோற்பார் என்பதற்கு 'தனக்கென முயலா நோன்றாள் பிறர்க்கென முயலுநர்' என்ற புறப்பாடல் வழிப்பொருள் கொள்ளுதல் மரபு.

மற்றவர்கள் வாழ வேண்டும் என்ற நல்லெண்ணத்தவம் செய்வோர் இன்று அருகிப் போயினர். தவமுடையார் போலத் திரிபவர்கள் காணிக்கைகளைச் சுருட்டுகின்றனர். அதனால் சிலர் பலராயினர். 270.

## 28. கூடாவொழுக்கம்

தவத்தின் இயல்பாகிய அருளுடைமைக்குப் பொருந்தாத ஒழுக்கத்தினை மேற்கொள்ளுதல் கூடாது. அன்பும் அருளுமுடையோராக மகவெனப் பல்லுயிரும் ஒக்க நோக்கிச் செந்தண்மை கொண்டு ஒழுகுதலுக்கு மாறாக, காமஇன்பம், தன்னலம் மற்றும் துய்ப்புகளால் தூண்டப்பட்டு மற்ற உயிர்களுக்குத் துன்பம் செய்து அவ்வழி துய்த்தல் ஆகாதாம்.

271. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்.

பிறரை வஞ்சிக்கும் மனமுடையவர்களின் பொய்யொழுக்கத்தைக் கண்டு உடலினுள் கலந்திருக்கும் ஐம்பூதங்களும் சிரிக்கும்.

உள்ளே வெறுப்பையும் பகையையும் வைத்து அன்பும் அருளுடையார் போல நடந்தால் உள்ளிருக்கும் வெறுப்பையும் பகையையும் தாங்கமாட்டாது உடல் நலம் கெட்டுப் போதலால் ஐம்பூதங்களும் நகும் என்றார். 271.

272. வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்
தான்அறி குற்றப் படின்.

தம் நெஞ்சம் தவறு என்று உணர்த்தி அறிந்த குற்றத்தைச் செய்வதற்கு, வானத்தில் உயர்ந்த திருவேடப் பொலிவு என்ன செய்யும்?
தோற்றத்திலும் நடத்தல் தகுதி என்பது வலியுறுத்தப்பெற்றது.272.

273. வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.

வலிமையில்லாத பசு, புலியின் தோலைப் போர்த்துக் கொண்டு மேய்தலைப் போன்றது தவத்தின் கோலத்தில் மக்களின் உடைமைகளைச் சுரண்டிச் சேர்த்தல்.
தவக்கோலம் மக்களைக் கவரும் தன்மையது. இக்கோலம் கொண்டு காணிக்கைகளைச் சேர்த்தல் குற்றம் என்று கூறப்பெற்றது. 273.

274. தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.

தவத்தின் கோலம் கொண்டு தவத்திற்குரியன அல்லாத கொடிய செயல்களைச் செய்தல், புதரில் மறைந்து நின்று பறவைகளை வீழ்த்தும் வேடனின் செயலை ஒக்கும். 274

275. பற்றுஅற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றுஎற்றுஎன்று
ஏதம் பலவும் தரும்.

பற்றுவிட்டவர்கள் என்பவர்களின் பொய்ம்மை ஒழுக்கம் 'என் செய்தோம்; என்செய்தோம்'' என்று ஏக்கமுறக் கூடிய துன்பம் பலவும் தரும்.
''என் செய்தோம்; என் செய்தோம்'' என்று எண்ணி மக்கள் இரக்கமுறத் தக்க துன்பம் பலவும் தரும். 275.

276. நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல்.

நெஞ்சில் துறவின்றித் துறந்தார் போல் வஞ்சித்து வாழ்பவர்களை விட வன்கண்மையுடையார் யாரும் இல்லை.
நெஞ்சில் துறவாதவர்கள் பொருள் கருதியே ஒழுகுவர். இத்தகையோரால் யாதொரு நன்மையும் இல்லாதது மட்டுமின்றி இழிவும் இழப்பும் ஏற்படுவதால் ''வன்கணாளர் '' என்றார். 276.

277. புறம்குன்றிக் கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கில் கரியார் உடைத்து.

குன்றி மணியைக் போலத் திருவேடம் உடையரேனும் அக்குன்றிமணியின் மூக்கு கருத்து இருப்பது போல, அவர்தம் அகத்தில் கருப்பு இருக்கும்.

அகநலம் குறைந்த நிலையை ''அகம் குன்றியது'' என்றார்.277.

278. மனத்தது மாசுஆக மாண்டார் நீராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

மனத்தின் கண் குற்றமுடையோராகவும், புறத்தில் மாண்புடையோர் தன்மையைக் கொண்டும் ஒழுகுபவர் பலர்.

புறத்தில் கொண்டொழுகும் ஒழுங்குகள் அகத்தின் ஒழுக்கத்திற்கும் காரணமாய் அமைவன.காரண காரிய மாறுபாடுகள் பொய்ம்மையைக் காட்டுவன. 278.

279. கணைகொடிது யாழ்கோடு செவ்விது ஆங்கன்ன
வினைபடு பாலால் கொளல்.

அம்பு, தோற்றத்தில் செம்மையான நேர் வடிவினது. ஆனால் செயலால் கொடியது. யாழ் தோற்றத்தில் வளைகளைக் கொண்டது, செவ்வியதன்று, ஆனால் செயலில் இசை இன்பம் தருவது, செவ்வியது.

யாரையும் ஆராய்ந்து தெளிதல் அவர்தம் செயல்களைக் கொண்டேயாம் என்பதறிக. 279.

280. மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்.

தலை உரோமங்களை மழித்து மொட்டையும் போட வேண்டாம். உரோமங்களை நீட்டி வளர்த்தலும் வேண்டாம். உலகம் பழிக்கக்கூடிய பழக்கங்களை விட்டொழித்தால் போதுமானது.

தீய பழக்கங்களை விட்டொழிக்கும் முயற்சிக்குத் துணையே மழித்தல்- நீட்டல் முதலிய செய்முறைகள் இவற்றால் உடலுணர்வுகளைக் கட்டுப்படுத்துதலும், மற்றவர்களால் கவர்ச்சிக்கப்படாது ஒதுங்குதலும் நிகழும் என்பது நம்பிக்கை. ஆயினும் நோக்கம் தீயொழுக்கங்களைத் தவிர்த்தலேயாம்.

## 29. கள்ளாமை

பிறர் பொருளை வஞ்சித்துக் கொள்ளுதல், துறவுக்கோலத்தாலும் மந்திரங்கள் உச்சரிப்பதாலும் நன்மை அல்லது தீமை செய்ய இயலும் என்ற மனப்பான்மையைத் தம்மை அணுகுவாரிடத்தில் உண்டாக்கியும் அவர்களின் அறிவின்மையாலும் அவலங்களாலும் பாதிக்கப்பெற்ற நிலையில் பொருள்களைக் காணிக்கை என்ற பெயரில் கவர்தலும் கள்ளத்தனமாகக் கவர்தலோடு ஒக்கும்.

நடக்கக் கூடாதவைகள் நடக்கும் என்ற நம்பிக்கையை உண்டாக்கிப் பொருள்களைப் பெறுதல் களவாகும்.

281. எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு.

மற்றவர்களால் இகழப்படாது வாழ விரும்புவர் மற்றவர்க்குரிய பொருள் யாதொன்றையும் வஞ்சித்துக் கொள்ளக் கருதற்க.

துறவியின் இயல்புகள் அமையாத நிலையில் துறவுக் கோலம் கொள்ளுதல் கூடக் களவுதான். இத்தகு முரண்பாடுகள் மற்றவரால் பழிக்கப்படும். 281.

282. உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்.

மற்றவர் பொருளை வஞ்சித்துக் கொள்ள உள்ளத்தால் நினைத்தாலும் தீதே.

நினைத்தலும் செய்தலோடு ஒக்கும் என்பதனால் ''உள்ளலும் தீதே'' என்றார். 282.

283. களவினால் ஆகிய ஆக்கம் அளவுஇறந்து
ஆவது போலக் கெடும்.

களவுகளால் பெருகி வளர்ந்த செல்வம் அளவுக்கும் மேலாக வளர்வது போல வளர்ந்து கெடும் பொழுதும் எல்லைகளைக் கடந்து கெட்டுவிடும்.

உழைப்பால் வராத செல்வம் களவில் கொண்டது போலவேயாகும். இச்செல்வம் பிறிதொருவர் உழைப்பைக் களவாடியதன்றோ?

செல்வ உரிமைக்கு உழைப்பே காரணமாய் அமைதல் வேண்டும்.

வஞ்சித்துக் கொண்ட பொருள் ஆதலால் வஞ்சிக்கப்பட்டோர் வலிமையுடையராகும் போது கெடுதல் இயற்கையின் பாற்பட்ட வரலாற்று நியதி.

அளவிறந்து கெடுதலாவது துய்ப்பன முதலியனவும் இல்லாத நிலையினராதல்; ஆக்கத்திற்குரிய ஊக்கமும் இழந்து பொருளாகிய அறத்தினையும் இழந்து வஞ்சித்தலால் வந்த பாவத்தினையும் அடைந்து துன்புறுதலால் அளவிறந்து கெடும் என்றார். 283.

284. களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும்.

பிறர் பொருளை வஞ்சித்துக் கொள்ளக் கருதிய வேட்கை, இனிது போலத் தோன்றிப் பின் தொலையாத துன்பத்தைத் தரும்.

எதுவும் பழக்கத்தின் பாற்பட்டது. களவு பழக்கமாகி விடின் உழைப்பும் ஊக்கமும் வாரா. வஞ்சிக்கப்படுவோர் தொடர்ந்து ஏமாளிகளாக இருப்பதற்கில்லை. ஆதலால், விளைவு துன்பமாய் அமையும் என்பது கருத்து. 284

285. அருள்கருதி அன்புடையர் ஆதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்.

பிறர் பொருளைக் கவர அவர்தம் சோர்வு கருதிக் காத்திருப்பாரிடம் அருளாக்கம் கருதி அன்பு கொண்டொழுகும் வாழ்க்கையைக் காணல் அரிது.

புண்ணியம், புகழ், பெருமை கருதிச் சோர்வுபடுதல் ''பொச்சாப்பாகும்''. 285.

286. அளவின்கண் நின்றுஒழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காத லவர்.

களவின்கண் ஆகும் ஆக்கத்தை விரும்பியவர்கள் தமக்குரிய அளவின்கண்ணும் நின்று ஒழுகார்.

அதாவது, தமக்குரிய எல்லைகளில் நின்று ஒழுகுதல் அளவின்கண் நின்று ஒழுகுதலாகும். 286.

287. களவுஎன்னும் காரறி வாண்மை அளவுஎன்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல்.

களவு என்று சொல்லப்பெறும் இருள்தன்மையொத்த அறியாமை தன் நிலையில் நின்று ஒழுகும் ஆற்றலுடையாரிடம் இல்லை.

நாள்தோறும், தாம் கொண்ட குறிக்கோளுக்கிசைந்த நிலையில் உயிர் வளர்கிறதா என்பதை ஆய்வு செய்து தரத்தினை அளந்து வாழ்தல் வாழும் திறனாகும். 287.

**288. அளவுஅறிந்தார் நெஞ்சத்து அறம்போல நிற்கும்**
**களவுஅறிந்தார் நெஞ்சில் கரவு.**

தம் நிலையறிந்து வாழ்ந்தார் நெஞ்சத்து அறம் நிற்றல் போல், களவறிந்தார் நெஞ்சத்தில் கரவு நிற்கும்.

அளவறிந்தார் நெஞ்சத்து அறம் நிற்றலால் அவர்தம் சிந்தனை, செயல் அனைத்தும் அறமாய் அமையும். களவறிந்தார் நெஞ்சத்துக் களவே நிற்பதால் இவர்தம் சிந்தனை, செயல் அனைத்தும் வஞ்சனையாகவே அமையும். 288.

**289. அளவுஅல்ல செய்தாங்கே வீவர் களவல்ல**
**மற்றைய தேற்றா தவர்.**

களவு தவிர மற்றைய நேர்வழி யாதொன்றும் அறியாதவர் களவில் பலகாலும் பயின்று அவ்வழி ஊக்கங்கள் மிகுதியும் பெற்று அளவற்ற களவுகளைச் செய்து வீழ்வர்.

ஒருகால் களவு வாழ்க்கை வாழ்ந்தாலும் பிறிதொருகால் சிந்திக்கும் இயல்பு இருப்பின் தேறுவர் என்பது பொது நியதி. இதுவும் அற்றவராதலால் ''மற்றைய தேற்றாதவர்'' என்றார்.

அளவிறந்த களவைச் செய்யும் நிலையே வீழ்ச்சிக்குக் காரணமாகும் என்பது கருத்து. 289.

**290. கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்**
**தள்ளாது புத்தேள் உலகு.**

களவு நிலையில் வாழ்வார்க்கு உடம்பு உயிரைத் தம்மிடத்தில் வைத்துக் கொள்ளாது புறத்தே தள்ளும். களவு நிலையைத் தவிர்த்து வாழ்ந்தவர்களைப் புத்தேள் உலகும் தள்ளாது ஏற்கும்.

களவு செய்து வாழ்வார் பயத்துடன் வாழ்வதால் உடல்நிலை பாதிப்பு ஏற்பட்டு மரணம் எளிதில் வரும்.

களவு நிலையில் வாழ்வார் உழைப்பின்றி வாழ்தலின் நோய் முதலியன வந்தும் உடல் கெடுதலால் உயிர் பிரியும். 290.

## 30.வாய்மை

தமிழ் மரபு வாய்மை என்று கூறுவது ''உண்மை '' என்று கூறுவதை விட உயர்ந்தது; சத்தியம் என்ற சொல்லை விடச் சிறந்தது. உண்மை , சத்தியம் என்ற சொற்கள் சொல்லளவிலேயே நிற்பன. வாய்மை என்பது நீதி, நன்மை, ஒழுக்கம் முதலியவற்றுடனும் தொடர்புடையது. உண்மை , சத்தியம் என்பன சொற்கள் - செயல்களின் தன்மை அளவிலேயே தொடர்புடையன. வாய்மை, காரணங்களுடன் தொடர்புடையது.

பொய்ம்மை, களவு முதலியன ஒரோவழி நியாயத் தன்மையுடையன வாகலாம் என்ற குறிப்பு வாய்மையால் பெறப்படுகிறது. நீதியைக் காப்பாற்றக் கூறும் பொய்யும், உடமைக்காரராகச் செய்யும் களவைத் தடுத்திடும் நோக்கத்துடன் செய்யும் களவும் அறமாகும். ஆனால், இஃது எளிதில் துணியமுடியாத ஒன்று. இந்நெறி காட்டிப் பொய்யையும் களவையும் எல்லோரும் எப்போதும் செய்தல் என்பது திருக்குறள் கருத்தன்று; நமது கருத்தும் இல்லை.

291. வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்.

வாய்மை என்று சொல்லப் பெறுவது எவ்வகை உயிர்க்கும் எந்த ஒரு தீமையும் தராத சொல்லேயாம்.

நிகழ்ந்ததுதானே என்று கூறின் உயிர்களுக்குத் துன்பம் நேரிடக்கூடும். ஆதலால் உயிர்க்குத் தீங்கு நேராமையே வாய்மைக்கு அளவுகோல். 291.

292. பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.

குற்றமற்ற நன்மையைத் தரும் எனின் பொய்ம்மையும் வாய்மையேயாகும்.

குற்றமற்ற நன்மை என்பது ஒருவர்க்கு நன்மையும் பிறிதொருவர்க்குத் தீமையும் செய்யாத நன்மை.

''பொய்ம்மையும் வாய்மையிடத்த'' என்றால் பொய்தான். ஆனால் வாய்மையென்று கருதலாம் என்பது கருத்து.

இந்தக் குறளால் உயிர்களின் வாழ்க்கையில் உள்ள ஈடுபாட்டின் காரணமாக நெகிழ்ந்து கொடுக்கும் சால்பை அறியமுடிகிறது. 292.

293. தன்நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும்.

ஒருவன் தன் நெஞ்சு அறிந்ததொன்றைப் பிறர் அறியவில்லையென்று கருதிப் பொய் சொல்லாதொழிக. பொய் சொன்னா னாயின் அவன்தன் நெஞ்சே உறுத்தும்; சுடும்.

யாருக்கும் நல்லவராக இல்லாது போனாலும் பொறுத்துக் கொள்ளலாம். அவரவர் தம் நெஞ்சுக்காவது நல்லவராக இல்லாது போனால் என்ன செய்ய இயலும்?

ஒருவர் தம் நெஞ்சே அவருடைய சார்பின் காரணமாக முற்றாக நிறைநலம் பெற்றதாக இருக்காது. அதுவே கூட ஒரோவழி அறிந்து தெருட்டும் போது உடன்பட்டு வாழாமை விலங்கியல் வாழ்க்கை.

''தன்நெஞ்சே தன்னைச்சுடும்''என்றது நெஞ்சம் முரண்பட்டமையின் காரணமாக உடலுறுப்புகள் வாயிலாகவும் விரைந்து சொற்கள் வராமையினாலும் குற்றமுடைமையைப் புலப்படுத்தி விடும். 293.

294. உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்.

ஒருவன் நெஞ்சாரப் பொய் சொல்லாது ஒழுகின் அவன் உயர்ந்தோர் உள்ளத்தில் எல்லாம் உளன். உயர்ந்தோர் உள்ளத்தில் இடம் பெற ஆரவாரங்கள், விளம்பரங்கள் தேவையில்லை. உள்ளத்தால் ஒழுகினாலே போதும். 294.

295. மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானம்செய் வாரின் தலை.

ஒருவன் உள்ளத்தோடு பொருந்த உண்மையைச் சொல்வானாயின் அவன் தவமும் ,தானமும் செய்தவரினும் சிறந்தவனாவான்.

கடுந்தவமும் தானமும் பொய்ம்மையாலும் களவாடிய பொருளாலும் பேணப்படுவதுண்டு. ஆதலால் வாய்மை தழுவிய வாழ்க்கை வாழ்ந்தாலே போதும். தவம் இன்றியமையாததல்ல; களவாடிய பொருளால் தானம் செய்வதை விட அறிவறிந்த ஆள்வினையுடன் வாய்மை தழுவிய வாழ்க்கை வாழ்ந்தாலே போதும் என்பது கருத்து.

தவமும் தானமும் வேண்டாம் என்பதல்ல; இவையிருந்தும் வாய்மையில்லாது போனால் பயனில்லை. வாய்மை இருந்து இவையிரண்டும் இல்லையானால் குற்றமில்லை. 295.

296. பொய்யாமை அன்ன புகழ்இல்லை எய்யாமை
எல்லா அறமும் தரும்.

ஒருவனுக்கு , ''பொய் சொல்லான் '' என்ற புகழே புகழ். அதனினும் சிறந்த புகழ் வேறு இல்லை. பொய்யாமை எல்லா அறத்தினையும் தரும்.

''பொய்யாமை'' என்ற அறந்தழுவிய வாழ்க்கையிலேயே எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாமையாகிய பல்வேறு அறங்களும் பொருந்துவதால் இதுவே புகழாயிற்று. எவ்வுயிர்க்கும் தீமை செய்யாமையிலேயே பொய்யாமை வளர்வதால் அறமும் அடங்கியவாறு உணர்த்தியது. 296.

297. பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

ஒருவன் பொய்யாமை என்ற ஒழுக்கத்தினின்றும் வழுவாது பொய்க்காது வாழ்க்கை நிகழ்த்துவானாயின் அதுவே அறமாகும். இவன் பிற அறங்களைச் செய்யாதிருந்தாலும் நன்றாம்.

பொய்யாமை என்பது அறங்கள் பலவற்றின் மையம். பொய்யாமையில் உறுதியாக இருந்தால் பல்வேறு அறங்கள் தாமே உடனிகழ்வதாக நிகழும்; செய்ய வேண்டும் என்பதில்லை. 297.

298. புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்.

புறந்தூய்மை அழுக்கு நீக்குதல்; அகந்தூய்மை குற்றம் நீங்குதல்.

குற்றம் நீங்கிய வாழ்க்கை காணப்படுதல் என்று கூறியதென்னின் உயிர்களின் வாழ்க்கை, இடையூறின்றி நிகழ்தலைக் கொண்டு காண்பதாகும்.

புறந்தூய்மை வாழ்வியலின் இருபிரிவினர்க்கும் தேவையே. துறவியர்க்கு அகந்தூய்மையே சிறப்பு. 298.

299. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

செந்தண்மை பூண்டொழுகும் அறவோர்க்குப் புறனிருள் நீக்கும் விளக்குகள் விளக்கல்ல. அகனிருள் நீக்கும் பொய்யாமையாகிய விளக்கே விளக்காகும்.

புறத்தே காணப்பெறும் தடங்களைக் கொண்டே சான்றோர்கள் முடிவெடுக்க மாட்டார்கள். அவர்களுக்கு உண்மையறியும் விளக்கு வாய்மையேயாம். 299.

300. யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற.

யான் உண்மையான அறங்களாய்க் கண்டவற்றுள் எவ்வகையிலும் வாய்மையைப் போலச் சிறந்த அறம் வேறு இல்லை.

இது திருவள்ளுவர் வியந்து சிறப்பித்துக் கூறும் திருக்குறள்.

எல்லா அறங்களிலும் வாய்மையே சிறந்தது. வாய்மை நீங்கிய மற்ற அறங்களில் குற்றங்குறைகள் இருக்கின்றன. வாய்மை யாதொரு குற்றமும் குறையும் இருத்தல் இயலாது. வாய்மை முற்றாக நன்மை. அதனால் அறங்கள் பலவற்றிலுள்ளும் சிறந்தது வாய்மை. 300.

## 31.வெகுளாமை

வெகுளி - அழுக்காறு. அவா,பொய் இவற்றின் காரணமாகப் பிறப்பது. அழுக்காறு அவா, பொய், இவற்றிற்குக் காரணம் உடைமை, அதிகாரம், புகழ் முதலியன. இம்மூன்றினையும் துறத்தலே துறவு. இதனால் வாய்மை துறவின் ஒரு பகுதியாகும். இன்றைய துறவுமுறை துறக்க வேண்டியன துறவாமையும் துறக்க வேண்டாதன துறத்தலுமாக மாறுபட்டு இருக்கின்றது.

ஒருவன் மீது சினம் கொள்ளுவதற்குரிய காரணங்கள் இருப்பினும் சினங்கொள்ளுதலைத் தவிர்த்தல் வாய்மையுடையோர் வெகுளல் செய்யார்.

**301. செல்இடத்துக் காப்பான் சினம்காப்பான் அல்இடத்துக்**
**காக்கின்என் காவாக்கால் என்.**

சினங் காக்கக்கூடிய எளிய இடத்தில் சினத்தைக் காட்டாது, அருளால் தடுத்துக் கொள்பவனே சினத்தைத் தடுத்துக் கொள்பவன் ஆவான். அங்ஙனம் இல்லாது வலிமையான இடத்தில் சினம் வராது காத்துக் கொண்டால் என்ன? சினத்தைக் காக்காவிடில் தான் என்ன?

வலிய இடத்தில் காட்டப் பெறும் சினத்தால் சினம் காட்டுபவருக்குக் கேடு உண்டாகும். ஆதலால் சினம் உரியவர் முயற்சியின்றியே அடங்கும். அதனால் சினம் காத்தல் என்னும் தன் முயற்சி இல்லை. 301.

**302. செல்லா இடத்துச் சினம்தீது செல்இடத்தும்**
**இல்அதனின் தீய பிற.**

ஒருவனது சினம் அது தாக்க முடியாதவர் மேல் எழுமாயின் தனக்கே தீங்காம். சினம் தாக்கக்கூடிய இடத்தில் எழுமாயினும் தீமையைத் தவிர வேறில்லை.

செல்லிடத்துச் சினம் காட்டலால் இம்மையும், மறுமையும் துன்பம் விளையும்; பெருமையும் குன்றும். 302.

303. மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனான் வரும்.

எத்தகையோரிடத்தும் சினம் கொள்ளுதலைக் கருதவும் செய்யற்க. அதனால் பலவகையான தீமைகள் உண்டாகும் .

வெகுளி தீமைகளின் பிறப்பிடம் என்றவாறு, சினம் காட்டப்பட்டோர் எளியோராயினும் மறைவாகவாவது தீமை செய்ய வன்மம் கொள்வர். ஆதலால் ''யார்மாட்டும் '' என்றார். 303.

304. நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற.

முகத்தின் மலர்ச்சியையும், அகத்தின் மலர்ச்சியையும் கெடுத்தெழுகின்ற சினத்தைத் தவிர வேறு பகைகளும் உண்டோ? இல்லை.

சினத்தின் விளைவு பகை. பகை வந்திடின் இம்மையும் மறுமையும் துன்பமே விளையும். 304.

305. தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.

ஒருவன் தனக்குத் துன்பம் வராமல் காத்துக் கொள்ள விரும்புவானாயின் சினம் வராமல் காத்துக் கொள்வானாக . அங்ஙனம் சினம் வராமல் காத்துக் கொள்ளானாயின் அச்சினமே கொல்லுதல் நிகர்த்த கொடிய துன்பங்களைத் தரும். 305.

306. சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்
ஏமப் புணையைச் சுடும்.

சினம் என்னும் நெருப்பு, தம்மைச் சேர்ந்தாரையும் தம்மைத் துன்பக் காலத்தில் தப்புவித்து பாதுகாத்தவரையுமே சுடும்.

சினம் நெருப்பாகும். ஒரோவழி புறநிலையில் காட்டப்படுவது மட்டுமின்றி, அகநிலையில் எரிந்து கொண்டிருக்கும். ஆதலால் சினம் நெருப்பாயிற்று.

சினத்தால் தாம் கெடும் போது பாதுகாக்கக்கூடிய இனத்தாரையும் சுட்டு விடுவதால் பாதுகாப்பே இல்லாத நிலையில் தனிமைப்படுத்தப்படுகிறார் என்பதாயிற்று. 306.

307. சினத்தைப் பொருள்என்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

சினத்தைத் தனது ஆற்றலுணர்த்தும் சிறந்த பண்பென்று பொருட்படுத்தின், அதைக் கொண்டவன் கெடுதல், நிலத்தின்கண் அறைந்தவனுடைய கை தப்பாது நோவுறுதல் போன்றது.

சினத்தினைக் காட்டி மற்றவர்க்குத் தொல்லை தருதல் பெருமை என்று கருதுதல் வளர்ச்சியில்லாத உலகியல் வழக்கு. 307.

308. இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

கொத்தான நாவுகளுள்ள பெருந்தீ வந்து சுட்டாற் போன்ற தீங்குகளை ஒருவன் தொடர்ந்து செய்தானாயினும் இயலுமாயின் அவனைச் சினவாமை நன்றாம்.

எரியும் நெருப்பைவிடச் சினத்தீ கொடிது என்றவாறு, எரியும் நெருப்பு புறப்பொருளை மட்டுமே அழிக்கும். சினத்தீ பொருள்களையும் பண்புகளையும் ஒருசேர அழிப்பது.

கொடிய துன்பத்தை அனுபவக்கும் நிலையில் சினத்தைத் தவிர்த்தல் எளிதில் கைகூடாது. முடிந்தால் அதனில் சிறப்பு வேறு ஒன்றும் இல்லை.308.

309. உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின்.

தவம் செய்கிறவன் தன் மனத்தால் சினத்தை ஒருபோதும் கருதாதிருப்பான் எனின், அவன் பெறற்கரிய பேற்றையெல்லாம் ஒருங்கே பெறுவான்.

புறத்தே சினம் காட்டதவர்களும் கூட உள்ளத்தில் சினத்தைக் கொள்ளுதல் கூடும் என்பது கருத்து.

உள்ளத்தில் சினம் இருந்தாலும் உறவுகளில் செழிப்பு இருக்காது . இதனால் யாரிடமிருந்தும் உதவி பெறமுடியாது. மேலும் உள்ளத்தில் சினமிருப்பின் புழுக்கமும் உறுத்தலுமிருக்கும்.முயற்சிகளின் முனைப்பும் மழுங்கும். அதனால் நினைத்ததை அடைதல் அரிது என்ற கருத்தை விளக்க உள்ளத்திலும் சினம் கொள்ளாதவர்கள் நினைத்ததெல்லாம் அடைவர் என்றார். 309.

310. இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

எல்லைகளைக் கடந்த சினத்தைக் கொண்டவர்கள் உயிரோடிருக்கினும் செத்தவரை ஒப்பர் . சினத்தினை முற்றாகத் துறந்தவர்கள் முற்றத் துறந்தவர்களாவர்.

பொன்,பொருள்,பூவையர், புகழ் முதலிய பற்றுக்களே சினத்திற்குக்

காரணமாதலால், சினத்தினைத் துறந்தார் என்பது சினத்திற்குக் காரணமான பற்றுக்களையும் துறந்தார் என்பது உய்த்தறியக் கூடியது. 310.

## 32. இன்னா செய்யாமை

இன்னா செய்யாமையாவது: யாரொருவருக்கும் யாதொரு தீங்கும் செய்யாது வாழ்தல். பிணக்கு, வெகுளி, பகை காரணமாகவும் அழுக்காறு, அவா காரணமாகவும் புகழ் வேட்கை காரணமாகவும் நெறிகடந்த இன்ப நுகர்வு காரணமாகவும் தீங்கு செய்யும் இயல்பு தோன்றும். எந்த உயிருக்கும் எந்த ஒரு தீங்கையும் செய்யக்கூடாது என்பதே திருக்குறளின் அறம். அதுவும் தான் இன்னாது என உணர்ந்த துன்பத்தைப் பிறிதோர் உயிர்க்குச் செய்யக்கூடாது என்பது தெளிவு.

311. சிறப்புஈனும் செல்வம்பெறினும் பிறர்க்கு இன்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

சிறப்பைத் தரும் பெருஞ்செல்வம் பெறக்கூடுமாயினும் பிறர்க்குத் தீங்கு செய்யாதிருப்பதே குற்றமற்றவர்களின் குறிக்கோள்.

பெருஞ்செல்வம் பெறினும் பிறர்க்குத் தீமை செய்தல் வழி நெடிய பகையும் அமைதியின்மையும் தோன்றி,செல்வத்தின் பயனாகிய துய்ப்புமின்றிச் செல்வத்தை இழக்கவும் நேரிடும். 311.

312. கறுத்து இன்னா செய்தவக் கண்ணும் மறுத்துஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

ஒருவன் தன் மேல் கறுவு கொண்டு தீயவை செய்தாலும் அதற்குத் திருப்பி அவனுக்குத் தீமையைச் செய்யாதிருத்தல் குற்றமற்றவர்களின் கொள்கையாகும்.

பழிவாங்குதல் தொடருமெனில் ஒருமுடிவே இல்லாமல் அழிவே ஏற்படும் என்பதால் குற்றமற்றவர்கள் பழிவாங்குதலை விரும்ப மாட்டார்கள். 312.

313. செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமம் தரும்.

தான் ஒரு தீங்கும் செய்யாதிருக்கவும் தன் மேற் பகைமை கொண்டு தீங்கு செய்தவர்க்கும் பழிவாங்கும் உணர்வில் தீங்கு செய்தல் தப்ப முடியாத துன்பத்தைத் தரும்.

ஒருவர் யாதொரு தீங்கும்செய்யாதிருக்கத் தீமை செய்வதற்குக் காரணம் அழுக்காறு, அச்சம் முதலிய தீய இயல்புகளின் வழிப்படுதலேயாம். 313.

314. இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்.

தமக்குத் தீங்கு செய்தாரைத் தண்டிக்கும் முறையாவது தீமைசெய்தவர் வெட்கப்படும் அளவுக்கு நன்மையைச் செய்வதுடன் அவர் செய்த தீமையையும் தாம் செய்த நன்மையையும் மறந்து விடுதலாகும்.

பிறர் செய்த தீமையை நினைப்பதால் பகைமை உணர்வும் ,தாம் செய்த நன்மையை நினைப்பதால் தன் முனைப்பும் துளிர்க்கும்.ஆதலால் மறந்து விடுக என்றார்.

உளவியல் அடிப்படையில் ஒருவரைத் திருத்த, உடன்பாட்டு முறையிலே அணுகுதல் வேண்டும். பழிவாங்கும் உணர்வில் நின்ற ஒருவனை ''ஒறுத்தல் '' ''நாண'' என்ற சொற்களின்வழி, பழி வாங்குதலுக்கு உடன்பட்டு நிற்பார் போலக் காட்டி அவன் வெகுளியைத் தணிய வைத்துப் பின் நன்னயம் செய்யும் நெறியில் ஆற்றுப்படுத்தும் நிலையில் இக்குறள் அமைந்திருப்பதறிக. 314.

315. அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை.

பிறிதோருயிர்க்கு வந்த துன்பத்தைத் தம் துன்பம்போல் எண்ணி மாற்றாது போனால் அறிவினால் என்ன பயன்?

மற்ற உயிர்களின் துன்பத்தைத் தம் துன்பம் போல் எண்ணி நீக்க முயற்சி செய்யாதவரின் அறிவுடைமை பயனற்றது என்று உணர்த்தியது.

''பிறிதின்'' என்று பொதுப்படக் கூறியதால் ஓரறிவுயிர் முதல் அனைத்துயிர்களையும் என்பதறிக. 315.

316. இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கண் செயல்.

மக்களுக்குத் தீங்கு தருபவை என்று அறிந்துணர்ந்து கொண்ட தீமைகளைப் பிறரிடத்துச் செய்யாதிருத்தல் வேண்டும்.

தாம் துன்பம் என்று அறிந்துணர்ந்த தீமையைப் பிறரிடத்தில் செய்தால் அறிந்தும் அறமல்லாதன செய்த குற்றம் வந்து சேரும். 316.

317. எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை.

எக்காலத்தும், யாரிடத்தும் பொல்லாதனவற்றை மனமறிந்து செய்யாதிருத்தல் தலையாய அறம்.

''எனைத்தானும்'' என்றதால் எந்தச் சூழ்நிலையிலும் செய்யற்க என்பது கருத்து.

''யார்க்கும்'' என்றதால் நட்பு- பகை என்ற வேறுபாடு விலக்கியவாறு அறிக.

மனமறிந்து செய்யும் தீமைகள் திட்டமிட்டுச் செய்த தீமைகள் ஆகியவற்றுக்கு அறநெறியிலும் சரி, ஆட்சியியலிலும் சரி கழுவாய் இல்லை என்பது உணர்த்தியது. 317.

318. தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னா செயல்.

பிறர் செய்யும் பொல்லாதன, தன் உயிர்க்குத் துன்பம் செய்தமையை அனுபவித்தறிந்தவன், நிலைபெற்று வாழும் இயல்பினையுடைய மற்றவர்க்குப் பொல்லாதன செய்தலுக்கு என்ன காரணம்?

துன்பம் என்று அறிந்த ஒன்றை மற்றவர்க்குச் செய்தல் மனித இயல்பிற்கு உரியதன்று என்று திருவள்ளுவர் கருதுவதால் காரணம் கேட்கிறார். 318.

319. பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா
பிற்பகல் தாமே வரும்.

பிறர்க்கு முற்பகல் துன்பம் செய்யின் துன்பம் செய்தவருக்குப் பிற்பகலில் துன்பம் வந்து சேரும்.

''முற்பகல்'' - ''பிற்பகல்'' என்றது கால விரைவுக் குறிப்புணர்த்துவதற்காக.

''தாமே வரும்'' என்றதால் துன்பம் செய்யப்பட்டவரே துன்பம் செய்ய வேண்டியதில்லை என்றுணர்த்தியது.

தாமே எப்படி துன்பம் வரும் எனின்; பிறர்க்குத் துன்பஞ்செய்தவன், அத்தீச் செயலின் எதிர்விளைவு எப்படி அமையுமோ என்று அஞ்சுவதன் மூலம் தாமே துன்பத்தை வரவழைத்துக் கொள்ளுதல் உண்டு என்பதை உணர்த்த. 319.

320.நோய்எல்லாம் நோய்செய்தார்மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

நோய்கள் எல்லாம் பிறர்க்கு நோய் செய்தவர் மேலே வந்தேறி கொல்லாமையைக் கடைபிடித்து ஒழுகுவோனின் வாழ்நாள் மீது உயிர்களைக் கவரும் காலன் செல்லமாட்டான்.

குறிப்பு- ''வாழ்நாள் மேல் செல்லாது உயிருண்ணுங்கூற்று'' 326.

வருத்தும். ஆதலால் இந்த இயற்கை நியதியினை அறிந்து தம் உயிரை நோயினின்றும் பாதுகாத்துக் கொள்ள விரும்புவோர் பிறிதோர் உயிருக்கு நோய் செய்ய மாட்டார்.

எந்த உயிருக்குத் துன்பம் செய்யினும் அத்துன்பம் தீவினையாகி வந்து பற்றி நின்று வருத்தும் என்பது கருத்து.

## 33. கொல்லாமை

எந்த ஓர் உயிரையும் கொல்லாமை அறம் மேற்கொண்டொழுகுதல் துறவின் ஒழுக்கம் - கடமை. உயிர்க்குலம் அனைத்தும் ஒன்றேயாம். ஆதலால் எந்த ஓர் உயிரையும் உணவின் பொருட்டாயினும் சரி, வேள்வி முதலியன பொருட்டும்கூடக் கொல்லுதல் கூடாது என்பதே திருக்குறள் முடிவு. அயல் வழக்கில் உயிர்க்கொலை செய்யும் வேள்வியை மறுத்ததாயிற்று. உணவின் பொருட்டுக் கூட துறவிகள் உயிர்க்கொலை (ஓரறிவுயிர்களைக் கூட - தாவரங்களைக் கூடக் கொல்லக்கூடாது.) அதனால் தான் துறவியர் உணவு பழங்களாயிற்று.

கொல்லாமையின் அவசியத்தை உணர்தல் அவசியம். உயிர்க்குல அமைப்பில் ஓர் உயிர், பிறிதொருயிர்க்கு இசைந்து ஒத்துழைத்து உதவி பெறும் நிலையில் வாழும் இயல்பில் அமைந்த இயற்கையின் நுட்பத்தை அறிய வேண்டும். எந்த ஓர் உயிருக்கும் நேரடியாகக் கொலை வழி உணவு அமைதல் - பயன்படுதல் இயற்கை நியதியன்று. மீனை எடுத்துக் கொள்ளுங்கள். தண்ணீரில் உள்ள அழுக்குகளைத் தின்று தண்ணீரின் தூய்மைக் கேடுகளை நீக்கி தூய்மையான தண்ணீர் தந்து உதவுவதே மீனின் வாழ்க்கையமைப்பு முறை. மீனை உணவாக மாற்றினால் தண்ணீரின் தூய்மைப் பணிக்கு இடையூறு ஏற்படுகிறது.

அது மட்டுமல்ல, தன்னால் உருவாக்க இயலாத ஒன்றை அழிக்க மனிதனுக்கு உரிமை இல்லை என்பது அறிவியல் நியதி. இயற்கை நியதி.

ஆதலால், கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுதல் பேரறம். துறவிகள் துளியும் பிறழாது நின்று ஒழுக வேண்டிய நெறி.

ஆயினும் இல்லறத்தார்க்கு இல்லையென்று கொள்ளுதல் கூடாது. இல்லறத்தார்க்கும் பொதுவகையில் கொல்லாமை விதிக்கப்பட்ட அறமேயாகும்.

321. அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாந் தரும்.

அறச் செயல் எது எனக் கேட்பின் கொல்லாமையேயாம். கொலை செய்தல் ஒன்றின் மூலமே பல தீவினைகளுடைய பயன் வந்து சேரும்.

ஒரே அறத்தினை உடன்பாட்டாலும் எதிர்மறையாலும் வலியுறுத்திய அருமைப்பாட்டை அறிக. 321

322. பகுத்துஉண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.

அறநூலோர் தொகுத்துக் கூறும் அறங்களில் எல்லாம் தலைசிறந்த அறமாவது, தமது செல்வத்தைப் பலரோடும் பகுத்துண்டு தொடர்ந்து அவ்வுயிர்களைப் பாதுகாத்தலேயாம்.

இத்திருக்குறளைப் பொருள் நோக்கிப் பார்த்தால் ஒப்புரவறிதல் என்ற அதிகாரத்திற்கு இசைவுடையதாக அமைந்திருக்கிறது. அதுமட்டுமல்ல, கொல்லாமைக்கு இசைவுடையது போலவும் தெரியவில்லை. ஆயினும் இந்த அதிகாரத்தில் இக்குறளை வைத்ததன் குறிப்பு யாதெனில் வாழப்பிறந்த உயிர்களுக்கு உணவு முதலியன வழங்கிப் பட்டினிச் சாவிலிருந்து காப்பாற்றாது பசியால் வருந்திச் சாகவிடுதலும் கொலையேயாம் என்பதாகும்.

'' பல்லுயிர் ஓம்புதல்'' என்றதால் ஒருவேளைச் சோறு போடுதல் மட்டுமே அறமாகாது. தொடர்ந்து அந்த உயிர்ப் பசித்துன்பத்தில் வாடாதவகையில் செய்யப் பெறவேண்டும் என்பது அறிக. 322.

323. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றுஅதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

முதல் நிலையில் சிறந்த நல்லறம்,கொல்லாமையே . அதனை அடுத்த நல்லறம் பொய்யாமை போற்றி வாய்மையை மேற்கொள்ளுதல் .

குறிப்பு: கொல்லாமையையும், பொய்யாமையையும் ஓரிடத்தில் முறைப்படுத்திச் சொன்னதால் பெறப்படுவது: சொல்லில் அறம் வாய்மை; செயலில் அறம் கொல்லாமை. 323.

324. நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி.

நல்லவழி என்று சொல்லப்படுவது யாதெனில் யாதோர் உயிரையும் கொல்லக் கருதாமையேயாம். 324.

325. நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை.

பிறப்பின் துன்பம் கருதி அஞ்சித் துறந்தாருள் எல்லாம் சிறந்தவர் கொல்லாமையை மேற்கொண்டு ஒழுகுபவரேயாவர்.

துறவினால் மட்டுமே சிறப்பு வருவதன்று. கொல்லாமை மேற்கொண்டொழுகுதலே துறவிற்கும் சிறப்புத் தரக்கூடியது. 325.

326. கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது உயிர்உண்ணும் கூற்று.

கொல்லாமையைக் கடைபிடித்து ஒழுகுவோனின் வாழ்நாள் மீது உயிர்களைக் கவரும் காலன் செல்லமாட்டான்.

குறிப்பு : ''வாழ்நாள் மேல் செல்லாது உயிருண்ணுங்கூற்று'' என்றதால் இறப்பே இல்லையென்பது பொருளன்று. வாழ்நாள் நீடிக்கும் என்பதே கருத்து.

புலால் உண்ணாமையினால் மரக்கறி உணவால் ஏற்படும் மன அமைதியும் யாதோர் உயிர்க்கும் தீங்கு செய்யாமையால் பிற உயிர்களின் நல்லெண்ணமும் கிடைப்பதால் வாழ்நாள் நீட்டிக்கும் என்பதறிக. 326.

327. தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை.

ஓர் உயிரைக் கொல்லாத நிலையில், தன்னுயிர் நீக்கத்திற்குரிய சூழலே உருவானாலும் பிறிதொன்றன் இனிய உயிரை உடம்பினின்றும் பிரிக்கும் கொலையைச் செய்யற்க.

பிற மொழியிலுள்ள அறநூல்கள் ''தற்காப்புக்காகச் செய்யப் பெறும் கொலை முதலியன பாவம் அல்ல'' என்று கூறுவதை மறுத்தற் பொருட்டுத் தற்காப்புக்காகவும் கொலை செய்தல் கூடாது என்று வள்ளுவம் மறுக்கிறது.327.

328. நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை.

உயிர்க் கொலையிட்டுச் செய்யும் வேள்வியால் வரும் ஆக்கம் பெரிதேயானாலும் சான்றோர்க்குக் கொலையால் வரும் ஆக்கம் இழிவானதேயாம். 328.

329. கொலைவினையர் ஆகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

வேள்வி முதலியவற்றில் உயிர்க்கொலை செய்பவர் பகுத்தறிவில்லா மாக்கள். இந்த மாக்கள் உயர்ந்தோராகத் தம்மைக் காட்டிக் கொள்ளினும் அறிவுடையோருக்குப் புலையரே! இதனால், எந்தச் சூழ்நிலையில் எந்த வகை நோக்கம் கருதிச் செய்தாலும் கொலை குற்றமே! அயல் வழி நூல்களைப் போலக் கொலையை அறமாக்கும் விதிவிலக்கு திருக்குறளில் இல்லை.

330. உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிர்உடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

உடல் நோயிலும் வறுமையிலும் இழிதொழில் செய்து உயிர் வாழ்வதற்குக் காரணம் முன்பு உயிர்களை உடலினின்றும் பிரிக்கும் கொலைத் தொழில் செய்தமையே காரணமாகும்.

அதாவது, இம்மையிற் கொலை செய்வோர் மறுமையில் வறுமை, பிணி முதலியவற்றிற்கு ஆளாவார் என்பது கருத்து. 330.

## 34. நிலையாமை

உலகில் தோன்றி வாழும் உயிர்கள் நிலையாக உலகில் வாழ்வதில்லை.இயற்கையினாலோ, அல்லது இயற்கைக்குப் புறம்பான வழியிலோ உயிர்கள் இவ்வுலக வாழ்க்கையினின்று நீங்குதல் இயற்கையின் பாற்பட்ட நியதி. இந்த நியதியை உலகு தோன்றிய நாள் தொடங்கி வெற்றி கொண்டு வாழ்ந்தாரில்லை.வாழலாம் என்ற நம்பிக்கை தோன்றி வளர்ந்து வருவது உண்மை. ஆயினும் வாழ்க்கையின் பயனாக உருப் பெறவில்லை. அப்படியே வெற்றி பெற்றாலும் மாற்றமேயின்றி வாழ்தல் அரிது. ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்கு மாறும் மாற்றத்தைக் கூட நிலையாமை என்று கூறுதல் தவறில்லை.

இங்ஙனம் நிலையாமையை எடுத்துரைத்தல் துன்புற்று அழுதலுக்கன்று. விரைந்து தொழிற்பட்டு வாழ்க்கையின் பயனை முழுமையாக அடைய வேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டுவதற்காகவே என்பதறிக. ஆனால் இதுவரையில் நடைமுறையில் நடந்திருப்பது நிலையாமையை எண்ணி வறிதே வாழ்ந்து வறுமையை வளர்த்ததேயாகும்.

331. நில்லாத வற்றை நிலையின என்றுஉணரும்
புல்லறி வாண்மை கடை

நில்லாதனவற்றை நிலையின என்று கருதி வாழ்தல் அறியாமையில் அறியாமையாம்.

நில்லாதனவற்றை நிலையாயின என்று கருதிப் பயன்கொள்ளாது வறிதே வாழ்தல் அறியாமை என்றார். 331.

332. கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அது விளிந்தற்று.

ஒருவனுக்குப் பெருஞ்செல்வம் சேர்வதும் அச்செல்வம் இல்லாமற் போதலும் ஓர் ஆடலரங்கில் காண்போர் கூட்டம் கூடுவதும் கலைவதும் போன்றதே.

ஓர் ஆடலரங்கில் காட்சி காட்டப்படும்போது மக்கள் கூடுவர். காட்சி முடிந்தவுடன் கலைந்து சென்றுவிடுவர். இங்குக் கூடுதலும் பயன் நோக்கியதேயாம்.

ஒருவரிடம் பெருஞ்செல்வம் சேர்தலும் அச்செல்வம் இல்லாமற் போதலும் பயன் கருதியே என்று கூற முடியாது. 332.

333. அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்.

செல்வம் நிலையில்லாத தன்மையுடையது. ஆதலால் அத்தகைய நிலையில்லாத செல்வத்தை ஒருவன் பெற்றால் நிலையான அறங்களை அப்பொழுதே செய்யவேண்டும்.

நிலையில்லாதனவற்றைக் கொண்டு நிலையானவற்றைத் தேடிக் கொள்ளுதல் அறிவாண்மை என்பது கருத்து.

செல்வத்தை எளிதில் அடைய இயலாது என்பது தோன்ற 'அதுபெற்றால்' என்றார். 333.

334. நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
வாளது உணர்வார்ப் பெறின்.

ஒரு மரத்தை நூல் அளவாக அறுத்து அழிக்கும் வாளைப் போலக் காலம், ஒரு நாள் போல் சிறு அளவாகஅளந்து காட்டி வாழ்நாளை அறுத்து அழிக்கும் என்பதை அறிஞர் அறிந்து வாழ்வர்.

இன்று-நாளை- என்று ஒவ்வொரு நாளாக வாழ்நாள் முழுவதும் கழிந்து அழிகிறது என்று உணராமலே அழிதலால் 'நாள் என ஒன்று போல் காட்டி' என்றார்.

நாள் சிலவாக, செல்லுமாறு உணர்த்தாமல் செலுத்துதலால் நாள்கள் பயன்கொள்ளப்படாமல் வறிதே கழிகின்றன. அதுமட்டுமன்றி 'இன்று பொழுது போயிற்று' என்று அருமைப்பாடு தெரியாமல் வாழ்நாளைக் கழிக்கிறார்கள் என்ற இழிவு தோன்றக் கூறியதாயிற்று.

ஒவ்வொரு நாளையும் பயனுடையதாக ஆக்க வேண்டும் என்பது இக்குறளின் திரண்ட கருத்து. 334.

335. நாச்சென்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

பேசமுடியால் நாவையடக்கி விக்கல்மேல் எழுதற்கு முன் நல்லறச் செயல்களைச் செய்தல் வேண்டும்.

இவ்வுலக வாழ்க்கை நீங்குதற்குரிய அடையாளம்; நாச்செற்று விக்குள் மேல் எழுதல். அந்நிலை வரும்பொழுது அறம் சொல்லுதலும் இயலாது; அறம் செய்தலும் இயலாது. அதனால் முதுமையும் மரணமும் வருவதற்கு முன்பே அறச் செயல்களைச் செய்க என்று கூறியது. 335

336. நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு.

நேற்றிருந்த ஒருவன் இன்றில்லை என்று சொல்லக்கூடிய பெருமை உடையது இந்த உலகம்.

உலகத்தில் பிறந்தார் இறந்து போன பின்னும் உலகம் அழியாமல் இருப்பதால் உலகத்திற்குப் பெருமை என்றார். 336.

337. ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல.

அடுத்து வரும் ஒருநொடிப் பொழுதேனும் வாழ்தலை உறுதியாக அறிய இயலாத மாந்தர் பல கோடி எண்ணங்களை எண்ணுவர்.

வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுதை மதித்துப் பொருள் உடையதாக்கும் திறனில்லாதவர்கள் இந்நொடியை வறிதே கழியவிட்டு அடுத்து வரும் நொடிகளுக்கு கோடிக் கணக்கில் எண்ணமிடுவர்.

நிகழ்காலத்தை முறையாகப் பயன்படுத்தாதவர் எதிர்காலத்திற்குத் திட்டமிடுதல் பயனற்றது. முறையான நிகழ்காலத்தில் சிறப்பான எதிர்காலம் உருவாகும். 337.

338. குடம்பை தனித்துஒழிய புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு.

முட்டை தனித்துக் கிடக்க அதனுள் இருந்த குஞ்சு தனியே போனது போன்றது, உடம்புக்கும் உயிருக்கும் உள்ள உறவு.

உயிர் தற்காலிகமாகத் தங்கியிருக்கும் அளவினதே உடல் என்பது கருத்து.

குடம்பை என்பதற்குக் கூடு என்று பொருள் கொள்வாருமுளர். குஞ்சு பொரித்த பிறகு முட்டை உருவம் அழிகிறது. அதுபோல் உயிரைப் பிரிந்த உடம்பும் அழிகிறது. பறவை பிரிந்து போன கூட்டுக்கு அழிவில்லை. பிறிதொரு பறவையும் அந்தக் கூட்டில் வந்து தங்கலாம். ஆதலால் பறவைக் கூடு என்பதை விட முட்டை என்பதே பொருந்தும். 338.

339. உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

ஒருவனுக்குச் சாவு வருதல் உறக்கம் வருதலை ஒத்தது. மீண்டும் அவன் பிறத்தல் உறங்கி விழித்தலை ஒத்தது.

இத்திருக்குறள் திருவள்ளுவருக்குப் பல பிறப்புக்களில் நம்பிக்கையுண்டு என்பதற்குச் சான்று.

இறத்தலும் பிறத்தலும் தண்டனையன்று. உயிர் நிறை நலம் பெறும்

முயற்சியில் களைத்துப் போகாமல் தொடர்ந்து ஈடுபடுவதற்கேயாம்.

அன்றாட வாழ்க்கையில் களைப்பை நீக்கிச் சுறுசுறுப்பைத் தருவது போல் வாழ்க்கையில் முதுமைத் துன்பம் நீங்கி மழலை மகிழ்ச்சி ஏற்படுகிறது.

ஒவ்வொரு தடவையும் தொடக்க நிலையிலேயே முயற்சி அடையாமலிருக்கும் வகையில் கல்வி, அறிவு, உணர்வு முதலியன தொடர்ந்து உயிரைப் பற்றி வருகின்றன என்றும் ஆசிரியர் கூறுவார். 339

340. புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு.

இவ்விடம்பில் '' ஒண்டுக்குடி'' இருந்தே வரும் உயிர்க்கு நிலையாகக் குடியிருக்கும் ஓர் இல்லம் இதுவரையிலும் அமையவில்லை போலும்.

உயிர் உடம்பை விட்டு நீங்குதலால் ''ஒண்டுக்குடித்தனம்'' என்றார். பிறப்பு இறப்பில் சுழலாமல் உயிர் நிறை நலம் பெற்று இன்ப அன்பினில் (இறைவன் திருவடிக்கீழ்) தங்குதலே உயிர் நிரந்தரமாகத் தங்கக்கூடிய இல்லம் .அதனாலேயே அதற்கு ''வீடு'' என்று பெயர் வந்தது. 340.

## 35.துறவு

இந்த உலக வாழ்வியலில் காண்பனவும் கேட்பனவும் நுகர்வனவும் நிலையற்றவைகளாக இருக்கும் இயல்பினை அறிந்து, இவற்றிடத்தினில் உள்ள பற்றைத் துறத்தல், துறவு ஆகும்.

இத்துறவின் ஆக்கம் ''நான்'', ''எனது'' என்ற அகநிலைப் பற்றினையும் புறநிலைப் பற்றினையும் துறத்தல். இத்துறவு நெறி, மனம் துய்த்தலின் வழி ஏற்படுவது.

'' அப்பன்நீ அம்மைநீ ஐயனும்நீ
அன்புடைய மாமனும் மாமியும்நீ
ஒப்புடை மாதரும் ஒண்பொருளும்நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓருரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய்நீ
துணையாய் என்நெஞ்சம் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்துநீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன்நீயே.''

இத்திருப்பாடலில் ''துணையாய் என்நெஞ்சம் துறப்பிப்பாய்''என்ற சொற்றொடர் அறிக. தொல்காப்பியமும்,

''காமஞ்சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்

சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.'' என்றது.

திருவள்ளுவரும் இல்லறம் சொல்லிய பிறகே துறவறம் கூறியிருப்பதால் தொல்காப்பியம் கூறும் துறவே, திருவள்ளுவர் கூறும் துறவு எனக் கொள்ளுதல் தவறன்று.

**341. யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்.**

ஒருவன் யாதொரு பொருளின் யாதொரு பொருளின் நீங்குகிறானோ அந்தப் பொருளால் அந்தப் பொருளால் துன்பம் எய்துதல் இலன்.

துறக்க வேண்டியன பல. அவற்றையெல்லாம் ஒருசேரத் துறத்தல் இயலாதாயினும், ஒவ்வொன்றாகத் துறந்தாலும் அந்த அளவுக்குத் துன்பம் குறையும் என்பது கருத்து.

இது படிமுறையால் துறவு மனப்பான்மையை அடைய வழிகாட்டும் குறள். 341.

**342. வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்**
**ஈண்டுஇயற் பால பல.**

இணையில் இன்பம் வேண்டின் அது உண்டாகத் துறந்திடுக! அங்ஙனம் துறந்தபின் உன்னை வந்து அடையக்கூடியன பல.

துறந்தார், வெறும் ஆசைகளால் அலைக்கழிக்கப் பெறாதிருத்தலால் பல செல்வங்களை அடைவர். செல்வத்தின் பயன் அடைய வேண்டும் என்ற ஆர்வம் உடையவர் கொண்டு வந்து சேர்ப்பர். 342.

**343. அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடவேண்டும்**
**வேண்டிய எல்லாம் ஒருங்கு.**

ஐம்பொறிகளின் நுகர்வுக்குரிய புலன்களையும் தூய்மையுடையனவாகச் சமைத்தல் - பக்குவப்படுத்தல் வேண்டும். வேண்டும் என்பனவற்றையெல்லாம் ஒருங்கே விடுதல் வேண்டும்.

புலன்களின் இயக்கம் பொறிகளின் வழியது -மிருக நிலை; பொறிகளின் இயக்கம் புலன்களின் வழியது - மானிட நிலை.

புலன்களிலும் அழுக்கற்ற நிலை- இறைநிலை, அருள்நிலை.

புலன்களின் நுகர்வுகளை அறிவு, அன்பு, அருள் என்றமைத்தால் பொறிகளின் இயக்கம் தூய்மைப்படும். பொறிகள் புறத்தே செல்லாது அகநிலையிலேயே நுகர்வுகள் பெற்று அமைதி பெறும்.

''விடல் வேண்டும் வேண்டிய எல்லாம் ஒருங்கு'' என்றது

ஆசையால் வேண்டுவன ஆக்கிக் கொண்டவைகளை - தேவைகளை விட வேண்டும் என்பது கருத்து.

தேவை வேறு; வேண்டுவன வேறு. 343.

344. இயல்பாகும் நோன்பிற்குஒன்று இன்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து.

ஒரு பொருளையும் பற்றாகக் கொள்ளாமை தவத்திற்கு இயல்பு, அஃதன்றி ஓர் உடைமையிடத்துப் பற்றிருந்தாலும், அப்பற்று தவத்தைப் போக்கி விடும். அவ்வழி மயக்கமும் பொருந்தக் காரணம் ஆகும்.

"பற்று" என்பது, ஒருபொருளைப் பயன் கருதியதாக எண்ணாமல் பொருளைப் பொருளுக்காகவே விரும்புதல்.

பற்று என்பதாவது, ஒருபொருள் தவிர்க்க இயலாதது என்ற கருத்துக் கொண்டு பெற விழைதலும், பெற்றபின் இழக்க (நுகர்வு வழியில் கூட) விரும்பாமையும் ஆகும்.

மயக்கம் - எது நிலையானது என்ற கருத்தில் துணிவின்மை.

எந்த ஓர் உடைமையும் தனித்து நில்லாது. அதனைத் தொடர்ந்து பல தேவைப்படும். அதனால் ஒரு சிறு உடைமைப் பற்றுக்கூட மனிதனைப் பேராசைக்காரனாக்கி விடும். இது துறவுக்குப் பொருந்தாது.

நமது மடங்கள் உடைமைகள் அமைப்பு உடையன. இவ்வுடைமைகள் நடமாடும் கோயில்களைப் பேணவே அமைந்தன. இந்தப் பணி நடைமுறைக்கு வந்திருந்தால் மடங்களின் பெருமை உயர்ந்திருக்கும். இன்று அவை அப்பட்டமான ஒரு சுரண்டும் வர்க்கமாக அமைந்திருப்பது வருந்தத்தக்கது. 344.

345. மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்புஅறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை.

பிறப்பறுத்தலை மேற்கொண்டார்க்குக் கருவியாகிய உடம்பும் மிகையே. அங்ஙனம் இருக்க வேறு தொடர்புகள் எதற்காக?

உடம்பே மிகை என்றதால், உடம்பை இழித்துப் பேசுதல் நோக்கம் அல்ல. உடம்பை நோக்கத்துடன் கூடிய கருவியாகக் கருதாமல் அதனிடத்தில் அதிக அக்கறை காட்டி உழைக்காது பேணுதலாகிய குறிப்பிலேயே இயங்குதல் கூடாது என்பது குறிப்பு. 345.

346. யான்எனது என்னும் செறுக்குஅறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.

''நான்'' என்றும் ''எனது'' என்றும் உரிமை கொண்டாடும் வாயில்கள் வழிவரும் செருக்கை அறுத்து நீக்கியோர் வானோர் பெறுதலுக்கும் அரிய வீட்டைப் பெறுவர்.

''நான்'' ''எனது'' என்ற செருக்கு இல்லாமல் இருப்பது நல்லது. ஒரோவழி இருந்தாலும், இவற்றை உடையோம் என்ற வழி செருக்கடையக்கூடாது.

''நான்'' ''எனது'' அற்ற இடமே திருவடி ஞானநிலை என்பது துணிபு, ''நான்'' ''எனது'' என்ற உணர்வுகளால் இம்மையிலும் பயனில்லை. மறுமையிலும் பயனில்லை. ''நான்'' ''எனது'' அறுத்தலைப் பயின்று கொள்ள ஒழுக்கமாக மேற்கொள்ள ''கூட்டுறவு'' பயன்படும். ''வானோர்க்கும் உயர்ந்த உலகம்'' என்றதால் தேவருலகம் விலக்கப் பெற்றது.

''நான்''- தன்முனைப்பு. ''எனது''- உடைமை வழி ஏற்படும் முனைப்பு. 'நான்', 'எனது' உணர்வுகளைச் சாய்க்க எல்லாம் வல்ல இறைவன் செயல் என்ற கருத்தில் காலூன்ற வேண்டும். அல்லது நிறைநலம் மிக்க மக்களாட்சி -பொதுவுடைமைச் சமுதாயம் தோன்ற வேண்டும். 346.

347. பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

இருவகைப் பற்றுக்களையும் விடாமல் பற்றிக் கொண்டிருப்பாரைத் துன்பங்களும் விடாமல் பற்றிக் கொள்ளும்.

பற்று துன்பங்களின் வாயிலே. 347.

348. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

ஞான வழியில் தலைப்பட்டவர்கள் முற்றத் துறந்து விட்டனர். இங்ஙனம் முற்றத் துறக்கத் தெரியாதவர்கள் மயக்கத்தின் பாற்பட்டு ஆசைவலைகளில் சிக்கிக் கொண்டவர்கள்.

ஒன்றினைப் பிறிதொன்றாகப் பிறழ எண்ணுதல் மயக்கம். ஆசைகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து வளைத்துப் பிடித்தலால் ''வலை'' என்றார்.348.

349. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்.

பற்றுகள் அறவே நீங்கிய நிலையிலேயே பிறப்பை நீக்கலாம். பற்றும் அறாத நிலையில் நிலையாமையே காணப்படும்.

''நிலையாமை காணப்படும்'' என்றது ஆசையினால் பற்றுபவை அனைத்தும் தொடர்ச்சியாகப் பயன்தராதவை என்றுணர்த்த.

ஆசைகள் உடையாரும் ஒன்றைத் துணிந்து நிலையாகப் பற்றி வாழமாட்டார்கள். 349.

350. பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

யாதொரு பற்றுமில்லாத இறைவனைப் பற்றுக. பற்றுக்களை விடுதலுக்கு உதவியாக இறைவனைப் பற்றுக.

இறைவனைப் பற்றுதல், பற்றறுத்தலுக்காகவேயாதல் வேண்டும்: பிறவற்றை யாசித்துப் பெறுதலுக்காக இருத்தல் கூடாது என்பது கருத்து. 351.

## 36.மெய்யுணர்தல்

மெய்யுணர்தல் : உண்மை உணர்தல். இங்கு மெய்- உண்மை என்பது நிலையானது. துன்பக் கலப்பில்லாத இன்பம் எது என்று உணர்தல். பிறப்பின் காரணம்,நோக்கம், பயன் ஆகியன உணர்தல் என்றும் கூறலாம். மெய்யுணர்வு அறியும் வாழ்க்கை எப்போதும் பயன் தரும் சிறப்பான வாழ்க்கை. மெய்ம்மைக்கு- உண்மைக்கு மாறானவைகளைத் துறத்தல் என்பதால் துறவறவியலில் மெய்யுணர்தல் கூறப்பட்டது.

351. பொருள்அல்ல வற்றைப் பொருள்என்று உணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு.

உண்மையில் வாழ்க்கைக்குப் பயன்தரக்கூடியதல்லாத பொருள்களைப் பொருள் என்று உணரும் மயக்கத்தினால் இன்பந்தராத பிறப்பு உண்டு.

தமிழ் வழக்கில் ''பொருள்'' என்பது, நிலையான பயன்பாட்டுத் தகுதியுடையதையே குறிக்கும். 351.

352. இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

மயக்கம் நீங்கித் தெளிவு நிலையில் உண்மை கண்டவர்க்கு, அறியாமையாகிய இருள் நீங்கும்; இன்பமும் தரும்.

இருள் பொருள்களைக் காணாதவாறு செய்தல் போல, அறியாமை உண்மை உணர விடாமல் செய்யும். 352.

353. ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து.

ஐயம் நீங்கித் தெளிந்த நிலையில் உண்மை உணர்ந்தாருக்கு அண்மையில் இருப்பது மண்ணுலகம் அல்ல; விண்ணுலகமேயாகும்.

அறியாமையினும் கொடியது ஐயம். அதனால் ஐயத்தின் நீங்குதல் மெய்யுணர்வு வாழ்க்கைக்கு முதற்படி. 353.

354. ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்உணர்வு இல்லா தவர்க்கு.

ஐம்புலன்களையும் வென்று தம்நிலையில் இயக்கும் ஆற்றல் பெற்றாலும் பயனில்லை - செம்பொருள் உணராதவர்களுக்கு.

ஐம்புலன்களை வெல்லுதல் மட்டுமே இன்ப அன்பினைத் தராது. அதனால்தான் புலனடக்கத்தில் வெற்றி பெற்ற முனிவர்கள், வாழ்க்கையில் தோற்றுள்ளனர். புலனடங்காதார் போலத் தோற்றமளிக்கும் மனையற மாண்புடையார் வெற்றி பெற்றுள்ளனர் . கொங்கணரின் கதையறிக. 354.

355. எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

யாதொரு பொருளும் எந்த இயல்பினதாகத் தோன்றினாலும், அத்தோற்றத்தின் வழி அப்பொருளை அறியாமல்,அப்பொருளுக்குக் காரணமாக அமையும் - மெய்ந்நிலை என்ன என்று கண்டு தெளிதலே அறிவு.

பொருள்கள் நிலையாயின போலவும், இன்பந்தருவன போலவும் தோற்றமளிக்கலாம். இத்தோற்றத்தினைக் கொண்டே பொருள்களைத் துணிந்து ஏற்றுக் கொள்ளுதல் கூடாது. அப்பொருள்களின் இயல்பாய தன்மைகள் முழுதும் ஆராய்ந்து அதன் உண்மை நிலை அறிந்து ஏற்றுக் கொள்ளுதலே அறிவுடைமை. 355.

356. கற்றுஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றுஈண்டு வாரா நெறி.

இம்மண்ணுலகில் உண்மை உணர்த்தும் நூல்களைக் கற்று, உண்மைப் பொருளைக் கண்டவர்கள் பிறவா நெறியில் தலைப்படுவர். 356.

357. ஓர்த்துஉள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துஉள்ள வேண்டா பிறப்பு.

ஒருமை நிலையில் நின்று உண்மை உணர்வாருக்கு வேண்டாத பிறப்பு மீண்டும் இல்லை. 357.

358. பிறப்புஎன்னும் பேதைமை நீங்கச் சிறப்புஎன்னும்
செம்பொருள் காண்பது அறிவு.

''செம்பொருள்'' உண்மையானது; தவறாமல் பயன் தருவது என்று பொருள் கொள்ளலாம். செம்மை தருவது செம்பொருள் என்றும் கொள்ளலாம். 'செம்பொருள்', கடவுள் என்று பொருள் கொள்வாரும் உளர். 358.

359. சார்புஉணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்.

ஒருவன் தன்னுடைய பொருந்தாச் சார்புகளை உணர்ந்து, இப்பொருந்தாச் சார்புகள் கெட ஒழுகின் இந்த நல்லொழுக்கத்தை அழித்து விட்டு,துன்பங்களும் நோய்களும் வாரா.

சார்புகளே இன்ப துன்பத்திற்குக் காரணம் என்பது கருத்து.ஆதலால் பழகும் நண்பன் முதல் படிக்கும் நூல் வரை விழிப்பாக இருத்தல் அவசியம். 359.

360. காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.

காமம் வெகுளி, மயக்கம் இம்மூன்றும் பெயரளவில் கூட, சுட்டிக் காட்டக் கூட இல்லாது நீங்கின் நோயும் கெடும்.

இவையனைத்தும் தற்சார்பான நிலையில் உண்மைக்கு மாறாக இருக்கும் பொழுது தீமையே பயக்கும். 360.

## 37. அவா அறுத்தல்

அவா என்பது ஆசை. அதாவது உயிர்க்குறுதி தராத பொறிகளின் வழிப்பட்ட துய்ப்பில் ஆசை கொள்ளுதல். ஐம்பூதங்களின் சேர்க்கையால் உடலுக்கு அவா தோன்றுகிறது. இந்த அவாக்களை அறவே நீக்கினால்தான், கண்ட மெய்யுணர்வு நிலை பெறும்.

361. அவாஎன்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்புஈனும் வித்து.

எல்லா உயிர்களுக்கும் எக்காலத்திலும் கெடாது வருகின்ற பிறப்பினை விளைவிக்கின்ற வித்து அவா என்று சொல்லுவர்.

உயிர்களின் ஆசை நுகரப்பட்டேயாதல் வேண்டும் என்பது இயற்கையின் நியதி .ஆசைகள் நீங்கும்படி துய்ப்பிற்காக உயிர்கள் பிறந்தே தீரும்.

ஆசைகள் அற்ற நிலையே வீட்டுநிலை என்றும் கூறினார்.361.

362. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

ஒன்றை வேண்டிப் பெறவேண்டுமாயின் அங்ஙனம் வேண்டப்படுவது பிறவாமையே. அப்பிறவாமை வேண்டாமையை வேண்டிப் பெற்றால் வரும்.

வேண்டாமை மூலமே பிறப்பை நீக்கலாம் .பிற அறங்களால் இயலாது என்பது கருத்து. 362.

363. வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்பது இல்.

ஒரு பொருளையும் அவாவாமையை ஒக்கும் விழுமிய செல்வம் இந்த உலகத்தில் இல்லை. அதுமட்டுமல்ல, அங்கும் அவாவாமையை ஒப்பது ஒன்று இல்லை.

'ஆண்டும்' - எவ்விடத்தும் என்று கூறினும் ஒக்கும்.
'ஆண்டும்' - துறக்கத்தின்கண் என்றும் கூறுவர். இக்கருத்து பிழையன்று.

அவாவை மையமாகக் கொண்டே வறுமை கால் கொள்கிறது. அதனால் அவாவாமையைச் செல்வம் என்றார். ' செல்வம் என்பது சிந்தையின் நிறைவே ' என்றார் பிறரும். 363.

364. தூஉய்மை என்பது அவாவின்மை மற்றுஅது
வாஅய்மை வேண்ட வரும்.

தூய்மை என்று கூறப்படுவது அவாவின்மை. அவாவின்மை வாய்மையை வேண்டிப் பெறின் வரும்.

அவா, அழுக்காறு முதலியவற்றைத் தோற்றுவித்துக் கெடுக்கும். அதனால் மனத்தூய்மை வேண்டின் அவாவாமை வேண்டும். உள்ளொன்று புறமொன்று இல்லாத வாய்மை தழுவிய வாழ்க்கையை வேண்டிப் பெற்றால் அவாவாமையும் வந்து பொருந்தும். 364.

365. அற்றவர் என்பார் அவாஅற்றார் மற்றையார்
அற்றாக அற்றது இலர்.

அவா அற்றவர்களே ,பற்றற்றவர்கள் ஆவார்கள். மற்றவர்கள் முற்றாகப் பற்றற்றவர்கள் ஆகார்.

முழுதாக யாதொன்றின் கண்ணும் பற்று இல்லாதவர்களே அவா அற்றவர்கள் ஆவர். யாதானும் ஒன்றில் மட்டும் பற்றுவைத்து மற்றவற்றில் அவா இன்றி இருப்பினும் அது பற்றற்றதாகாது.ஒன்றன்மீது உள்ள அவா கூட வாழ்க்கை முழுதையும் கெடுத்து விடும்.ஓர் ஓடத்தைக் கவிழ்க்க ஓர் ஓட்டையே போதுமே. இன்றைய இந்து சமயத் துறவிகளின் வாழ்க்கையை எண்ணி உண்மை உணர்க. 365.

366. அஞ்சுவது ஓரும் அறனே ஒருவனை
வஞ்சிப்பது ஓரும் அவா.

அறமே அஞ்சத் தக்கது. ஒருவனை வஞ்சிப்பது அவனுடைய ஆசையே. அறம் மேற்கொள்ளப்பெற்றவாறு ஒழுகத் தவறினால் அந்த அறமே தீமையைச் செய்யும். ஆதலின் அறம் நோக்கியல்லவாயினும் தீமை கருதியாவது அஞ்சி அறத்தினை மேற்கொள்க என்றது.
அவாவை அஞ்சிக் காப்பதே துறவறம் என்றும் கூறுவர். இக்கருத்து பிழையன்று , ஆயினும் சிறப்புடைய பொருளன்று. அதாவது அறநெறி பிழைத்தலை அஞ்சி ஒழுகுதல் மூலம் ஆசைகளை அகற்றுதல் எளிது.
வஞ்சித்தல் - நன்மை செய்தல் போலக் காட்டி தீமை செய்தல் ஆகும். உலகின் ஆசையுறு பொருள்கள் அனைத்தும் தற்சார்பான நயப்புத் தரும் இயல்பின என்பது படிப்பினை.366

367. அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

ஒருவன் தனது ஆசைகளை முற்றாகக் கெடுக்க வல்லானாயின் ,அவன் கெடாமல் நின்று வாழ்தலுக்குரிய செயல்கள் தாம் விரும்பியவாறே வந்தடையும் . 367.

368. அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம்அஃது உண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்.

ஆசைகள் இல்லாதவர்க்குத் துன்பங்கள் இல்லை.ஆசை இருக்குமானால் துன்பம் இடையீடின்றித் தொடர்ந்து மேன்மேல் வரும்.

ஆசைப்படுவதொன்றைப் பெறாமையையே உயிர் துன்பமாகத்

துய்க்கும்.ஆசை என்பது காற்புள்ளியேயாம். முற்றுப்புள்ளியன்று.ஆதலால் துன்பம் தொடர்ச்சியாக வரும்.

369. இன்பம் இடையறாது ஈண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.

ஆசை என்று சொல்லப்படுகின்ற துன்பத்துள் துன்பம் கெடின் இன்பம் இடையறாது வந்து சேரும்.

ஆசை -அதன் அளவிலேயே துன்பமாக இருத்தலால் 'துன்பத்துள் துன்பம்' என்றார்.

'ஈண்டும்' என்பதற்கு இங்கு இம்மண்ணுலகின் என்று பொருள் கொள்ளலாம். 369.

370. ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.

ஒருக்காலும் நிறைவு பெறாத இயல்பினையுடைய ஆசையினை ஒருவன் நீக்கி விடின் அங்ஙனம் ஆசையினை நீக்கிய நிலையே இறவாத இயல்பாய நிலையினைத் தரும். ஆசைகள் அற்ற நிலையே வீடுபேறு என்பது கருத்து. 370.

## 38.ஊழ்

உயிர்கள் தமது செயல்களின் பயனை அடைந்து அனுபவிக்கும்படி செய்யும் நியதிக்கு ஊழ் என்று பெயர். அதாவது செடிகளில், மரங்களில் மலர்கள் ஊழ்த்து வெளிப்படுவதைப் போல ஒருவருடைய இன்ப துன்பங்கள் அவருடைய வாழ்க்கையிலிருந்து ஊழ்த்து உருவாகி வெளிப்படுகிறது என்பது கருத்து. செயல் என்று பொதுவாகக் கூறினாலும் சிந்தனை, எண்ணம், செயல்கள், செயல்களின் உள்நோக்கம் முதலியனவும் அடங்கும். அதாவது ஒருயிர் ஒன்றினைப் பற்றி எண்ணும்பொழுது அந்த எண்ணமே பரிணமித்து வளர்க்கும் அல்லது அழிக்கும். ஒருவன் ஆக்கத்திற்கும் அழிவிற்கும் புறச்சூழல் காரணமன்று. அவரவர் தம் எண்ணங்களும் எண்ணங்கள் வழிப்பட்ட செயல்களுமே காரணம்.

ஊழ் என்பது அவரவர்தம் படைப்பேயாதலால் அதனைத் தடம் மாற்றவோ மாற்றி அமைக்கவோ மனிதனால் முடியும். ஆனாலும் பழக்கங்களின் வழிப்பட்டவர்கள்

பழக்கங்களின்றும் விடுதலை பெறமாட்டார்கள்.அதனால் ஊழ் வலிமையாகி விடுகிறது. நாளும் சிந்தித்துப் பழக்கங்களை மாற்றிக் கொள்ளும் இயல்பினருக்கு ஊழினை மாற்றும் ஆற்றல் இருக்கும். ஆனால் சென்ற கால மனித குல வரலாற்றில் ஊழின் ஆற்றல் மிகைப்படுத்தப் பெற்று மனிதர்கள் ஊழிற்கு அடிமையாக்கப்பட்டுள்ளனர்.

காலப்போக்கில் இந்த ஊழின் தததுவத்தைப் பயன்படுத்திச் சுரண்டும் வர்க்கமும், இந்த வர்க்கத்திற்குத் துணைபோகும் சமய போதகர்களும் கொழுத்து வளர்ந்துள்ளனர். மக்களிடையில் அறியாமையும் வறுமையும் வளர்ந்தது. இந்தச் சூழ்நிலையில் தான் ஊழினை நம்பாக் கொள்கை தோன்றியது.

ஊழ் உண்டு; அது புறத்தது அல்ல; அது மனிதரில் தனிமைப்படுத்தப்பட்ட ஆற்றல் அல்ல; மனிதரின் எண்ணங்களும் செயல்களும் பழக்கங்களுமே ஊழாகின்றன. நாள்தோறும் தன்னுடைய வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கித் தவறுகளைத் திருத்திக் கொண்டு வாழும் இயல்பினருக்கு ஊழ் உறுதுணை செய்யும்.

371. ஆகுஊழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகுஊழால் தோன்றும் மடி.

நல்லூழால் முயற்சி தோன்றும். கையில் உள்ள பொருளை இழத்தற்குரிய தீயூழால் சோம்பல் தோன்றும்.

தோன்றும் - காணப்படும்; விளங்கித் தோன்றும் என்றும் பொருள் கொள்ளலாம்.

இங்ஙனம் பொருள் கொண்டால் ஒருவரிடத்தில் உள்ள முயற்சி நல்லூழையும் சோம்பல் தீயூழையும் காட்டும் என்றும் கொள்ளலாம். இதுவே அறிவியலுக்கு இசைந்த கருத்து. 371.

372. பேதைப் படுக்கும் இழவுஊழ் அறிவகற்றும்
ஆகல்ஊழ் உற்றக் கடை.

ஒருவன் தன் செல்வத்தை இழத்தற்குரிய தீயூழ் வந்துற்றபோது அவனைப் பேதையாக்கும். அவனுக்குச் செல்வம் சேர்தற்கேற்ற நல்லூழ் வந்துற்றபோது அவன் இயல்பில் பேதையாயிருந்தாலும் அறிஞனாக்கும்.

அறிவு என்பது நாள்தோறும் பெறுவது; பேணி வளர்க்கப் பெறுவது; செயல்வழி அனைத்திலும் வாழ்க்கையில் நாள்தோறும் பெறும் அனுபவங்கள் பட்டறிவாக வளர்கின்றன. இத்தகு அறிவுப் பயன்பாட்டினை அடையாமல்

வறிதே வாழ்வோர் பேதையாதல் எளிது. பேதைகள் எதையும் இழப்பர்; இருப்பதையும் இழப்பர்; இதனை இழவூழ் என்பது சரி. அதுபோலவே வாழ்க்கையின் ஒவ்வோர் அடியிலும், அறிவார்ந்த பயனடையத் தக்க வழியில் உணர்வுடன் வாழ்வோர் எதையும் அடைவர். இது ஆகலூழ்.

**373. நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்**
**உண்மை அறிவே மிகும்.**

ஒருவன் நுண்ணிய பொருள்களை உணர்த்தும் பல நூல்களைக் கற்றாலும் அவனுடைய உண்மை அறிவே மிகும்.

'' கற்பினும் '' என்றதால் கற்றவர் என்றாயிற்று. கற்றலே அறிவுடைமையைத் தராது என்ற கருத்து திருவள்ளுவருக்கு உண்டு. ஆதலால், கற்ற நூலின் கருத்தைச் செயற்பாட்டுக்குக் கொண்டு வரும் பொழுது அறிவு தோன்றுகிறது. இந்த அறிவுதான் வாழ்க்கையில் செயல்படும். 373.

**374. இருவேறு உலகத்து இயற்கை திருவேறு**
**தெள்ளியர் ஆதலும் வேறு.**

இருவேறு உலகமாக உலகத்தியற்கை அமைந்துள்ளது. அதாவது செல்வராதல், தெள்ளிய அறிஞராதல் என்ற இருவேறு நிலை.

''உலகத்து இயற்கை'' - என்றதால் இந்த இருவேறு நிலை மாற்றத்திற்குரியது என்றுணர்த்தியவாறு.

இன்று தொழில்நுட்பம் உடையார் மாட்டுச் செல்வம் இல்லை. செல்வம் உடையார் மாட்டுத் தொழில் நுட்பம் இல்லை. இன்று தொழில்நுட்பமும் அறிவும் விற்பனைப் பொருளாக, பிழைப்புக் கருதி விற்கப்படும் பொருளாக மாறி விட்டது. இன்று எந்த விஞ்ஞானியும் கோடீசுவரன் இல்லை. இது மானிடச் சாதியின் இழிநிலையைக் காட்டுகிறது. 374.

**375. நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும்**
**நல்லவாம் செல்வம் செயற்கு.**

செல்வம் தேடுவதற்கு நல்லவை எல்லாம் தீயவாம். தீயவும் நல்லவையாம். ஊழின் காரணமாக நல்லது தீயதாகலும், தீயது நல்லதாதலும் ஆம் என்று கூறுகிறது.

இன்றைய சமுதாய அமைப்பில் செல்வம் தேடும் முயற்சிக்குத் தடையாக நன்னெறிகள் உள்ளன. தீயனவெல்லாம் நன்னெறியாக உள்ளன. அதாவது, ஊழல் நிறைந்த சமுதாயமாக இருப்பதால் நன்னெறியில் நின்று ஒழுகினால் பொருள் ஈட்ட முடியாது. தீநெறிகளைப் பற்றுக் கோடாகக் கொண்டொழுகினால் செல்வத்தைச் சேர்க்கலாம்.

இஃது உலகியலின் தவறான செயல் முறையைக் கடிந்தது. 375.

376. பரியினும் ஆகாவாம் பால்அல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம.

உழைப்பின் வழி அமைந்த நல்லூழால் வந்தமைந்த பொருள்கள் எப்போதும் நீங்கா. உழைப்பால் அமைந்த நல்லூழின் வழி வந்தடையாத - உரிமையில்லாத பொருள்கள் வருந்திக் காப்பினும் நில்லா.

உழைப்பே ஊழாகிறது. ஊழே உழைப்பாகிறது. இந்தச் சுழற்சி முறையிலேயே உரிமை கால் கொள்கிறது. 376.

377. வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.

செல்வத்தைத் தேடியவன் வகுத்த வழியிலல்லாமல் கோடி தொகுத்தவர்க்கும் துய்த்தல் அரிது.

ஊழை வகுத்தான் என்றும் தெய்வம் என்றும் கூறுதல் ஏற்புடைத்தன்று.

ஒருவனின் பழக்கங்களே ஊழாக ஊழ்த்து வருவதால் ஊழினை மனிதனில் வேறுபட்டதாகவும் ஆற்றலுடையதாகவும் கூறுதல் பொருந்தாது.

பொருளைச் சேர்ப்பவர்களுக்கும் கூட நோக்கங்கள் உண்டு. அந்த நோக்கங்கள் வகையில்தான் செல்வத்தைத் துய்ப்பர். சில கோடீசுவரர்கள் தாம் எளிய வாழ்க்கையை மேற்கொண்டு, தொண்டுக்குத் தமது பொருளைச் செலவழிப்பதையும் காண்கிறோம். சிலர் பக்கத்தில் உள்ளவர்களைப் பற்றிக்கூடக் கவலைப் படாமல் தாமே சுக போகத்தில் வாழ்வதையும் காண்கிறோம். இஃது அவரவர்களும் வகுத்துக் கொண்ட கோட்பாடு. சிலர் படைப்புப் பொருள்களாகிய உடை, செருப்பு, அவற்றைப் படைத்த நோக்கத்தின் வகையிலேயே பயன்படுத்தப்படும் என்று கூறுவர்.

இது திருக்குறளின் பெருமைக்கு ஏற்ற உரையன்று. 377.

378. துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியும் எனின்.

வேண்டிய துன்பங்களை அடைவிக்காது தீயூழ் நீங்குமாயின், வறுமையின் காரணமாக நுகர்ச்சி இல்லாதார் துறப்பர்.

வறுமையின்வழித் துறத்தல் இயற்கையிலமைந்த துறவன்று. 378.

379.நன்றுஆம்கால்நல்லவாக் காண்பவர் அன்றுஆம்கால்
அல்லல் படுவது எனின்.

நல்லன விளையும் பொழுது நல்லன என்று ஒதுக்காது அனுபவிப்பவர்கள், தீயன விளையும்பொழுது அங்ஙனமே அனுபவிக்காது அல்லற்படுவது ஏன்?

ஒருவன், தன்னுடைய செயல்களின்வழி நன்மையை அடைய விரும்புகின்றனன். அங்ஙனமே தீமையை விரும்பாதது ஏன்? தாம் செய்த செயல்களின் நன்மையை நுகர்வது போலவே தீமையை நுகர்தல் கடமையன்றோ! 379

380. ஊழின் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான் முந்துறும்.

ஊழைப்போல மிகுந்த வலிமையுள்ளவை வேறு எவை உள்ளன? அந்த ஊழினை விலக்குதற்கு வேறு ஒரு வழியை ஆய்ந்து எண்ணினும் ஆங்கு அவ்வழியிலும் முற்பட்டு வந்து நிற்கும்.

"முந்துறும்'' என்றதனால் ஊழிற்கு வெற்றி கிடைக்கும் என்பது உறுதிப்படுத்தப் பெறவில்லை. 380.

(அறத்துப் பால் மூலமும் உரையும் முற்றும்)

* * * * *

## 2. பொருட்பால்

அறத்துப்பால் அகநிலைச் சார்புடையது. ஆங்கு முதலில் கடவுள் வாழ்த்தப் பெறுகிறார். பொருளியல் ஆட்சிக்குரியது அரசேயாம். ஆதலால் பொருட்பால் இறைமாட்சி அதிகாரத்துடன் தொடங்கப் பெறுகிறது.

''பொருட்பால்'' என்று இருப்பினும் பொருளாட்சிக்குரிய அரசின் நடைமுறைகள், அரசின் உறுப்புகள், அரசை வழிநடத்தும் பெரியோர், அமைச்சு முதலியன பற்றியும் அது விரிவாகப் பேசுகிறது. பெரும்பாலும் பொருட்பாலில் ஆட்சியியலைப் பற்றி மட்டுமல்லாமல் அரசியலும் எடுத்துக் கூறப்பெற்றுள்ளது.

திருக்குறள் கூறும் அரசியல், பொருளியல், சமுதாயவியல் நம்பிக்கையின்பாற்பட்டது. வாழ்வியலுக்கு இசைந்தது. இந்தியமொழிகளில் உள்ள அரசியல் நீதி நூல்கள் அனைத்திலும் சிறந்தது. திருக்குறள் கூறும் அரசியல், பொருளியல், முற்போக்கு அணியைச் சேர்ந்தவை. திருவள்ளுவர், பொதுவுடைமைத் தத்துவத்திற்குத் தந்தை என்று போற்றப்பெறும் மாமுனிவர் காரல்மார்க்சுக்கும் மூத்த சிந்தனையாளர். பொதுவுடைமைக் கருத்தின் மூலங்கள் பல திருக்குறளில் காணப்படுகின்றன.

இன்றைய இந்திய நாட்டுக்குத் திருக்குறள் கூறும் அரசியல், பொருளியல் முற்றிலும் ஏற்றவை. திருக்குறள்நெறியில் இந்திய அரசியல் இயங்குமானால் வளரும்; வாழும்.

### 39. இறைமாட்சி

அரசின்மாட்சி, அதாவது உலகியலையும் பொருளியலையும் முறைப்படுத்தி இயங்கும் அரசின் சிறப்புக் கூறுவது. அரசின் சிறப்பை இறைமாட்சி என்று சொன்னது எங்கணும் தங்கியிருக்கின்ற இறைபோல எங்கணும் தன்னுடைய ஆட்சியின் முறையைத் தங்க வைத்தும், தன் ஆட்சியின் எல்லைக்குட்பட்ட அனைத்து எல்லைகளிலும் நிகழ்வன அறிந்தும் செய்வன செய்தும் முறைப்படுத்தும் ஆற்றலுடையதாக அமைதலின்.

காலத்தின் இயல்பால் இறைவன் - அரசன் என்று கூறினாலும் முடியாட்சியை மட்டுமே சார்ந்தது திருக்குறள் என்று கருதுவதற்கில்லை. குடியாட்சி அமைவுக்குரிய கொள்கைகள் திருக்குறளில் காணப்படுகின்றன என்பதை பொருட்பால் முழுதும் கற்றால் அறியலாம்.

381. படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.

படையும் குடியும் பொருளும் அமைச்சும் நட்பும் அரணும் என்று

சொல்லப்பட்ட ஆறு உறுப்புகளையும் ஒருசேரப் பெற்று விளங்குபவன் அரசருள் ஆண் அரிமாப் போல்வான்.

குடியை முதன்மைப்படுத்தாது, படையை முதன்மைப் படுத்துவது ஏன்? குடி இயல்பாய் அமைவது. படை, தயாரிக்கப்படக்கூடிய ஒன்று. தன் நாட்டில் குடியை முறையாகப் பாதுகாக்கப் படை தேவை. அதனால், படை முதனிலைப் படுத்தப்பெற்றது.

அமைச்சு என்பது படை, குடி ,கூழ் ஆகியன பற்றிச் சிறந்த முறையில் அரசுக்கு எடுத்துக்கூறி வழிநடத்துவது. அமைச்சு அரசியல்- ஆட்சியியல் தொடர்புடையது.

நட்பு அரசனின் தனிப்பட்ட வாழ்க்கையில் பங்கேற்று, அவனுடைய திறன்கள் பெருகி வளர்வதற்கு உட்சுற்றில் அமைந்த உறுப்பு. நட்பு அரசனின் அரசியல், வாழ்வியல் இரண்டுக்கும் உறுப்பாக அமைந்து இயங்கி வழிநடத்துவது.
381.

382. அஞ்சாமை ஈகை அறிவுஊக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தர்க்கு இயல்பு.

அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் ஆகிய இந்நான்கும் குறையாதிருத்தல் அரசுக்கு இயல்பு.

அரசனுக்கு முதற்குறளில் சொன்ன படை, குடி, கூழ் , அமைச்சு, நட்பு, அரண். ஆகியவற்றைப் படைத்தல் - பாதுகாத்தல் - ஆட்சி செய்தல் ஆகியவற்றிற்குரிய இயல்புகள் இக்குறளில் எடுத்தோதப பெறுகின்றன.
382.

383. தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலன்ஆள் பவர்க்கு.

நாட்டையாளும் அரசனுக்கு அரசின் பணிகளை விரைந்து செய்யும் தன்மையும், அரசின் கடமைகள் இன்னதென அறிதற்கேற்ற கல்வி அறிவும், அரசின் கடமைகளைச் செய்து முடிக்கும் மனத்திட்பமும் நீங்காதிருத்தல் வேண்டும்.

''தூங்காமை'' என்பதற்கு உறங்காமை என்று நேரிடையாகப் பொருள் கொள்ளக்கூடாது. ஒரு செயலைச் செய்ய வேண்டிய காலத்தில் செய்யாது காலந்தாழ்த்திச் செய்வது விழித்திருந்தாலும் உறங்கினதோடு ஒக்கும்.

இங்குக் கல்வி என்று பொதுவாகக் குறிப்பிட்டிருந்தாலும் அரசியல் ஞானம் பெறுவதற்குரிய சிறப்புடைக் கல்வி என்று அறிக.

உலகியல் கல்வி - அறிவு இன்மை, விரைந்து செய்யாமை ஆகிய காரணங்களால் தோற்றவர்களை விட, துணிந்து செய்யாமையால் தோற்றவர்களே மிகுதி. வெற்றி பொருந்திய ஆட்சிக்குத் துணிவு இன்றியமையாதது.

இன்று மக்களிடத்தில் நிலவும் ஆக்கத்திற்கு எதிரான ஆசாபாசங்களை எதிர்க்கும் துணிவு அருகி இருப்பதே நாட்டின் சிக்கல்களுக்குக் காரணம். 383.

384. அறன்இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா
மானம் உடைய தரசு.

அறநெறி பிறழாது அறமல்லாதனவற்றை நீக்கி வீரத்திலும் குறைவில்லாது மானமுடையதாக விளங்குவது அரசு.

இங்கு "அறம்" என்று குறிப்பிடப் பெறுவது சமுதாய நியதியின் பொது அறங்களாகும்.

அல்லவை நீக்கி என்றதால் அறம் அல்லாதன அரசின் ஆட்சியிலும், குடிமக்கள் வாழ்வியலிலும் நிகழாவண்ணம் நீக்கி என்பது பொருள்.

அரசுக்கு மானமாவது, அறநெறி பிறழாமை, முறை கோடாமை, தன் நாட்டு மக்களுக்கு வாழ்வளித்தல் ஆகியவற்றால் ஏற்படக்கூடிய பெருமை என்பர். 384.

385. இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லது அரசு.

ஆட்சியியலுக்குரிய பொருள் வாயில்களை உருவாக்கலும், பொருளை ஈட்டுதலும் ஈட்டிய பொருளை மூலதனமாகும்வரை தொகுத்துக் காத்தலும், அங்ஙனம் காத்த மூலதனத்தை மக்களுக்குப் பயன்படும் வழியில் வகுத்துச் செலவிடுதலும் தெரிந்து செய்யக்கூடிய வன்மையுடையதே அரசு.

இயற்றலும் என்றதாவது - அரசுக்குப் பொருள் தேவை. அரசின் தேவை வளர்தல் தவிர்க்க இயலாதது. ஆதலால் மக்களிடமிருந்து வரும் வரி முதலியவற்றை மட்டுமே பொருள் வருவதற்குரிய வாயில் என்று அரசு நம்பியிராமல் புதிய வாயில்களையும் கண்டுபிடிக்க வேண்டும் என்பது கருத்து.

இதனால் உய்த்துணர்ந்து உள்நாட்டில் தொழில் வளர்ச்சி, வாணிக வளர்ச்சி ஆகியன அரசின் பொருளீட்டுதற்குரிய வாயில்கள்.

மதுவகை விற்கும் கடைகளைத் திறத்தல், பரிசுச் சீட்டுக்களை விற்றல் ஆகியன திருக்குறள் கூறும் இயற்றலாகா. இவை புதிய பொருள்களைக் கொண்டு வரும் வாயில்களல்ல. மக்களிடத்தில் அதுவும் சாதாரண ஏழைகளிடத்தில் அவர்களை மயக்கத்திற்கும், ஆசைகளுக்கும் ஆட்படுத்தி எடுத்துக் கொள்வதாகும். இதனை இயற்றல் என்று சொல்ல முடியாது. இஃது ஒரு கொள்ளையே.

பொருளை மூலதனமாக வளர்த்து முதலீடு ஆக்கி மக்களுக்கு வேலை வாய்ப்பும் ஊதியமும் அரசுக்கு ஈட்டமும் கிடைக்கத்தக்க வகையில் செய்யவேண்டும் என்பதால் காத்தல் என்றார். காலையில் வரி வாங்கி மாலையில் செலவழித்துவிட்டு அரசாங்கக் கருவூலத்தைக் காலியாக வைத்தல் சிறந்த ஆட்சி மரபன்று.

வகுத்தல் என்பது நாட்டு மக்கள் அனைவருக்கும் சமநிலையில் சென்று சேரும் வகையில் முறைப்படுத்துவது.

விளம்பரம், பொழுதுபோக்கு, முறையில்லாத முறையில் சிலரைத் திருப்திப் படுத்துதல் என்ற வகையில் எல்லாம் அரசு தன் செல்வத்தைச் செலவழிக்காது, மக்கள் விரும்பினாலும் விரும்பாது போனாலும் அவர்களுக்கு எதுநல்லதோ, அதையே செய்யக்கூடிய வன்மை அரசுக்கு வேண்டும். அதனால் ''வல்லது அரசு'' என்றார். இன்று சோசலிச சமுதாய அமைப்புடைய அரசுகள்தாம் இத்துறையில் சிறந்து விளங்குகின்றன. மற்ற அரசுகள் நெறியில்லாத நெறியில்கூட மக்களைத் திருப்திப்படுத்தவே முயலுகின்றன. 385.

386. காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்.

காட்சிக்கு எளியனாகவும், எப்பொழுதும் இன்சொல் சொல்பவனாகவும் உள்ள அரசனின் நாட்டைச் சிறந்த நாடென்று உலகம் உயர்த்திக் கூறும்.

காட்சிக்கு எளியன் என்றால் எளிதில் சென்று காணக் கூடியவனாக இருக்க வேண்டும்.

குறிப்பு: இன்று காட்சிக்கு எளியராக இருப்பது பெருமையன்று என்று கருதுபவரும் உளர்.

அரசன் தன்னிடம் முறையிடவும், குறையிரந்து கூறவும் மக்கள் வரும்பொழுது பரிவாரங்களுடன் படாடோபமாக இருந்தால் சூழ்நிலை அச்சத்தால் உள்ளதைச் சொல்லாமல் போய்விடுவர். ஆதலால், மக்களைக் காணும்பொழுது எளிய தோற்றமும் எளிமையான சூழ்நிலையும் தேவை.

நாட்டையாள்பவர் எந்தச் சூழ்நிலையிலும் யார்மாட்டும் கடுஞ்சொல் கூறலாகாது என்பது கருத்து. 386.

387.இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு.

இனிய சொல்லுடன் மக்களுக்கு வேண்டினவற்றைக் கொடுத்து அன்பாகக் காக்க வல்ல அரசனுக்கு, இவ்வுலகம் புகழையும் சேர்க்கும்; அந்த அரசன் கருதியவாறும் உலகம் அமையும். இன்சொல் என்று கூறியது சொல்லின் அளவில் மட்டுமன்று. எத்தனையோ பேர் இனிய சொற்களைக் கொட்டி அளந்து விடுவர். ஆனால், பயனைத்தான் காண முடியாது. திருக்குறள் கூறும் இன்சொல் என்பது சொல், சொல்லினைக் கூறும் குரல் அழுத்தம், சொல்லினால் உணர்த்தப் பெறும் பொருள், சொல்லினால் விளையும் விளைவு ஆகிய அனைத்தையும் தழுவியதேயாம்.

அரசற்கு ஈதல் என்பது ஒரோவழி உடனடித் தேவைக்குப் பொருள் ஈதல் என்று அமையும். ஆனால், அரசு ஈதல் என்றால் உரிய வேலை வாய்ப்பு, நலத்திட்டங்கள் என்றே பொருள் கொள்ளவேண்டும். அரசுத்துறையில் ஈதல் நிலையாக அமைதல் வேண்டும். 387.

388. முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்.

நடுநிலை உணர்வில் முடிவுகள் எடுத்து மக்களைக் காப்பாற்றும் மன்னவன் மக்களுக்குக் கடவுள் என்றே கருதப்படுவான்.

முறை செய்தலாவது:

1. உரிமையியல், குற்றவியல் வழக்குகளில் நடுநிலையில் தீர்ப்பு வழங்குதல்.

2. கல்வி, பொருள் செய்தல், மருத்துவம் ஆகிய அனைத்துத் துறையிலும் சம வாய்ப்பளித்தல்.

3. நாட்டின் பொருளை அனைவர்க்கும் அவரவர் தம் உழைப்புக் கேற்பப் பகிர்ந்து அளித்தல்.

''இறையென்று வைக்கப்படும்'' : ''இறையென்று'' என்பதால் அவன்

இறையன்று என்ற கருத்துப் பெறப்படுகிறது. அரசன் கடவுளின் பிரதிநிதி- அரசனின் ஆணை கடவுளின் ஆணை என்றெல்லாம் சொன்ன மேலைநாட்டு வழக்கையும் வடபுலத்து வழக்கையும் மறுத்தவாறு. 388.

389. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு.

தனது செவிகைப்பச் சொல்லப் பெறும் சொற்களையும் பொறுத்துக் கொள்ளும் பண்புடைய வேந்தனின் ஆட்சியின் கீழ் உலகம் தங்கும்.

செவி கைக்கும் சொற்களாவன:

1. அமைச்சர், அரசின் நெறிமுறைகளை உணர்த்தும் பொருட்டு இடித்துக் கூறவேண்டிய அவசியம் ஏற்படும்பொழுது இடித்துக் கூறும் சொற்கள்.

2. குடிமக்கள் ஆற்றாமையால் கூறும் சொற்கள்.

3. பகைவர்கள் சினமூட்டி அழிப்பதற்காகப் பயன்படுத்தக் கூடிய சொற்கள். 389.

390. கொடைஅளி செங்கோல் குடிஓம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க்கு ஒளி.

வேண்டுவன கொடுத்தல், யாவரிடத்தும் அன்பாகவிருத்தல், நேர்மையான ஆட்சி, குடிகளைப் பேணுதல் ஆகிய இந்நான்கு செயல்களையும் உடையவன் அரசருக்கெல்லாம் விளக்கு.

1. கொடை என்றது அரசின் ஆக்கத்திற்கு அறிவுரை வழங்கும் அறிஞர், சான்றோர்க்கு வழங்குதல்.

2. யாவரிடத்தும் அன்பாயிருத்தல், அதாவது, வேறுபாடு பாராட்டாது யார்மாட்டும் ஒத்த அன்பாயிருத்தல்.

3. செங்கோல்: இடம் நோக்கியோ, தகுதி நோக்கியோ வளைந்து கொடுக்காது.

4. குடிகளைப் பேணுதல் என்பது அறியாமை, வறுமை, பிணி, பகை ஆகியனவற்றால் கேடு வராமல் பாதுகாத்தல். 390.

## 40.கல்வி

குடிமக்களைத் தகுதியுடையவர்களாக்குவது ஆட்சியின் கடமை. இந்தப் பணியை இனிதே நிறைவேற்ற முதல் தேவை கல்வி. கல்வி ஆள்பவருக்கும் தேவை, ஆளப்படுவோருக்கும் தேவை. அதனால், கல்வி பொது. திருவள்ளுவருக்கு முந்திய காலத்தில் கல்வியைக் கற்றல், தனி மனிதனின் கடமையாக - பொறுப்பாக இருந்தது. திருவள்ளுவர்தான் முதன்

முதலாக ஆட்சியின் கடமைகளில் கல்வி வழங்குவதையும் ஓர் அரசியல் கடமையாகச் சேர்த்துக் கூறியவர். ஆட்சியின் திறனுக்கும், ஒழுக்கநெறி நிற்பதற்கும், வளமான வாழ்க்கை அமைவதற்கும், ஆன்மிக வாழ்க்கைக்கும் கல்வியே அடிப்படை!

391. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

படிப்பாயாக! குற்றங்கள் நீங்கப் படிப்பாயாக! படிக்க வேண்டியவற்றைப் படிப்பாயாக! படித்த பின் படித்த நெறிமுறைகளுக்கு ஏற்ப ஒழுகுவாயாக!

நாள்தோறும் கற்பது வாழ்க்கையின் இன்றியமையாக் கடமையாதலால் ''கற்க'' என்று ஆணையாகக் கூறுகிறார்.

கசடு - குற்றம். கற்கும் கல்வியின் குற்றம் என்று பொருள் கொள்வதை விட, தம் வாழ்வின் முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ள ''மனக்குற்றங்கள்'' என்று பொருள் கொள்ளுதல் சிறப்பு.

சிலர், இயற்கையிலேயே சில முறைகளில் வல்லுநராயிருப்பர். சில நிறைகள் பெற்றிருப்பர். ஆதலால் தமது முன்னேற்றத்திற்குத் தேவையான அறிவைத் தரக் கூடிய நூல்களைத் தேர்ந்தெடுத்துக் கற்க வேண்டும் என்பது கருத்து.

கற்ற நூல்கள் தந்த அறிவின் வழி ஒழுகுதல் - வாழ்தல் வேண்டும். 391.

392. எண்என்ப ஏனை எழுத்துஎன்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு.

எண்களை அடிப்படையாகக் கொண்ட கணித இயலும், எழுத்துக்களை அடிப்படையாகக் கொண்ட இலக்கியங்களும் - இவ்விரண்டும் வாழ்பவர்களுக்குக் கண்கள் போன்றவை.

பொருளியலுக்கு அடிப்படையான கணித அறிவு, பொருள்களின் பெருக்கத்திற்குத் துணை செய்வதால், கண் என்று போற்றப் பெற்றது.

வாழ்வியலின் சிறப்புக்குரிய அறங்களை உணர்த்துவதால் இலக்கியம், கண் எனப் பெற்றது.

''வாழும் உயிர்க்கு'' என்றதால், வாழாது பிழைப்பு நடத்துகிறவர்களை ஒதுக்கியவாறாயிற்று. 392.

393. கண்உடையர் என்பவர் கற்றவர் முகத்துஇரண்டு
புண்உடையர் கல்லா தவர்.

கண்ணுடையார் என்று சொல்லப்படுபவர் கற்றவரே. கல்லாதவர், முகத்திரண்டு புண்கள் உடையவர், கண்ணில்லாதவர்.

உலகியலில் காட்சிக்குப்படும் பொருள்களையும், அவை வாழ்விற்குப் பயன்படுமாற்றையும் கூர்ந்தறிந்து பயன்படுத்தத் துணை செய்வது கல்வி என்பதனால் கண் என்றார்.

கல்வியில்லாதவர், பொருள்களின் தன்மையறியாமையினால் முறைபிறழக் கண்டும் முறை பிறழ நுகர்ந்தும் அல்லற்படுவதால் அவர்களுடைய கண்ணைப் '' புண் '' என்றார். இன்பத்திற்குப் பயன்படும் தன்மையைக் கல்லாதார் கண் இழந்து விடுவதால் ''கண் அல்ல'' என்றும், மாறாகத் துன்பத்தைத் தருவதால் ''புண்'' என்றும் கூறினார். 393.

394. உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

எவர் ஒருவரும் அவர் மகிழுமாறு சென்று கூடி, பிரியுங்காலத்தில் கூடிப் பழகியவர்கள் கூடிப் பழகிய காலத்தில் பெற்ற கருத்துக்களின் சிறப்புகளை நினைந்து உள்ளத்தால் பிரிவது கற்றறிந்த அறிவுடையார் செயல்.

கற்ற அறிவு கொண்டு புலன்களைச் செப்பம் செய்து, உயர் அன்போடு பழகுபவர் ''புலவர்''.

புலன்களை உழுத நிலம் சான்றோர்- புலவர் .
உயர்ந்தோர் கூடி மகிழ்வர்; பிரிவினை விரும்பார். 394.

395. உடையார் முன் இல்லார்போல் ஏக்கங்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்.

பொருளுடையார் முன்னே செல்வமில்லாதவர் நிற்குமாறு போலக் கல்விச் செல்வமுடையோர் முன்னே, ஏக்கத்தோடு தாழ்ந்து நின்று கல்வி கற்றவரே தலையாயவர். அங்ஙனமின்றித் தாழ்ந்து நிற்றலுக்கு நாணிக் கல்லாதிருப்பவர் கடையர்.

பொருள் தேவையை இரந்தும் நிரப்பிக் கொள்ள விரும்பும் ஆர்வத்தைப் போலக் கல்வித் தேவையைப் பெறுவதற்கு யாரும் முனைவதில்லை. பொருளுக்கு இரந்து நிற்றல் தவறு. கல்விக்கு இரந்து நிற்றல் தவறன்று. 395.

396. தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்கு
கற்றனைத்து ஊறும் அறிவு.

மணலின்கண் கேணி, தோண்டிய அளவிற்குத் தண்ணீர் ஊறும். அதுபோல மக்களுக்கு அறிவு, கற்ற அளவிற்கு ஊறும்.

''தொட்டனைத் தூறும் மணற்கேணி'' என்றதால் நிலத்தடி நீரை உணர்த்தியது. கிணறு தொடுதலுக்குப் பயன்படும் கருவி. பொருள்களில் தண்ணீர் இல்லை. அதுபோல, அறிவு என்பது இயல்பாகவே ஆன்மாவிடத்தில் உயிரினிடத்தில் உண்டு. ஒருவன், தன்னிடத்தில் அமைந்துள்ள அறிவுப் புலனை, கற்பதன் மூலம் வளர்த்துக் கொள்கிறான். 396.

397. யாதானும் நாடாமால் ஊராமால் என்ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு.

கற்றவனுக்குப் பிற நாடும், பிற ஊரும் தன்நாடாம்; தன் ஊராம். அங்ஙனம் இருந்தும்கூட சாகிற வரையில் கற்காது காலத்தைக் கழிப்பது ஏன்?

''யாதானும் நாடாமால் ஊராமால்'' என்றதால் தாம் சென்று வாழும் நாட்டையும் ஊரையும் தமது நாடாகவும் ஊராவும் ஆக்கிக் கொள்ளும் திறனுடைய கல்வி என்று பொருள் கொள்ளுதல் சிறப்பு.

இத்தகு சிறப்புப் பெற்ற ஆங்கிலேயர் (இங்கிலாந்து மக்கள்) அமெரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய நாடுகளில் குடியேறி அந்தந்த நாட்டைத் தங்கள் நாடாக்கிக் கொண்டு இனிதே வாழ்கின்றனர். ஆனால் திருவள்ளுவத்தைப் பெற்ற தமிழர்கள் இலங்கையில் படுகொலை செய்யப்படுகின்றனர் ஏன்? இந்தக் குறள்நெறி தமிழர்தம் வாழ்வாக மாறாததுதான் காரணம். 397.

398. ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து.

ஒருவனுக்கு, ஒரு பிறப்பில் கற்ற கல்வி, ஏழு பிறப்பிலும் சென்று உதவி, பெருமையைத் தரும்.

கல்வியின் பயன் தொடர்ந்து கிடைக்கும். கல்வியின் பயனைத் தடை செய்யும் ஆற்றல் மரணத்திற்குக்கூட இல்லை. எழுபிறப்பும் தொடர்ந்து துணை செய்யும். 398.

399. தாம்இன் புறுவது உலகுஇன் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

சிறந்த நூல்களைக் கற்று அதனால் இன்பத்தை அனுபவிக்கிறவர்கள் அதேபோல அந்தக் கல்வியினாலாய இன்பத்தை உலகத்தவர்கள் அனுபவித்து இன்புற வேண்டும் என்று விரும்புவார்கள்.

கல்வியினாலாய இன்பம் தற்சார்புடையதாக இருக்காது. பிறர் சார்புடையதாக விளங்கும். இந்த அடிப்படையிலேயே, இலக்கியங்கள், சொற்பொழிவுகள் முதலியன தோன்றின. 399.

400. கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.

ஒருவனுக்கு அழிவில்லாத சிறந்த செல்வம் கல்வியேயாம். மற்றவை செல்வங்கள் அல்ல.

அழியாது இருப்பதாலும் பிறவிதோறும் தொடர்வதாலும் களவு முதலியனவற்றிற்கு உட்படாததாலும் பிறருக்கு வழங்கக் குறைவுபடாததாலும் ''கேடில் விழுச் செல்வம்'' என்றார். கல்வி, கற்றாரை உயர்த்துவதால் ''விழுச்செல்வம்'' என்றார். இத்தகு சிறப்புக்கள் மற்ற ''பொருள்'' முதலியவற்றிற்கு இல்லாமையால் அவை, '' செல்வம்'' அல்ல என்றார். 400.

## 41.கல்லாமை

கல்லாமை என்ற இந்த அதிகாரத்தில் கல்வி கற்காமையால் விளையக் கூடிய தீமை எடுத்துக் கூறப்பெறுகிறது. கல்வி என்ற அதிகாரத்தில் கல்வியின் தேவையை உடன்பாட்டில் எடுத்துக்கூறிய திருவள்ளுவர் இந்த அதிகாரத்தில் கல்வி இன்மையால் வரும் தீமையை எதிர்மறை முகத்தால் கூறுகிறார்.

கல்வியின் அவசியத்தை இருவகையாகவும் உணர்த்தியதாயிற்று.

401. அரங்குஇன்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூல்இன்றிக் கோட்டி கொளல்.

வட்டாட்டம் ஆடுதற்குரிய அரங்கம் இல்லாது வட்டு ஆடுதல் இயலாத ஒன்று. அதுபோலவே, நிறைந்த நூல்களை ஒருவன் கற்காது, கற்றறியாத செய்திகளின் விவாதங்களில் ஈடுபடுதல் இயலாத ஒன்று. 401.

402. கல்லாதான் சொற்கா முறுதல் முலைஇரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று.

கல்வியில்லாத ஒருவன் அவையின் முன் சொல்ல விரும்புதல் முலையிரண்டும் இல்லாத பெண், பெண் தன்மைக்குரிய காமத்தை விரும்புவதை ஒத்தது. 402.

403. கல்லா தவரும் நனிநல்லார் கற்றார்முன்
சொல்லாது இருக்கப் பெறின்.

தம் அறிவின் தகுதியின்மையை உணர்ந்து, கற்றோர் அவையில் சொல்லாது அடக்கமாயிருப்பாராயின் கல்லாதவரும் மிக நல்லவரேயாவர்.

கல்லாதவரின் சொல், பெருந்துன்பத்தைத் தருமாதலால் சொல்லாதிருத்தலே நன்று என்றார். 403

404. கல்லாதான் ஒட்பம் கழிய நன்றாயினும்
கொள்ளார் அறிவுடை யார்.

கல்லாத ஒருவனின் உயரிய கருத்து, மிகச் சிறந்ததாயினும் அறிவுடையார் அக்கருத்தினை ஏற்றுக் கொள்ளார்.

இயற்கையாக ஒரோவழி வெளிப்படும் கருத்து நுட்பம் கல்வியின்வழி வாராமையால் உறுதியும் பயன்படும் இருக்காது என்பது கருத்து. 404.

405. கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

நூல்களைக் கற்காத ஒருவன், அறிவுடையவனாகத் தன்னை மதித்துக் கொள்ளுதல் கற்றவர்களோடு உரையாடும் பொழுது சோர்வுபட்டு அவன் கல்லாமை வெளிப்படும்.

ஒன்றை உணர்த்த ஒன்றைச் சொல்லி அதனை உறுதிப்படுத்த வேறொன்றைச் சொல்ல முடியாததாலோ சொல்லப்பட்ட செய்திக்கு எதிராக ஒரு வினாத் தொடுப்பின் விடை சொல்ல முடியாது திகைத்தலாலோ சோர்வு படும் என்றார். 405.

406. உளரென்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

கல்லாதவர் உடம்போடு உள்ளார் என்று சொல்லும் அளவினராதலன்றி பிறர்க்குப் பயன்படாமையால் களர் நிலம் ஒத்தவராவர்.

களர்நிலத்தில் ஒன்றும் விளையாது. அதுபோல், கல்லாதவர் வாழ்க்கையில் ஒருபயனும் விளையாது.

இன்று வேளாண்மை வளர்ச்சியில் களர் நிலத்தை நன்னிலமாக்கும் முறை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. களர் நிலத்தில் தண்ணீரைக் கட்டி ஜிப்சம் என்ற உப்பைக் களரின் அளவுக்கேற்றவாறு கலக்கி மூன்று நாட்கள் நிறுத்தி வைத்துத் தண்ணீரை வடிய விட்டால் களர் போய்விடும். களர் நிலத்திலேயே விளையக்கூடிய 'ஒட்டுக்கால்' என்ற நெல் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

கல்லாதவரும் கற்றாரோடு உறவு கொண்டு கலந்துரையாடல் மூலம் கல்வியின்மையால் வரும் தீமையை மாற்றிக் கொண்டு பயனுடைய வாழ்க்கை வாழலாம் என்பது கருத்து. 406.

407. நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று.

நுண்ணியதாயும் மாட்சிமைப்பட்டதாயும் உள்ள பல நூல்களையும் நுணுகிக் கற்ற அறிவு இல்லாதவனுடைய எழுச்சியும் அழகும் மண்ணினால் மாட்சிமைப்படப் புனைந்தமைத்த பாவையின் எழுச்சியும் அழகும் போன்றது.

நுண்மாண் நுழைபுலம் இல்லாதார் வேண்டிய பொழுது வேண்டியன எடுத்துச் சொல்லும் உயிர்ப்பாற்றல் இல்லாதிருப்பர். பாவையைப் போல என்பது கருத்து.

நுண்மாண் நுழைபுலம் என்றது எந்த நூலினும் அல்லது காட்சியினும் மேற்பரப்பில் உள்ள செய்திகளை மட்டுமே அறிதல் கூடாது. நூலுக்குள்ளும் காட்சிக்குள்ளும் நுழைந்து உண்மையறியும் முயற்சி வேண்டும் என்பதாகும். 407.

408. நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு.

கல்லாதவரிடம் சேர்ந்த செல்வம், கற்றவரிடம் சேர்ந்த வறுமையினும் தீயதேயாகும். கல்லாதார் தங்கண் பட்ட செல்வத்தினால் தமக்கும் மற்றவர்க்கும் தீங்கே செய்வர். வறுமை வாய்ப்பட்ட நல்லவர்கள் வறுமையினால் வருந்தினரேயாயினும் தம்மையும் பாதுகாத்துக் கொள்வர். மற்றவர்க்கும் தீங்கு செய்யார்.ஈண்டு நல்லார் என்றது கற்றவரே. கற்றவர் எல்லாரும் நல்லவர் தானா என்ற வினா எழுப்பக்கூடும். பெருவழக்குப் பற்றிக் கூறியதாகக் கொள்க. 408.

409. மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு.

கல்லாதவர் மேட்டுக்குடியிற் பிறந்தராயினும் கீழ்க்குடியிற் பிறந்த கற்றவரைப் போல பெருமையுடையவர் அல்லர்.

மேட்டுக்குடியினராவது - அறிவுத்தொழில் செய்பவர், ஆட்சித் தொழில் செய்பவர், படைத் தொழில் செய்பவர், வணிகத் தொழில் செய்பவர், உழவுத் தொழில் செய்பவர், பெருஞ்செல்வர் ஆகியோர் மேலோராகவும், ஏவலர், வண்ணார், மஞ்சிகர் , பறம்பர், வீட்டு வேலைக்காரர், கூலி வேலைக்காரர் முதலியோர் கீழோராகவும் கருதப்படுதல் இயல்பு.

இங்ஙனம் தொழில்வழி மேலோர் கீழோர் என்று கருதப்பெறுவது திருவள்ளுவர் காலத்தில் சமூகத்தை அணுகும் ஒருமனப்பாங்கே தவிர இன்றுள்ளதைப் போல கடுமையான உயர்வு தாழ்வின்பாற்பட்டதல்ல.

அலுவல் நிலையிலன்றி மற்றபடி உடன் உண்ணல் , கலந்துரையாடல் உறவு கொள்ளுதல் ஆகியவை விலக்கப்பட்டவையல்ல. இது தமிழ் மரபு. இங்ஙனமின்றி பிறப்பின் வழியிலேயே மேற்பிறப்பும் கீழ்ப் பிறப்பும் அமைகிற தென்பது அயல் வழக்கு. 409.

410. விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர்.

விலங்குகளோடு மக்கள் நலம் பயப்பதில் பொதுவில் ஒத்தவர்கள் ஆயினும், விளங்கும் நூல்கள் பல கற்றவர்கள் விலங்குகளை ஒத்த மக்களினும் மேம்பட்டவர்கள். கல்லாதவர்கள் விலங்குகளின் அளவிலேயே ஒத்து நிற்பர்.

விலங்குகள் என்றால் பொதுவாக இழிவானவை என்று கருதுவது தவறு. பயன்படா விலங்குகள் இல்லை. விலங்குகளுக்குள்ள ஒரே குறை சூழ்நிலைகளை மாற்றிக் கொள்ளாமை. அது விலங்கினத்துக்குள்ள குறை. சாதாரணமாக மக்கள் கல்லாதவர்களாக இருந்தால்கூட பெரும்பகுதி

வாழ்க்கை நடத்த இயலும். அதனால் ''விலங்கொடு அனையர் மக்கள்'' என்றார். இந்தப் பொதுவிதிக்கு விலக்கு உண்டு என்பது வரலாறு தரும் செய்தி. அதாவது விலங்குகளிலும் கீழாக வாழ்பவர்களும் உண்டு. 410.

## 42. கேள்வி

அறிவைப் பெறும் வாயில்களில் கேள்வி ஒன்று. அஃதாவது அறிந்தாரிடம் கேட்டறிவது கல்வி வாயிலாக அறிவைப் பெறும் முயற்சியை விட, கேள்வி வாயிலாக அறிவை எளிதில் பெறலாம். அளவிலும் கூடுதலாகப் பெறலாம். ஆனால் நூல்களைக் கற்பதன் மூலம் பெறும் அறிவில் ஏற்படும் குறைகளைவிட கேள்வியில் குறைகள் கூடுதலாக வாய்ப்புண்டு. ஏன்? யாரிடம் கேட்கின்றோமோ அல்லது நமது செவிப்புலனுக்குச் செய்திகளைக் கொண்டு வருபவர் யாரோ அவரைப் பொருத்துக் கேள்வியின் தரம் இருக்கும்.

கல்வியைப் போல அறிவு பெறுவதற்குரிய வாயிலாகவும் அதைவிடச் சிறப்புடைய வாயிலாகவும் இருப்பதினால் கல்வியின் பின் கூறப் பெற்றது.

**411. செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்**
**செல்வத்துள் எல்லாம் தலை.**

செல்வங்களுள் செல்வம் கேள்வியறிவுச் செல்வம். கேள்வியறிவாகிய செல்வம் மற்ற செல்வங்கள் எல்லாவற்றிலும் தலையாயது.

பொதுவாக, மக்கள் அறிவுச் செல்வத்தை மண், பொன் போலச் செல்வமாக மதிப்பதில்லை. அதனால், முதலில் மக்கள் மதிக்கும் செல்வங்களின் பட்டியலில் கேள்வியறிவுச் செல்வத்தைச் சேர்ப்பதற்காகச் ''செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம்'' என்றார்.

பின் கேள்வியறிவுச் செல்வம் - மண், பொன் முதலிய செல்வங்களை விட உயர்ந்தது என்பதை வலியுறுத்த ''அச்செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை'' என்றார்.

அறிவுச் செல்வமே மற்ற பொருட் செல்வங்களை ஈட்டவும் - நுகரவும் பயன்படுதலால் ''செல்வத்துள் எல்லாம் தலை'' என்றார். 411.

**412. செவிக்குஉணவு இல்லாத போழ்து சிறிது**
**வயிற்றுக்கும் ஈயப் படும்.**

உடலை வளர்க்கும் உணவு போல, கேள்வியறிவு உயிரை வளர்ப்பது. ஆதலால், ''செவிக்குணவு''என்றார்.

உணவு கருதி கேள்விச் செல்வத்தை இழந்துவிடக்கூடாது என்ற உணர்வில் ''செவிக்குணவில்லாத போது ஈயப்படும் '' என்றார்.

வயிற்றுக்குணவைச் ''சிறிது'' என்றது - பேருண்டி நோய் தரும் என்பதனால் என்று அறிக.

வயிற்றுக்கு உணவு தராவிடில் ஒத்துழைக்காது என்ற கருத்தில் ''ஈயப்படும்'' என்றார். 412.

413. செவிஉணவில் கேள்வி யுடையார் அவிஉணவின்
ஆன்றாரோடு ஒப்பர் நிலத்து.

செவியறிவாகிய கேள்வியுடையார் வேள்வி உணவு கொள்ளும் விண்ணுலகில் உள்ள தேவரை ஒப்பர்.

''அவியுணவின் ஆன்றாரோடு ஒப்பர்'' என்றது உலக வழக்கினை யொட்டிக் கூறியது. 413.

414. கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாம் துணை.

நல்ல நூல்களைக் கற்காவிடினும் அவற்றைக் கற்றாரிடம் கேட்டறிக. அக்கேள்வியறிவு தளர்ச்சி வந்துள்ள பொழுது துணையாக அமையும்.

கற்றற்குப் பொருள் செலவு, மிகுதி காலமும் மிகத் தேவை. அவை கிடைக்காத சூழ்நிலையில் கற்கும் வாய்ப்பை இழந்திருந்தாலும் கவலற்க. நல்ல நூல்களைக் கற்றவரிடம் கேட்டறிவதன் மூலம் கற்காததினால் நேர்ந்த இழப்பை ஈடு செய்யலாம். அது மட்டுமல்ல, சிறந்தும் விளங்கலாம் என்பதாகும்.

ஆக, கல்வி வாயிலாகவோ, கேள்வி வாயிலாகவோ அறிவுச் செல்வத்தைப் பெற்றாக வேண்டும் என்று வலியுறுத்தியதாகக் கொள்க. 414.

415. இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்.

ஒழுக்கம் உடைய பெரியோர் வாய்ச் சொற்கள், வழுக்கும் நிலத்தில் நடப்பவர்க்கு ஊன்றுகோல் உதவுவது போல் - வாழ்க்கையில் வழுக்கல்கள் ஏற்படும்பொழுது உதவும்.

வழுக்கல் நிலத்தில் வழுக்கி வீழ்ந்துவிடாமல் நடந்து செல்ல ஊன்றுகோல் உதவுகிறது. அதுபோல, வழுக்கல்கள் ஏற்படக்கூடிய வாழ்க்கையில் வழுக்கி வீழ்ந்து விடாமல், செம்மாந்த நிலையில் வாழ்ந்திட ஒழுக்கமுடையோர் வாய்ச்சொற்கள் உதவும் என்றார்.

கற்ற அறிவை வாழ்க்கையில் பயன்படுத்தி வழுக்கல்களில் வீழ்ந்து விடாமல் வாழ்ந்து வெற்றி பெற்றவர்கள் ஒழுக்கமுடையோராவர். அவர்கள் வாழ்க்கை வழுக்கல்களில் விழாமல் தப்பித்து வாழ்ந்தவர்கள்.

ஆதலால், அவர்கள் சொல்லும் சொற்கள் வழுக்கலில் விழாமல் நடத்தற்குரிய அறிவைத் தரும் என்று உணர்த்தியவாறு. 415.

416. எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.

ஒருவன் எந்த அளவிலாயினும் நல்லவற்றையே கேட்கவும் ,அக்கேள்வியறிவு சிறிய அளவினதாயினும் நிறைந்த வலிமை பெற ஏதுவாகும்.

கேள்வி அறிவுச் செல்வம் அளவில் கூடுதலாக இருத்தல் வேண்டும் என்பதில்லை.''ஒரு'' சொல்லே கூட வாழ்க்கையின் மாற்றங்களுக்கு, வளர்ச்சிக்கு உதவியாக அமையக் கூடும்.

''நல்லவை கேட்க'' என்றதால் கெட்டவை கேட்கக் கூடாது என்று வலியுறுத்தியதாக அறிக.''எனைத்தானும் நல்லவை''என்றது நல்லவை அளவில் கூடுதலாகக் கிடைப்பது அரிது என்று உணர்த்த என்பது அறிக. 416.

417. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர்.

கல்வி கேள்விகளில் நிரம்பிய அறிவுச் செல்வம் உடையவர்கள் - பிழைபட்ட நிலையில் தவறாக உணர்ந்தாலும் கேட்பவர்க்குப் பேதைமை தரக்கூடிய சொற்களைக் கூறார்.

''பிழைத்துணர்ந்தும் '' என்றதனால் கல்வி கேள்விகளில் சிறந்தாரும் பிழைத்துணர்தல் கூடும் என்ற இயற்கை நியதியையும் ஆனாலும் அங்ஙனம் பிழைத்துணர்தல் அருமை என்பதனையும் ஒருசேர உணர்த்தியது அறிக.

பிழைத்துணர்ந்திருந்தாலும் பிறர்க்குச் சொல்லும் நிலைக்கு வரும் பொழுது பயனுடைய சொற்களைக் கூற வேண்டும் என்ற உணர்வில் ஆய்ந்து சொல்லுதலால் பேதைமை சொல்லார் என்றார்.

''உணர்தல் - சொல்லுதல்'' இவற்றிற்கிடையே உள்ள இடைவெளி ஆக்கத்திற்குப் பயன்பட்டது. 417.

418. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.

கேள்வியறிவால் துளைக்கப்படாத செவிகள் தம்புலனுக்கேற்ப கேட்கும் தகுதியுடையனவேயாயினும் செவிடேயாம்

செவிக்குக் கேட்டறியும் இயல்பு அமைந்தது, உயிர்க்கு ஆக்கம் தருவதாகிய அறிவினைக் கேட்டறியவேயாம். அத்தகைய பயன் விளையாத நிலையில் செவிடு என்று கூறியவாறாயிற்று.

செவிடாம் தன்மையில் கேடுகள் விளைவதைப் போலவே, நல்ல கேள்வியறிவினைக் கேட்டுப் பழகாத செவிகளாலும் கேடு விளையும் என்றுணர்த்தியவாறு. 418.

419. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது.

நுண்ணியதாகிய கேள்வியறிவில்லாதவர் பணிவான சொற்களை யுடையராதல் அரிது.

மிகவும் நுண்மையான கேள்வியறிவுச் செல்வம், கேட்டறிவதற்குரியது. அந்த அறிவுச் செல்வம் வளர்ச்சிக்குரியது என்று அறிந்தவர்கள் வணங்கியவாயினர் ஆகின்றனர்.

கல்வி கேள்விகளில் சிறந்த அறிஞரிடம் அறிவுச் செல்வத்தைக் கேட்டறிவதற்குரிய சிறந்த சாதனம் ''வணங்கிய வாயே'' யாம். அஃதாவது, பணிவுடன் அறியாதார்போல அடங்கிக் கேட்டாலே பெற முடியும் என்று கூறியவாறு.  419.

420. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்.

செவியால் நுகரப்படும் கேள்வியறிவுச் சுவையை உணராது வாயினால் உணரப்படும் சுவைகளை மட்டும் உணரும் கீழ்நிலை மாந்தர் அழிந்தால் என்ன? வாழ்ந்தால் என்ன?

செவியால் நுகரப்படும் கேள்வியறிவு உணராதார் வாழ்ந்தால் பயனில்லை, இறந்தால் இழப்பில்லை என்று உணர்த்தியவாறு. 420.

## 43.அறிவுடைமை

ஒருவனின் வளர்ச்சிக்கு அறிவுடைமையே அடிப்படை . இந்த அறிவு மூன்று வகைப்படும். 1.இயல்பாகப் பெற்றுள்ள தன்னறிவு. 2.கல்வியின் மூலம் பெறும் அறிவு. 3.கேள்வியின் மூலம் பெறும் அறிவு எனப் பெறும்.

கல்வியறிவு கேள்வியறிவை விட உயர்ந்தது; பயனுடையது. பட்டறிவு, வாழ்க்கையில் தோன்றுவது. வாழ்க்கையை வழிநடத்தக்கூடிய ஆற்றல் பட்டறிவுக்கே உண்டு. கற்கும் நூல்களும் பட்டறிவுடையோர்களால் இயற்றப் பெற்றிருப்பின் பயன் உண்டு. அதுபோலவே, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்தவர்களுடைய சொற்களும் பட்டறிவின் பாற்பட்டவையாக இருக்கும். இவைகளால் பயன் உண்டு. ஆயினும் கற்ற நூற்கருத்தும் சான்றோர்பால் கேட்ட கேள்வியும் வாழ்க்கையில் நடைமுறைக்கு வரும்பொழுதே அறிவுடைமையைப் பெற முடியும்.

அறிவு என்பது நோக்கம். அறிதல், ஆய்வு செய்தல் ஆகியவை வழியாக அடையக் கூடியது. கல்வி , கேள்விகளின் மூலம் பெறும் அறிவு தகவலறிவு (Knowledge) . தன்னைச் சுற்றி நிகழும் நிகழ்வுகளை உய்த்தறிந்து தனக்குச் சாதகமாக ஆக்கிக் கொள்ளும் அறிவுச் செயற்பாட்டுக்குப் புத்திக் கூர்மை(Intelligence) என்று பெயர். அறிவு வளர்ந்து செழித்த நிலையில் அறிவுமயமாகி வாழ்தல் ஞானம்(Wisdom). இந்தக் கடைசி நிலையே வாழ்க்கையின் நோக்கம்; பயன்.

**421. அறிவற்றங் காக்கும் கருவி செறுவார்க்கும்**
**உள்ளழிக்க லாகா அரண்.**

ஒருவருக்கு அழிவு வராமல் காக்கும் கருவி, அறிவு. அறிவு, பகைவராலும் அழிக்க முடியாத உள்ளரணாகும்.

அறிவு மனிதரைத் துன்பத்திலிருந்து காக்கும் கருவி. 421

422.சென்ற இடத்தால் செலவிடாது தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு.

மனத்தை, அது சென்றவிடத்திலெல்லாம் செல்ல விடாது தீய வழியிலிருந்து மனத்தை இழுத்து நல்ல வழியில் செலுத்துவது அறிவாம்.

''தீதொரீஇ'' - என்றதால் மனம் இயல்பாகச் சென்ற இடம் தீய வழியில் என்பது பெறப்பட்டது. ''நன்றின்பால் உய்ப்பது'' - என்றதால் மனத்தை நன்மையின்பால் செலுத்த முயற்சி தேவை என்று உணர்த்தியவாறு அறிக. 421.

423. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

எப்பொருள் எவரெவர் சொல்லக் கேட்பினும், அப்பொருளின் உண்மையான பொருளைக் காணவல்லது அறிவு.

''யார், யார் வாய்க் கேட்பினும்'' என்றதால் சொல்லுபவரின் தகுதி பற்றி ஆராயாமல் அல்லது ஏற்காமல், கேட்கப்படும் செய்தி பற்றியே முடிவு கொள்க என்று உணர்த்தியவாறு. 422.

424. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறவாய்
நுண்பொருள் காண்பது அறிவு.

பிறர்க்குச் சொல்லும்பொழுது, அவர் ஆராயத்தக்க வகையில் எண்ணத்தைத் தூண்டி, அவர் கொள்ளத்தக்க வகையில் எளிமையாகச் சொல்லி, தாம் பிறர்வாய்க் கேட்கும்பொழுது நுண்பொருளை அறிவது அறிவு. 424.

425. உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்லது அறிவு.

உலகம் தழுவியது நல்லறிவு. சார்புகள் கருதியும், நன்மை - தீமை கருதியும் தளர்தலுமின்றி ஒருநிலையாய் நிற்பது அறிவு.

அறிவு உலகம் தழுவியது. அறியாமை சிற்றெல்லையுட் சுழல்வது. 425.

426. எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு.

உலகம் எந்த நிலையில் நின்று ஒழுகுகின்றதோ, அதே நிலையில் நின்று உலகத்தோடியைந்து ஒழுகுதல் அறிவு. 426.

427. அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார்
அஃதுஅறி கல்லா தவர்.

அறிவுடையார் நடக்க வேண்டியதை அறிந்து செய்வர். அறிவில்லாதவர் அதனை அறிய ஆற்றலில்லாதவர்.

எதிர்வருங்காலத்தில் நடக்க வேண்டியவற்றை அறிந்து செய்தலே அறிவுடைமை.

சென்ற காலத்திய நிகழ்வுகளைக் குறித்து மகிழ்வோ, துன்பமோ அடைதல் அறிவுடைமையல்ல. 427.

428. அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்.

அஞ்ச வேண்டியதற்கு அஞ்சாமை பேதைமையாம். அஞ்ச வேண்டியதற்கு அஞ்சுவது அறிவுடையார் செயல்.

போரினால் விளையும் துன்பத்திற்கு அஞ்சி, அறவழி மேற்கொள்வது அறிவுடைமை. போரினால் விளையும் இழப்புகள் - துன்பங்கள் பற்றிக் கவலைப்படாமல் துப்பாக்கி தூக்குவது அறிவிலார் தொழில். 428.

429. எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை
அதிர வருவதோர் நோய்.

எதிர்வரும் காலத்தில் வரக்கூடியதை முன்னரே அறிந்து தம்மைக் காத்துக் கொள்ளும் அறிவுடையோர்க்கு, அவர் அஞ்சி நடுங்கக்கூடிய துன்பம் யாதொன்றும் இல்லை.

''அதிர வருவதோர் நோய்'' என்றதால் துன்பம் வரலாம். அது எதிர்பார்த்து இருந்த ஒன்று. ஆதலால், தாக்காது என்பது கருத்து. 429

430. அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்.

அறிவு உடையார் எல்லாம் உடையார். அறிவு இல்லாதவர் பிறவெல்லாம் பெற்றிருந்தாலும் ஒன்றும் பெறாதவரேயாவர்.

பொருள் முதலியன பயனுற, அறிவு தேவை என்பதறிக. 430.

## 44.குற்றங்கடிதல்

உயிரியல் வாழ்க்கையின் நோக்கம், குற்றங்களின்று விடுபெறுதல்! நிறை நலம் பெறுதல். குற்றங்கள் நீங்கினாலேயே அறிவு வளரும். ஆளுமை

வளரும். குற்றங்கள் பொருந்திய வாழ்க்கை துன்பத்திற்கே காரணமாகும். ஆதலால், குற்றம் கடிதல் வாழ்க்கையின் நோக்கங்களுள் ஒன்று. அதுவே வாழ்க்கையின் பயனுமாகும்.

குற்றங்கள் இருவகையின. ஒன்று, புலன்களில் உள்ள குற்றங்கள்; பிறிதொன்று புலன்களில் வளர்ந்த குற்றங்கள். அதாவது பொறிகள் வாயிலாக வெளிப்படும் குற்றங்கள்.

புலன்களில் தாக்கித் துன்பம் தரும் குற்றங்களாவன: அறியாமை, அழுக்காறு, ஆசை, வெஃகுதல், பகை பாராட்டல், அன்பின்மை, எழுச்சியின்மை, சோம்பல் முதலியன.

பொறிகள் வாயிலாக வெளிப்படும் குற்றங்களாவன : புறம் பேசுதல், பயனில சொல் பாராட்டுதல், அடக்கமின்மை, செயலின்மை, களவு , வெகுளி, கொலை முதலியன.

இக்குற்றங்கள் நீங்கினாலேயே தனி மனிதன் வாழ்வில் சிறப்புத் தோன்றும். வாழ்வாங்கு வாழ இயலும். கடிதல் என்றது, கண்ணோட்டமின்றி இக்குறைகளைக் கடிந்து ஒதுக்க வேண்டும் என்று வற்புறுத்தவேயாம்.

431. செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

தன்முனைப்பும் (அகங்காரமும்) வெகுளியும், சின்னத்தனங்களும் இல்லாதவரின் செல்வம் மேம்பாட்டுத் தன்மை உடையது.

செருக்குடையார் மற்றவர்களை மதிக்கமாட்டார். அவ்வழி விரிந்த - பரந்த அறிவும் கிடைக்காமல் போகும். சூழ்ந்து துணை செய்வாரும் இல்லாமல் போவர்.

சினம் - வெகுளி உறவினர்களை நண்பர்களைப் பிரிக்கும். ஆக்கமும் தராது. மாறாகக் கேடு பல தரும்.

''சிறுமை'' - கழிகாமம் என்று கூறுவர். அதாவது தகுதி, தேவை இவைகளுக்குத் தொடர்பில்லாது காமுறுதல். இந்த இயல்பு கீழ்மக்களிடத்தில் இருத்தலால் சிறுமை என்று கூறப் பெற்றது என்பர்.

சிறுமை : சின்னத்தனம். மானிடத் தகுதிக்கேற்ப ஒழுகாது, சின்னத்தனத்துடன் உயர்வுடையாருக்கும் சிறுமை செய்து பழகுவது சிறுமையாகும்.

செருக்கு, சினம், சிறுமை ஆகியனஉயிர்நலம் கெடுப்பவை மட்டும் அல்ல; உடல்நலத்தையும் கெடுப்பவை; செல்வத்தையும் அழிப்பவை. 431.

432. இவறலும் மாண்புஇறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு.

உலோபமும், மாண்பு இழத்தலைச் செய்யும் தவறான தன்மானமும், அளவிறந்த மகிழ்ச்சியும் ஆள்வோருக்குக் குற்றங்களாகும்.

உலோபம் : செய்ய வேண்டியதைச் செய்யாமல் மிச்சப்படுத்துதல்.

உலோபம் - தரித்திரப் புத்தி.

தவறான தன்மானமாவது: நமக்கு உறுதுணையாயிருப்பவர்களிடம் இருக்கக்கூடியவர்களிடம் தன்மானம் பாராட்டி, இணங்கி விட்டுக் கொடுத்துப் போகாமல் ஒதுங்குதல்; உயர்த்திக் கொள்ளுதலாகும்.

அளவிறந்த மகிழ்ச்சியால் செய்ய வேண்டிய பணிகள் தடைப்படும். ஆதலால் அளவிறந்த மகிழ்ச்சி கூடாது. ஆள்வோர் அளவிறந்த மகிழ்ச்சி கொண்டால் ஆட்சியில் சோர்வர். ஆள்வோர் அளவிறந்த மகிழ்ச்சி கொள்ளும் சூழ்நிலையைத் தீயவர்கள் அறிந்து கொண்டால், அம்மகிழ்ச்சியை வாயிலாகக் கொண்டு பகை முடிப்பர். அதனால் தவிர்க்கவும் என்றார். 432.

433. தினைத்துணையாக் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

பழிக்கு அஞ்சுபவர்கள் தம்மிடம் தினையளவு குற்றம் வரினும் அதனைப் பனையளவு பெரிதெனக் கருதுவர்.

குற்றத்திற்குச் சிறியது - பெரியது என்ற வேறுபாடு இல்லாமல் பழிக்கு அஞ்சுபவர் நாணுவர் என்பது கருத்து.

இன்று பனைத்துணையளவு குற்றங்கள் கூட, தினையளவாகக் கருதப் பெறும் கீழ்மை வளர்ந்துள்ளது. 433.

434. குற்றமே காக்க பொருளாக குற்றமே
அற்றம் தரூஉம் பகை.

தனக்கு அழிவை உண்டாக்கும் பகை, தன்னிடமுள்ள குற்றமே. ஆதலால், தன்னிடத்துக் குற்றம் வராமையைப் பொருளாகக் கொண்டு காக்கவும்.

யாரையும், பகை அழித்தலை விட அவரவர் குற்றமே அழித்து விடும் என்பது கருத்து. 434.

435. வருமுன் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

குற்றம் நேர்வதற்கு முன்பே அதையறிந்து தடுக்காத அரசனது வாழ்க்கை, அது நேர்ந்தவுடன் நெருப்பு முகத்து நின்ற வைக்கோற்போர் போல அழிந்துவிடும். 435.

436. தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு.

முன்பு, தன் குற்றத்தைக் கண்டு அதை நீக்கிவிட்டுப் பின்பு பிறர் குற்றத்தைக் காண வல்லனாயின் அரசனுக்கு வரக்கூடிய குற்றம் யாது? ஒன்றுமில்லை.

இஃது ஒரு சிறந்த குறள். நாடாள்வோருக்குச் சொன்ன குறள். ஆள்வோரிடம் உள்ள குற்றங்களே மக்களிடம் குற்றங்களாக இடம் பெறுகின்றன. ஆதலால் மக்களிடமுள்ள குற்றங்களை நீக்கத் தண்டனை கொடுக்கும் அரசு அல்லது நீக்க முயலும் அரசு முதலில் மக்களிடம் குற்றம் தோன்றி வளர்வதற்குக் காரணமான, தம்மிடம் உள்ள குற்றங்களை நீக்கிக் கொள்வதால் ஆட்சி சீராக அமையும்; புகழ் வந்தமையும்; யாதொரு இழப்பும் இல்லை என்றவாறு. 436.

437. செயற்பால செய்யாது இவறியான் செல்வம்
உயற்பாலது அன்றிக் கெடும்.

செய்ய வேண்டியவற்றைச் செய்யாது உலோபம் செய்தவனது செல்வம் பாதுகாப்பு இல்லாது கெடும்.

செல்வம் தேக்கத் தன்மையுடையதன்று; அறம் செய்தல், துய்த்தல் ஆகிய செயற்பாட்டினை நோக்கியதே செல்வம்.

செல்வத்திற்குரிய செயற்பாடுகள், பெற்றசெல்வம் கொண்டு முதலீடு செய்து, மேலும் செய்தலாகிய பொருள் செயல் நிலை.

உற்றார், உறவினர், வறியர் ஆகியோருக்குத் துய்ப்பன வழங்கி வாழ்வித்தல் அறச்செயல்.

தாம் துய்ப்பன துய்த்து முறையாக வாழ்தல் வாழ்நிலைச் செயல், கலையும், இசையும் வளர்த்து இன்புறுதல் இன்ப நிலைச் செயல்.

செல்வம் அழிதலாவது: பயன்பாடு இல்லாமையால் அழிந்தது போலக் கருதுதல் என்று கொள்ளப் பெறும்.

செல்வம் பலவகையின. ஆதலால் களவு போதல், இயற்கைச் சூழலால் அழிதல் ஆகியனவும் எண்ணப்பட வேண்டும்.

ஒருவர் செல்வத்தின் பயனைத் துய்த்து மகிழாமலே - புகழ் பெறாமலே இறந்து போனாலும் அவரைப் பொறுத்தவரையில் செல்வம் அழிந்தது போலத்தானே! 437.

438. பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன்று அன்று.

செல்வத்திடம் உள்ள பற்றின் காரணமாகச் செய்யும் உலோபத்தனம் எந்தக் குற்றங்களுடனும் வைத்து எண்ணக் கூடிய சாதாரண குற்றமன்று. உலோபத்தனம் தனித்தன்மையுடைய குற்றம். வாழ்க்கையைப் பாழாக்கும்

குற்றங்களில் கஞ்சத்தனமும் ஒன்று அன்று; அக்குற்றங்களிலும் மிக்குடையது கஞ்சத்தனம்.

கஞ்சத்தனம் பல நற்குணங்களைக் கெடுப்பதோடன்றிப் பல புதிய தீக்குணங்களையும் தோற்றுவித்து அழிவையே கொண்டு வந்து சேர்ப்பதால் கஞ்சத்தனத்தைத் தனிமைப்படுத்திக் கூறினார். 438.

439. வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

ஆள்வோர் தன்னைத்தானே மெச்சிக் கொள்ளாதிருக்கவும், நன்மை தராத செயல்களை விரும்பாதிருக்கவும் வேண்டும். அறிவு ஆற்றல் முதலியவற்றில் சிறந்து விளங்கினாலும் தம்மைத்தாமே வியந்து பாராட்டிக் கொள்ளுதல் கூடாது. இஃது அரசருக்கு ஆள்வோருக்குரியதேனும் எல்லோருக்கும் உரியதேயாம்.

தம் அறிவு ஆற்றல் முதலியவற்றை வியந்து கொள்பவர்களுக்கு, மற்றவர்களிடம் உள்ளதை ஒப்பு நோக்கி அறிந்து பெறும் வாய்ப்பு இல்லாமல் போகும். ஆதலால் தம்மை மெச்சிக் கொள்ளக் கூடாது. அதோடு தம்மைத் தாமே வியந்து கொள்ளும் நிலையால் மேலும் வளர்ச்சி அமையாது என்பதுவும் அறிக. தம்மைத்தாமே வியந்து கொள்பவர்கள் பெருமித உணர்வால் விழிப்பு நிலை இழந்து முற்காப்புச் செயலிழப்பர். செயல்கள் என்றாலே நன்மை நோக்குடையன என்பது பொது விதி. தனக்கும் மற்றவர்க்கும் நன்மை பயக்காத செயல்களை நினைத்தலும் செய்தலும் கூடாது. நன்மை தரும் செயல்களே வாழ்நிலையை நிர்ணயிக்கக் கூடியன என்பதறிக. 439.

440. காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்.

நாடாள்பவர் தம்முடைய விருப்பங்களை மற்றவர் அறியாமல் அனுபவித்தால் பகைவர்களின் சூழ்ச்சி பயனற்றுப் போகும்.

பகைவர், ஆள்வோரிடம் உள்ள பெருவிருப்பங்களை (பித்துப் பிடித்த நிலையினவற்றை) அறிந்து கொண்டால் அவைகளை வழங்கும் முயற்சியில் பகையும் முடிப்பர் என்பது வரலாற்று உண்மை. தமிழகத்தை ஆண்ட மூவேந்தர் வீழ்ச்சியில் இக்குறள் கருத்தும் அமைந்தது என்பது உய்த்துணர்க. 440.

## 45. பெரியாரைத் துணைக்கோடல்

யாரொருவரும் தனியே வாழ்ந்து வெற்றி பெறுதல் இயலாது; துணை வேண்டும். துணையைப் பெறுவது வாழ்க்கையில் முன்னேறுவதற்காம். அங்ஙனமாயின் தம்மினும் வளர்ந்த பெரியோரையே

துணையாகக் கொள்ள வேண்டும். அறிவிலும் ஆள்வினைத் திறத்திலும் சீலத்திலும் உயர்ந்து விளங்கும் பெரியோர் ஒருவரைத் துணையாகக் கொள்ள வேண்டும். ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர்களுக்குப் பெரியோர் துணை இன்றியமையாதது. பெரியோர்துணையும்அவர்தம் ஆய்வுரைகளும் விமர்சனங்களும் பல தவறுகள் நிகழாமல் தடுத்து விடும் என்பது அறிக.

441. அறன்அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறன்அறிந்து தேர்ந்து கொளல்.

அறத்தின் இயல்பை அறிந்து மூத்து வளர்ந்த அறிவுடையோரது நட்பைத் தரம் அறிந்து ஆய்வு செய்து தழுவிக் கொள்க.

''மூத்த அறிவுடையோர்''- என்றது பட்டறிவு மிகுதியும் இருக்கும் என்ற அடிப்படையில்.

திறனறிந்து தேர்ந்து கொளல் என்றது, தமக்குப் பயன்படுமாறு அறிந்து கொள்க என்றவாறு. 441.

442. உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

நேர்ந்த துன்பங்களை நீக்கி, அதே துன்பம் பிறிது வராமல் முற்காக்கும் தன்மையுடையோரைப் பேணிக்கொள்க.

''பேணிக் கொள்க'' என்றதால், அவர் மகிழ்வன செய்து கொள்க என்று உணர்த்தியது. 442.

443. அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

அருமையானவற்றுள் எல்லாம் அருமையானது பெரியோரைச் சுற்றமாகக் கொள்ளுதல்.

அருமை - கிடைத்தற்கரியது.

நம்மில் பெரியோர் கிடைத்தலரிது.அதனால் அருமை என்றார். 443.

444. தம்மில் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை.

தம்மைவிடப் பல்லாற்றானும் பெரியாராக இருப்பவர் தமக்குச் சுற்றத்தினராகும்படி அவர்தம் வழிநின்று ஒழுகுதல் வலிமைகளுள் எல்லாம் தலையாய வலிமையாகும். 444.

445. சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

மன்னன், தம்மைச் சூழ்ந்திருப்பாரைக் கண்ணாகக் கொண்டு ஒழுகும் இயல்பு அமைந்திருத்தலால் மன்னன் யாரைச் சூழ்வாராகக் கொள்ள வேண்டுமோ அவர்களைச் சூழ்ந்து கொள்க.

ஆட்சிப்பொறுப்பில் உள்ளோர் தொழில் சுமை, காரணமாக யாவற்றையும் ஆராய்ந்து செய்யும் வாய்ப்பின்றி, தம்முடைய அமைச்சர்கள், துணைவர்களைக் கண்ணாகக் கொண்டு அவர்கள் கண்கள் வழி பார்த்துச் செயற்பட வேண்டியிருப்பதால் தக்காரைச் சூழ்ந்து கொள்ளல் கடமை என்றவாறு. 445.

446. தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்தது இல்.

தக்காரைச் சுற்றமாக உடையவனாகி, அவர்தம் வழியில் ஒழுகும் வன்மை உடையவனுக்கு, பகைவர் செய்யக்கூடிய தீங்கு ஒன்றும் இல்லை என்றது. 446.

447. இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்கும் தகைமை யவர்.

குற்றங் கண்டவிடத்து வன்மையாய்க் கடிந்து கூறும் ஒருவரைத் துணையாகப் பெற்று வாழ்வாரைக் கெடுக்கும் திறமையுடையார் யார்? ஒருவரும் இல்லை.

குற்றங்கண்டவிடத்துப் பொறுத்துப் போதல் என்பது வளர்க்கும் இயல்பன்று. குற்றங்கண்டவிடத்து இடித்துரைத்து விமர்சனம் செய்தலே வாழ்க்கையை வளர்க்கும்; பேராபத்துக்களிலிருந்து பாதுகாக்கும். 447.

448. இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

குற்றங்கண்டவிடத்துக் கடிந்துரைப்பாரைத் துணையாகப் பெறாத ஆட்சியாளர், கெடுக்கும் பகைவர் இல்லாமல் தாமே கெடுவர்.

விமர்சனங்கள், விபத்துக்களில் இருந்து பாதுகாக்கும்; மேலும் வளர்ச்சியைத் தரும். 448.

449. முதல்இலார்க்கு ஊதியம் இல்லை மதலையாம்
சார்புஇலார்க்கு இல்லை நிலை.

முதற் பொருள் இல்லார்க்கு ஊதியம் ஆக்கம் இல்லை. அதுபோலத் தம்மைத் தாங்கி நிற்கக்கூடிய சார்பு பெறாதவர்களின் ஆட்சியுரிமை நிலையாக அமையாது.

முதல் போட்டுத் தொழில் செய்யும்பொழுது தம் உழைப்பிற்கேற்ப ஊதியம் பெறுதலே - எடுத்துக் கொள்ளுதலே முறை. அதனால் திருவள்ளுவர் ஊதியம் என்றார். ''ஊதியம்'' என்ற சொல்லுக்கு ''லாபம்'' என்று பொருள் கூறுவது பொருந்தாதது மட்டுமன்று; தவறு. ''லாபம்'' பார்த்தல் பண்பட்ட பழக்கமல்ல.

ஆட்சிப் பொறுப்பிற்குச் சோர்வுகள் வருவது தவிர்க்க இயலாதது இயற்கை. அங்ஙனம் சோர்வு வரும்பொழுது தாங்கிப் பிடித்தல் வேண்டும். அங்ஙனம் தாங்கிப் பிடிப்பவரே பெரியார். 449.

450. பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

ஆட்சியாளர்கள் நல்லவர்களின் நட்பைக் கைவிடுதல் பலரோடு பகை கொள்ளுதலினும் பதின்மடங்கு துன்பத்தைத் தரும்.

நல்லார் தொடர்பு நீங்குவதால், அவர்கள் யாதொரு தீங்கும் செய்யார். ஆனால் அறிவு, ஆக்கம் பெறும் வாயில்கள் அடைபட்டுப் போதலால் துன்பம் வரும் என்றவாறு. 450.

## 46. சிற்றினம் சேராமை

ஒருவரோடு ஒருவர் சேர்தல் வாழ்க்கையில் உயர்நிலை பெறுதலுக்கேயாம்; களித்து மகிழ்தலுக்காகவன்று. இதனால் களித்து மகிழ்தல் கூடாது என்று விளக்கியதாகக் கருதல் வேண்டா. பெரியோர் கூட்டினால் பக்தியில், இலக்கியச் சுவையில், உயர்நிலை ஆய்வில் களித்தல் நிகழும். இஃது வரவேற்கத்தக்கது. அதனால், ''பெரியோரைத் துணைக்கோடல்'' கூறினார். பெரியோர் துணை முயன்று பெறக் கூடியது என்பதனால் முதன்மை நிலையிலும் - கோடல் என்று கூறினார். பெரியோர் துணை இருந்தால் ஆக்கம்.

அடுத்து, சிற்றினம் சேராமை கூறுகிறார். ''சிற்றினம்'' வலிந்த முயற்சிகளின்றியும் கிடைக்கக்கூடிய ஒன்று. சிற்றினத்தை விலக்கவே கடின முயற்சி தேவை. சிறியோர் யார்? பெரியோரல்லாதவர் சிறியோர் என்று கருதலாம். கள்குடியர், சூதாடிகள், வஞ்சகர், கொலைஞர், தன்னலக்காரர், புறந்தூற்றுவோர், இச்சை மொழிகள் பேசிடுவோர், உண்மைகளை மறுப்போர், விதண்டாவாதம் செய்வோர், உழைக்காமல் உண்போர், கடமையைப் புறக்கணிப்போர், காலக்கொலை செய்வோர் என அடுக்கிக் கொண்டே போகலாம். சிறியாரோடு சேர்பவர்கள் தம் சிறப்புக்களை இழப்பர். அதோடு

இழிநிலைகளையும் அடைவர். அவர்களுக்குப் பெரியோர் துணையும் கிடைக்காது. ஒரோவழி இருந்தாலும் பயன் தராது.

ஒருவருடைய ஒழுக்கமும் உயர்வுகளும் திறன்களும் அவருடைய சூழ்நிலையைப் பொறுத்தவை என்பது அவ்விரு அதிகாரங்களால் பெறப்படுகிறது. இந்தக் கருத்து மார்க்சியத்திற்கும் உண்டு.

451. சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

பெரியோர், சிறியோர் கூட்டத்திற்கு அஞ்சுவர். சிறியோரே சிறியோர் கூட்டத்தைக் கண்டவுடன் சுற்றமாகத் தழுவிக் கொள்வர்.

பெரியோர் அஞ்சுவதற்குரியது சிற்றினம். சிற்றினம் அஞ்சுவதற்கும் அஞ்சாமையே மேற்கொள்ளும் என்பது கருத்து. 451.

452. நிலத்துஇயல்பால் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு
இனத்துஇயல்பது ஆகும் அறிவு.

தண்ணீரானது தான் சேர்ந்த நிலத்தின் இயல்பினால் தன் தன்மையிலிருந்து வேறுபட்டு அந்நிலத்தின் தன்மையை அடையும். அதுபோலவே மாந்தரது அறிவும் அவர் சேர்ந்த இனத்தின் இயல்பினால் தன் தன்மை வேறுபட்டு அவ்வினத்தின் தன்மையதாக அமையும். சார்புகளால் மானிட வாழ்க்கை ஆக்கம் பெறும் அல்லது கெடும் என்பதறிக.

453. மனத்தான்ஆம் மாந்தர்க்கு உணர்ச்சி இனத்தான்ஆம்
இன்னான் எனப்படும் சொல்.

மாந்தர்க்கு ஏற்படும் உணர்ச்சி மனத்தின் காரணமாக ஏற்படும்.
பிறரால் சுட்டிச் சொல்லப் பெறும் சொல், இனத்தால் உண்டாகும்.

மனம், உணர்ச்சியின் களமே தவிர,தன்மைகளுக்குரிய களமும் அன்று. கருவியும் அன்று. இம்மனத்தின் விடயங்களைத் தரும் புற உலகமே உணர்ச்சிகளைத் தோற்றுவிக்கிறது. புற நிலையில் மனம் பற்றும் சார்புகளைப் பொறுத்தே நல்லவன் - கெட்டவன் என்ற பெயர் என்பது கருத்து. 453.

454. மனத்து உளதுபோலக் காட்டி ஒருவற்கு
இனத்துஉள தாகும் அறிவு.

ஒருவனுக்கு அவன் மனத்தின்கண்ணேயுளதாவது போல் காட்சியளவில் பிறருக்குக் காண்பித்து - ஆனால், உண்மையில் அவன் சேர்ந்த இனத்தின் கண்ணே உண்டாவது அறிவு.

ஒருவர் தோற்றத்தில் ஒருவரே. ஆயினும் அவருடைய பெற்றோர், கற்பித்த ஆசிரியர், படித்த நூல்களின் ஆசிரியர், நண்பர் மற்றும் நாட்டின் நடப்பு ஆகியன அவர்தம் அறிவாக உணர்வாக இடம் பெற்றுச் செயல்படுகின்றன என்பது கருத்து. 454.

**455. மனம்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்**
**இனம்தூய்மை தூவா வரும்.**

உள்ளத்தூய்மை, செயல் தூய்மை ஆகிய இரண்டு தூய்மைகளும் இனந்தூய்மையைப் பற்றுக் கோடாகக் கொண்டு வரும்.

மனந்தூய்மையாவது தீமை எண்ணாமையின் நல்லன எண்ணுதல், மனத்தூய்மை உள்ள வழி செய்வினைத் தூய்மையும் இயல்பாகவே வந்தமையும். செய்வினைத் தூய்மையாவது நல்லவே செய்தல். 455.

**456. மனம்தூயார்க்கு எச்சம்நன் றாகும் இனம்தூயார்க்கு**
**இல்லைநன்று ஆகா வினை.**

தூய மனத்தார்க்கு வாய்க்கும் எச்சம் நற்புகழ். தூய இனத்தை உடையார்க்கு நல்லனவாக அமையாத செயல் இல்லை.

ஒருவர் வாழ்க்கைக்குப் பின்னும் எஞ்சி நிற்பது எச்சம்.

''எச்சம்'' என்பதற்கு மக்கள்( பிள்ளைகள்) என்று பொருள் கொள்வர். இது தவறில்லையானாலும் நிறைவான பொருளன்று. ஒருவருக்குப் பின் அவர்தம் பிள்ளைகள் எஞ்சியிருப்பர் என்பது பொது விதி. ஒரோவழி இல்லாமல் போதலும் உண்டு. அதோடு ஒருவருடைய புகழுக்கு உரியவராக மக்கள் இருப்பர் என்பது பொது விதியன்று; மாறாகவும் போகலாம். ஆதலால் எஞ்சி நிற்பது என்று பொருள் கொள்ளுதலே பொருந்தும். 456.

**457. மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம் இனநலம்**
**எல்லாப் புகழும் தரும்.**

மாந்தர்க்கு மனநலம் செல்வம்; இனநலம் எல்லா வகையிலும் புகழினைத் தரும்.

முற்குறளில் ஒருவருடைய வாழ்க்கைக்குப் பின்னும் நிற்கக்கூடிய புகழை, '' எச்சம்'' என்று சொல்லி உணர வைத்தார்.

இங்கு, ''எல்லாப் புகழும்'' என்றதால் இம்மையில் மட்டுமே அனுபவிக்கக் கூடிய ''முகமன்'' முதலிய இம்மைப் புகழைக் குறிப்பிடுகின்றார். 457.

458. மனநலம் நன்குடைய ராயினும் சான்றோர்க்கு
இனநலம் ஏமாப் புடைத்து.

மனநலம் நல்ல வண்ணம் அமையப் பெற்றாராயினும் நல்லோர்க்கு இனநன்மை பாதுகாப்புத் தரும் தன்மையது.

மனநலம் அமைந்த அளவிலேயே அமைதி பெறுதல் கூடாது. இனநலம் மேலும் பாதுகாப்பை உறுதிப்படுத்தும். 458.

459. மனநலத்தின் ஆகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தின் ஏமாப் புடைத்து.

மனநலத்தினால் மறுமை இன்பம் ஆகும். மனநலம் கருதியே சமய வழிபாடுகள் நிகழ்த்தப் பெறுகின்றன. 459.

460. நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல்.

ஒருவனுக்கு நல்லினத்தினும் சிறந்த துணையில்லை. தீய இனத்தினும் மிகுதியாகத் துன்பம் தருவதும் இல்லை.

நல்லினம் இன்பம் தரும். இன்பம் தராது போனாலும் கூட துன்பம் தராது. தீயின்பம் துன்பம் தருவதில் தலையாயது. ஆதலால் தீய இனச்சார்பை முற்றாக விலக்கி நல்லினத்தின் நட்பை நாடிப் பெறுக. 460.

## 47. தெரிந்து செயல்வகை

செயற்படுவது என்பது அறிவார்ந்த ஒரு வாழ்க்கை முறை. எந்தச் செயலையும் செய்யத் தொடங்குவதற்கு முன்பு, செய்ய முற்படும் செயல், அந்தச் செயலால் விளையக்கூடிய பயன்கள், எதிர்விளைவுகள், செய்து முடித்தற்கு வேண்டிய ஆற்றல், துணை முதலியன அனைத்தையும் ஆய்வு செய்து தெரிந்து முடிவு எடுத்துக் கொண்டு பின் செயற்படுதல் வேண்டும்.

1. ஆய்வின் முதல்நிலை, செய்ய முனையும் செயல்கள் வரலாற்றுப் போக்கில் முன் நிகழ்ந்திருப்பின், அதன் விளைவுகளை ஆராய்தல்.

2. செய்யப்புகும் செயல், இன்றைய சமுதாயத்தின் தேவைநிலை பற்றிய மதிப்பீடு.

3. தனதுநிலை, தனக்குத் துணையுறுப்புகளாக அமைந்துள்ளவை களின் நிலை.

4. தனது செயல் முனைப்புக்கு உதவ வேண்டியவர்களின் ஆற்றல், மனப்பாங்கு முதலியன ஆய்வு செய்யப் பெறுதல் வேண்டும். அடுத்து, தனக்கு மூத்தோராக (கல்வி அறிவு, நுண்ணறிவு, பட்டறிவு ஆகியவற்றில் மூத்தோர்)

இருப்போர், தனக்கு அமைச்சு நிலையில் எடுத்துக் கூறுத் தகுதியுடையோர் தனது வாழ்க்கையின் இன்ப துன்பத்தில் பங்கேற்கும் தோழர்கள் ஆகியோரைக் கலந்து ஆய்வு செய்து தெளிந்த முடிவுக்கு வந்த பிறகே செயற்பாட்டில் இறங்கவேண்டும்.

461. அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல்.

ஒருவன் வினை செய்வதால் ஏற்படக்கூடிய அழிவையும் ஆகும் பயனையும் ஒரோவழி அழிவு வந்தால் பின் அவ்வழிவு வழி ஆவதனையும், பின் தொடர்ச்சியாக வரக்கூடிய ஆதாயத்தையும் சீர்தூக்கி ஆராய்ந்து மொத்தத்தில் ஆக்கம் தரக்கூடிய செயல்கள் செய்க.

''அழிவதூஉம்'' என்பது கைமுதல் செலவாதலைக் குறித்தது. ''வழி பயக்கும் ஊதியம்'' என்றது, தொடர்ச்சியாக வரும் ஆதாயம் என்பதைக் குறித்தற்கு. 461

462. தெரிந்த இனத்தொடு தேர்ந்துஎண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல்.

அரசியல் பணிக்காக, தான் மனமறிந்து தேர்ந்தெடுத்த ஒத்துவரும் இனத்தைக் கொண்டு, செய்யக் கூடிய செயல்களை எண்ணிச் செய்வார்க்கு அரிதாகக் கூடிய பொருள் யாதொன்றும் இல்லை.

மனமறிந்து தெரிந்த இனத்துடன் கலந்து முடிவு செய்த செயல் என்று கொள்ளுதலும் பொருந்தும். மனமறிந்த நட்பினரே, துணைவர்களே காய்தல் உவத்தல் இன்றிச் செய்யத் தக்கதைத் தேர்ந்து கூறுவர் என்பது உண்மை.

''தெரிந்த இனம்''- என்பதற்கு செய்யப் புகும் தொழில் தெரிந்த இனம் என்றும் கொள்ளலாம். 462.

463. ஆக்கம் கருதி முதல்இழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார்.

வரப்போகும் ஆதாயத்தைக் கருதிக் கையிலிருக்கும் முதலை இழக்கும் செயலைச்செய்யார் அறிவுடையார்.

''முதல்'' - ஆக்கத்திற்குப் பயன்பட்டால் நல்லது. அஃதில்லையாயின் முதல் முதலாகவே விளங்குவது நல்லது. 463.

464. தெளிவில் அதனைத் தொடங்கார் இளிவு என்னும்
ஏதப்பாடு அஞ்சு பவர்

தொழில் நுட்பத் தெளிவில்லாத தொழிலைத் தொடங்கார் தெளிவில்லாத தொழிலைத் தொடங்கித் தோல்வியுறின் மற்றவர் பழிப்புக்கு அஞ்சுபவர்.

தொழில் நுட்பத் தெளிவில்லாத தொழில் முனைவில் ஏற்படும் தோல்வியால், கைமுதல் இழப்பதோடன்றிப் பழிச்சொல்லும் வரும் என்று அறிவித்தது. 464.

465. வகைஅறச் சூழாது எழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோர் ஆறு.

தன்னால் முடியும்-முடியாது என்று முழுதுமாக ஆய்வு செய்து பாராமல் சிறிது எண்ணத் தொடங்கிய நிலையிலேயே செயற்படுதல் பகைவரைத் தன் வீட்டில் அழைத்து வந்து வைக்கும் வழியாம்.

தெளிவில்லாத செயல்கள், பகைவருக்குத் துணை செய்யும் என்பது கருத்து. 465.

466, செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்

ஒருவன் செய்யத் தகாத செயல்களைச் செய்தாலும் கெடுவான்; செய்யத் தக்க காரியங்களைச் செய்யாதுவிடினும் கேடுறுவான்.

அச்சத்தின் காரணமாகவோ, சோம்பல் காரணமாகவோ செய்ய வேண்டிய செயல்களைச் செய்யத் தவறக் கூடாது என்பது அறிவுரை.466.

467. எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.

ஒரு செயலைச் செய்யத் தொடங்குமுன் தீர எண்ணித் தேர்ந்து தெளிந்து துணிவுடன் தொடங்குக! செயலைச் செய்யத் தொடங்கியபின் எண்ணித் தேர்ந்து தெளியலாம் என்று எண்ணுவது இழுக்காகும்.

செய்யத் தொடங்கிய பின் செயலைப் பற்றி ஆய்வு செய்வது இழுக்கையே தரும். 467.

468. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

காரியம் செவ்விதாக முடிய வேண்டும் என்று வழிதுறைகளைக் காண்பதில் வருத்தம் கூடிய முயற்சிகளை மேற்கொள்ளாதவர்களின் வருத்தம், பின் பலரும் கூடிச் செயலைச் செய்தாலும் போகாது.

செயற்படும் முன் வழிதுறை காணும் முயற்சியில் பெறும் வருத்தம் பயன் தரும். அஃதன்றிச் செயல்பாட்டு நிலையில் தேர்ந்தெண்ணிச் செய்யாமையால் வரும் வருத்தங்களைப் பலர் கூடி வருந்தி முயன்றாலும் மாற்றலரிது. 468.

469. நன்றுஆற்றல் உள்ளும் தவறுண்டு அவரவர்
பண்பறிந்து ஆற்றாக் கடை.

செய்யப்படுபவர் குணமறிந்து காரியங்களைச் செய்யாததனால் நன்மை செய்வதிலும் தவறுண்டு. தண்டித்தல், மன்னித்தல், கொடுத்தல் முதலியவை செயலளவில் பயன் தரா. யாரை நோக்கிச் செய்யப்படுகின்றனவோ அவர்களின் பண்பாட்டிற்கு ஏற்றாற்போலத்தான் நன்மையோ, தீமையோ விளையும் ! 469.

470. எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு.

இகழ்ச்சி வராத காரியத்தை எண்ணிச் செய்ய வேண்டும். உலக வரலாற்று நியதிகளுடன் கலந்து செய்யாதாரை உலகு ஒத்துக் கொள்ளாது. 470.

## 48. வலியறிதல்

தன் வலியும் மாற்றான் வலியும் அறிந்து செய்வன செய்தல் வெற்றி பெறுதலுக்குரிய வழி. வலியறியாமல் குன்று முட்டிய குருவி போலத் தோல்விகளைத் தழுவும் வாழ்க்கை விரும்பத் தக்கதன்று.

471. வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்.

ஒருவன் தான் செய்யத் தொடங்கிய செயலின் வலிமையையும் அதனைச் செய்து முடிப்பதற்குரிய தன் வலிமையையும் அந்தச் செயலைச் செய்ய ஒட்டாது தடுக்கும் தன் எதிரியின் வலிமையையும் தனக்குத் துணையாய் அமைந்துள்ளார் வலிமையையும் தனது எதிரிக்குத் துணையாய் வருவார் வலிமையையும் சீர்தூக்கிப் பார்த்து, தன் வலிமிக்குயர்ந்து இருப்பின்செய்ய நினைத்த செயலைச் செய்யத் தொடங்குக.

மாற்றார் வலியினும் தன் வலிமை கூடுதலாக இருந்தால் செய்க என்றதால் ஒத்த வலிமை இருந்தாலும் செய்யற்க என்பது கருத்து. ஒத்த வலிமை, வெற்றியை மதில் மேல் பூனையாக்கும். 471.

472. ஒல்வது அறிந்து அறிந்ததன்கண் தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல்.

தன்னால் செய்யக் கூடிய செயலையும், அந்தச் செயலை நிறைவேற்றி முடிப்பதற்குரிய வலிமையையும் அறிந்து, அந்தச் செயலைக் கருத்தில் வைத்துச் செயல்படுவோர்க்கு இயலாததென்று ஒன்றும் இல்லை.

தம் ஆற்றலுக்கு இசைந்த ஒரு செயலை மேற்கொண்டு அச்செயலிலேயே கருத்தூன்றி முயற்சி செய்வார்க்கு இயலாத ஒன்றில்லை.

''செல்லாதது இல்'' - வெற்றி உறுதி என்பது கருத்து. 472.

473. உடைத்தம்வலி அறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்.

தம்முடைய வலியைச் சரியாக அளந்தறியாது தம்முடைய எழுச்சியின் காரணமாக மட்டுமே செயல்களைத் தொடங்கிச் செயலைச் செய்து முடிக்காது இடையில் செயலைச் செய்யமாட்டாது நின்று தோற்றுப் போனவர் பலர்.

அரசியல் ஆதலால் பகைமேற் செல்லல் என்று கொள்க. ''முரிந்தார் பலர்'' என்றதால் வெற்றி பெற்றார் சிலரே என்பது பெறப்பட்டது. இதனால் வெற்றிகரமாக வாழ்க்கையை முடிக்கும் அறிவுடையார் சிலரே என்பது கருத்து. 473.

474. அமைந்தாங்கு ஒழுகான் அளவுஅறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

மற்றவர்களுடன் பொருந்தி அந்த நட்பமைதிக்கு ஏற்ப நடந்து கொள்ளாமலும், தன்வாழ்க்கையின் தகுதிகளை அளந்தறியாமலும் தன்னைத்தானே உயர்வாக மதித்துக் கொண்டும் நடப்பவர்கள் விரைவில் கெடுவர்.

நட்பமைந்தவாறு ஒழுகுதல் தன் தகுதியறிந்து அதற்கு ஏற்ப வாழ்தல் எப்போதும் யாரிடத்தும் தன்னைத்தானே உயர்வாக மதித்துக் கொண்டு கூறாமலும் நடவாமலும் இருப்பது வெற்றிக்குத் துணை செய்யும். 474.

475. பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்.

வைக்கோலினும் நொய்ய மயில் தோகையேயானாலும் வண்டியின் தாங்கும் அளவைக் கடந்து மிகுதியாக ஏற்றின் அவ்வண்டியின் அச்சு முறியும்.

நட்புடையார் பலர் கூடிச் செய்யின் வெற்றி பெறுவர். அதுபோலவே தம்முடைய பகைவர் பலராகக் கூடிட அனுமதித்துவிடின் தோல்வியுறுதி.

பகைவர் வலியைத் தனித்தனியே அறியாமல் தொகுத்தறிதல் வேண்டும். 475.

476. நுனிக்கொம்பர் ஏறினார் அஃதுஇறந்து ஊக்கின்
உயிர்க்குஇறுதி ஆகி விடும்.

ஒரு மரத்தின் உச்சிக்கிளையில் ஏறி நின்றவர் தமது ஊக்கத்தின் காரணமாக அதன் உச்சியைக் கடந்தும் ஏற முயல்வாவராயின் அம்முயற்சியால் அவர் உயிர்க்கு முடிவு நேர்ந்து விடும். பகைமேல் செல்லுங்கால் பகைவனை வெற்றி கொண்ட அளவோடு அமையாது பகைப்புல நாட்டை அழிக்க நினைத்து மேலும் தீமைகள் செய்யின் பகைவனும் அவனைச் சார்ந்தவர்களும் வெகுண்டு எழுந்து அழிப்பர் என்று பொருள் கொள்ளுதல் சிறப்பு. 476.

477. ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி.

ஈதல் முதலிய அறப்பணிகளை இயற்றின், தம் பொருள் அளவை அறிந்து அதற்கு ஏற்ப வழங்குக. அதுவே செல்வத்தைப் பேணிக்காத்து வளர்க்கும் நெறி.

இந்நெறிக்கு மாறாகத் தம்மையே அழித்துக் கொண்டும் ஈதல் செய்க என்ற நெறி பிற்காலத்தது. இது வாழ்வியலுக்கு ஒத்துவராது. 477.

478. ஆகுஆறு அளவிட்டிது ஆயினும் கேடுஇல்லை
போகுஆறு அகலாக் கடை.

பொருள் வரும் வாயில்கள் சிறியதேயானாலும் அப்பொருள் செல்லும் வாயில் அதிகமாகாதபொழுது கேடு வராது. வரவிற்குள் செலவு அடங்கிப் பொருள் மிஞ்சுதல் பொருள் போற்றும் நெறி.

வரவும் செலவும் ஒத்திருப்பினும் கேடில்லை என்பது இத்திருக்குறள் கருத்து.

ஏரிக்குத் தண்ணீர் வரும் வரத்துக்காலை விட செலவுக்குரிய மடை அகலமாயிருத்தல் கூடாது. 478.

479. அளவுஅறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்.

தன் செல்வத்தின் அளவறிந்து வாழாதவன் வாழ்க்கை பல்வகைப் பொருள்களும் உடைய வாழ்க்கை போலத் தோன்றிப் பின் இல்லாமல் போவதுடன் காலப்போக்கில் அப்பொய்த் தோற்றமும் இல்லாமல் போகும்.

எந்த ஒரு கேடும் தொடக்கத்தில் வெளிப்பட்டுத் தோன்றாது. ஆதலின் ''உள போல இல்லாகி''என்றார். 479.

480. உளவரை தூக்காத ஒப்புரவு ஆண்மை
வளவரை வல்லைக் கெடும்.

தன்னுடைய பொருள் அளவை அறிந்து அதற்கேற்ப ஏற்றுக் கொள்ளாதவனுடைய ஒப்புரவு ஒழுகல் வாழ்க்கையால், அவனுடைய செல்வத்தின் அளவு விரைந்து கெடும்.

ஒப்புரவேயானாலும் அளவறிந்து செய்யாதார் பொருள் கெடும். இத்திருக்குறள்,

'ஒப்புரவினால் வருங்கே டெனின் அஃதொருவன்
விற்றுக் கோள் தக்க துடைத்து.' (220)

என்ற திருக்குறள் கருத்தோடு முரண்படாதா எனில் முரண்பாடு இல்லை.

ஒருவர் மேற்கொள்ள விரும்பும் ஒப்புரவுநெறிக்கு ஏற்பத் தமது பொருளாதாரத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்பது வாழ்வியல் உண்மை.இந்த உண்மையை உணர்த்துவது இத்திருக்குறள் கருத்து. 480.

## 49.காலம் அறிதல்

காலம் அறிதல் என்பதாவது காலத்தின் அருமையை அறிதல், செய்ய வேண்டிய பணிகளை அவற்றிற்குரிய காலத்தில் அறிந்து செய்தல். காலம் தவறிச் செய்யப்படும் எந்தப் பணியும் உரிய பயன்தராது. சில பணிகள் உரிய காலத்திற்கு முன்பே செய்யப்பெற்றாலும் பயன் தராது போதல் உண்டு. சில காரியங்கள் அவற்றிற்குரிய பருவ காலங்களில் மட்டுமே செய்யப் பெறும். உரிய காலத்தைத் தேர்ந்து செய்யப் பெறும் காரியமே முழுப்பயனைத் தரும். நட்பு பகை போன்றவற்றில்கூட உரிய காலம் அறிந்து ஒழுகினால் தான் பயன் கிடைக்கும். இரண்டாவது மகா யுத்தத்தில் மிகப்பெரிய வெற்றியைப் பெற்ற இட்லர் குளிர் காலத்தில் சோவியத் நாட்டின் மீது படையெடுத்து அவனுக்குத் தோல்வியைத் தந்தது. சோவியத்நாட்டின் குளிரைச் செருமானியப் படைகளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

காலம் அறிந்து போற்றுதல் என்பது காலந்தவறாமை எனும் ஒழுக்கத்தின் பாற்பட்டது. வாழ்க்கையை அளந்து பயன்பாடு கொள்வதற்குரிய கருவி காலமேயாம். காலத்தை வீணடிப்பது வாழ்க்கையையே பாழாக்கி விடும். காலமறிந்து கடமைகளைச் செய்தல் வெற்றி பொருந்திய வாழ்க்கைக்கு வழிவகுக்கும். இந்த அதிகாரம் அரசியலில் இருப்பதால் அயலார் மேற்படையெடுத்துச் செல்ல உரிய காலத்தை அறிந்து செல்லுதல் குறித்து ஓதப் பெற்றது என்று கருதுவது தவறன்று. ஆனால் காலமறிதல் வாழும் மனிதர் ஒவ்வொருவருக்கும் தேவையான ஏற்பாடு, ஒழுக்கம் என்பதை மறத்தலாகாது.

481. பகல் வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

காக்கை தன்னினும் வலிய கோட்டானை அதற்குக் கண் தெரியாத பகற் பொழுதில் வென்றுவிடும். அதுபோல் பகைவரை எளிதில் வெற்றி கொள்ளக் கருதும் வேந்தர் பகைவரை வெற்றி கொள்ளுதற்குரிய பொழுதை அறிந்து போர் மேற்செல்ல வேண்டும்.

பகை மேற்செல்லுதற்குக் காலம் இரண்டு வகை: ஒன்று, தனக்கேற்ற சாதகமான காலம்; பிறிதொன்று பகையரசர்க்குப் பொருந்தாக் காலம்.

சாதகமான காலமாவது : பருவம் சீராக இருத்தல், உணவுப் பொருள் முட்டின்றிக் கிடைத்தல், நாட்டில் கிடைத்தல் அமைதி முதலியன.

பகையரசர்க்குப் பொருந்தாக் காலமாவது; பகையரசர் பொருதற் குரியதல்லாத பருவ காலம், பகை நாட்டிற் பஞ்சம், பகை நாட்டில் அமைதியின்மை ஆகியன என்று கொள்க. 481.

482. பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு.

காலத்தோடு பொருந்தச் செயல் செய்து ஒழுகுதல் நிலையில்லாத செல்வத்தையும் நீங்கா வண்ணங்கட்டி வைக்கும் கயிறாகும்.

காலத்தோடு பொருந்தச் செய்வதென்பது உரிய காலத்தில் உரிய பணிகளைச் செய்தல், பொதுவாகச் செல்வம் ஈட்டும் முயற்சிகளுக்குக் காலமறிந்து செய்யும் உணர்வு இன்றியமையாதது. ''பருவத்தே பயிர் செய்'' என்பது பழமொழி! உரிய காலத்தில் செய்யும் பணிகள் வெற்றியைத் தருவதால் செல்வம் நீங்காது என்று துணிவுடன் கூறினார். 482.

483. அருவினை என்ப உளவோ கருவியான்
காலம் அறிந்து செயின்.

சிறந்த கருவியொடு தகுந்த காலமறிந்து கடமைகளைச் செய்வராயின் முடித்தற்கரிய செயல்கள் என்று சொல்லப்படுவனவும் உள்ளனவோ? இல்லை!

சிறந்த கருவியாவன; அமைச்சு, நட்பு, தூது ஆகிய உயர்திணையும், செயற்கருவிகளாகிய அஃறிணையும் ஆம். செய்யும் செயல் நோக்கிப் பொருள் கொள்ளவேண்டும். 483.

484. ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தால் செயின்.

ஒருவன் உலகம் முழுவதையும் கைப்பற்றக் கருதினாலும் கைகூடும், உலகம் முழுவதையும் கைப்பற்றுதற்குரிய செயலை அவன் தகுந்த காலமறிந்து இடத்தாற் பொருந்திச் செய்வானாயின்;

இத்திருக்குறள் காலமும் இடமும் அறிந்து செய்யப் பெறின் எந்தச் செயலும் அரிதன்று, எளிதே என்று கூறுவதாயிற்று. 484.

485. காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர்.

உலகம் முழுவதையும் பெறக் கருதுபவர் மனக்கலக்கமின்றித் தமது எண்ணம் நிறைவேற்றுவதற்குரிய செயல் செய்வதற்கேற்ற காலத்தை எதிர்பார்த்துக் காத்திருப்பர்.

கலங்குதலாவது; தாம் கருதியது கைகூடுவதற்குக் காலம் தாழ்த்துதல்; காலம் தாழ்ப்பது குறித்துக் கவலையுறுதல்.

''காலம் கருதி யிருப்பர்''என்பதற்குரிய செயற்பாட்டுக்குரிய காலம் என்று பொருள் கொள்ளவேண்டுமேயன்றி சோதிட அடிப்படையில் தன்னம்பிக்கைக்கு எதிரான''நல்லகாலம்'' என்று பொருள் கொள்ளுதல் பிழை. இங்கு காலமறிதல் என்பது கட்புலனுக்கும் செவிப் புலனுக்கும் புலனாகும் காலச் சூழ்நிலைதான். 485.

486. ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேரும் தகைத்து.

வலி மிகுந்த ஒருவர் ஒடுங்கியிருக்கும் இருப்பு, சண்டை போடும் செம்மறிக் கடா தன் பகையை வலிமையோடு தாக்குவதற்குப் பின் வாங்குவதைப் போன்றது.

ஊக்கமுடையார் சில பொழுது வாளா இருத்தல் சோம்பலின் பாற்பட்டதன்று. அதுபோலவே ஊக்கமுடையார் செயல்களில் பின்வாங்குதல் தோல்வியெனக் கொள்ளப்பாற்றன்று.

''ஓரடி பின்னே இரண்டடி முன்னே'' என்றார் மாமேதை லெனின். 486.

487. பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து
உள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.

தெளிந்த அறிவுடையவர், தமக்கு இன்னாதன கண்டபொழுது பலரறியப் புறத்தே வேர்த்துக் காட்சி தரமாட்டார். இன்னாதன கண்டு உள்வேர்த்து அந்த இன்னாதனவற்றை மாற்றுதற்குரிய காலம் பார்த்திருப்பர்.

''பொள் என''என்றது சினம் கொண்டு வேர்த்தலின் வினைக்குறிக்க வெளிப்படையார் சினத்தைக் காட்டுதல் வெற்றி பொருந்திய வாழ்க்கைக்குத்

துணை செய்யாது. இன்னாதன கண்டு அகத்தே சினம் வைத்து வேர்க்காதொழியின் இன்னாதன இயல்பென்றாகிவிடும். இதனால் இன்னாதனவற்றை இனியனவாகக் காணும் ஆற்றலும் அற்றுப் போகும். 487.

488. செறுநரைக் காணின் சுமக்க இறுவரை
காணின் கிழக்காம் தலை.

தம்மினும் வலிய பகைவரைக் காண நேர்ந்தால் நற்காலம் வரும்வரை அவரைச் சுமந்திடுக. பகைவருக்கு முடிவுக் காலம் வரும்பொழுது தலைகீழாக விழுந்து மாய்வர். 488.

489. எய்தற்கு அரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற்கு அரிய செயல்.

தனக்கு வாய்த்தற்கரிய சமயம் வந்து சேரின் அப்போதே செய்தற்கு அரிய செயல்களைச் செய்து விடுக.

சிறந்த செயற்பாட்டிற்குரிய காலம் வந்து அமைதல் அருமை. அதனால் ''எய்தற்கரியது இயைந்தக் கால்'' என்றார். 489

490. கொக்குஒக்க கூம்பும் பருவத்து மற்றுஅதன்
குத்துஒக்க சீர்த்த இடத்து.

மீன் தேடும் கொக்குப்போல் ஒடுங்கி இருந்திடுக. ஆகும் காலம் வாய்த்த பொழுது கொக்கு விரைந்து மீனைக் கொத்துதல் போல் விரைந்து கடமையினைச் செய்திடுக.

ஓடும் புனலில் உரிய மீன் வருமளவும் கொக்கு யாதொரு நோக்கமுமில்லாததுபோல் இருக்கும். அதுபோல உரிய காலம் வரை மற்றவர் ஐயுறா வண்ணம் காத்திருந்து கருதியன முடித்தல் வெற்றியைச் சேர்க்கும். 490.

## 50. இடனறிதல்.

யாதொரு காரியமும் நிகழ்வதற்குக் களமாக அமையும் இடத்தின் இயல்பினை அறிந்து தொடங்குதல் வேண்டும். இடம் எடுத்த காரியத்திற்கு இசைந்ததாக இல்லாதிருப்பின் காரியம் கெடும். பொருளிழப்பு ஏற்படும். தோல்வியும் கிடைக்கும். ஆதலால் இடத்தின் இயல்பை அறிந்த பின்பே காரியங்களைத் தொடங்குதல் வேண்டும்.

491. தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடம்கண்ட பின்அல் லது.

இடத்தின் இயல்பினை முற்றும் காண்பதன் முன் எந்தக் காரியமும் தொடங்கக்கூடாது. இடத்தினைப் பற்றி முற்றும் அறியத் தொடங்குதற்கு முன்பு, நிலத்தியல்பினை எள்ளி நகையாதொழிக.

வினைக்குரிய களத்தின் இயல்பினை முற்றாக அறியாது எந்தச் செயலும் தொடங்கற்க. 491.

492. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்தூஆம்
ஆக்கம் பலவும் தரும்.

மாறுபாடுகள் நிறைந்த வலியினை உடையார்க்கும் அரண் சார்புடைய ஆக்கம் பலவும் தரும்.

பொருளாக்கம்: படைவலி முதலியன பற்றிய முரண்பாடுகள் அதாவது உடையார் இல்லார் என்ற நிலை இருப்பினும் அரண் சிறந்ததாக இருப்பின் ஆக்கம் வளரும். ஆதலால் படைவலி மட்டும் பார்க்காமல் அரண் வலிமையும் கணக்கில் எடுத்துக் கொள்ளுதல் வேண்டும் என்பது கருத்து. 492.

493. ஆற்றாரும் ஆற்றி அடுப இடன்அறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின்.

வலிமை இல்லாதாரும் வலியராய் வெல்வர். இடமறிந்து தம்மையும் காத்துக் கொண்டு பகைவர் மாட்டுமேற் செயின் .

இயல்பான வலிமை இல்லையானாலும் நிற்கும் களத்தின் - இடத்தின் உதவியால் வெற்றி பெறலாம். 493.

494. எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

தாம் வினை செய்தலுக்கு ஏற்ற இடத்தினை அறிந்து சென்ற அரசர் அரணைப் பொருந்தி நின்று செய்வாராயின் தம்மை வெற்றி கொள்ள எண்ணிய பகைவர் வெற்றி எண்ணத்தை இழப்பர்.

இடத்தொடு பொருந்திய வினைகளைச் செய்வாரை அவர் பகைவர் வெற்றி காண இயலாது என்பது கருத்து. 494.

495. நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற.

ஆழமுடைய நீரின் கண் முதலை வெல்லும், முதலை நீர் நிலை பிரிந்து நீங்கின் அதனை எல்லா உயிர்களும் வென்றுவிடும்.

நெடும்புனலுள் முதலையை, மிக்க வலிமையுடைய யானையாலும் வெல்ல இயலாது. நீர் இல்லாத, இடத்தில் முதலையை மிகச் சாதாரணமான

உயிரும் வெற்றி கொள்ளும்.

''இடம்'' கூடுதல் வலிமையைச் சேர்க்கிறது என்பது கருத்து. 495.

496. கடல்ஓடா கால்வல் நெடுந்தேர் கடல்ஓடும்
நாவாயும் ஓடா நிலத்து.

நிலத்தின்கண் ஓடும் நெடுதேர் கடலின்கண் ஓடாது. கடலின்கண் ஓடும் படகும் நிலத்தின்கண் ஓடாது.

ஓடுதல் வாகனத்தின் இயல்பால் மட்டுமன்று. ஓடும் இடத்தையும் பொறுத்தது. 496.

497. அஞ்சாமை அல்லால் துணை வேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தால் செயின்.

இடத்தின் இயல்பை முற்றாக அறிந்து செய்யின் தனது அஞ்சாமை கொண்டே வெற்றி பெறலாம். வேறு துணை தேவையில்லை.

இடத்தின் வலிமை கருதி இங்ஙனம் கூறப்பெற்றது. 497.

498. சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும்.

வலிமை மிக்க பெரிய படையுடையானும் தம்மினும் சிறிய படையுடைய அரசனின் இடத்திற்குச்சென்று வெற்றி கொள்ள நினைத்தால் ஊக்கமிழப்பான்.

சிறுபடையுடையோன் ஆனாலும் அவனுக்கும் அவனுடைய இடத்தின் வலிமை சேர்தலின் அழிந்து விடுவான் என்று உணர்த்தியது.

1945 - மகா யுத்தத்தில் இட்லர் சோவியத்தில் படையெடுத்தபோது நாட்டின் பனிச் சூழலை இட்லர் படை தாங்காமல் தோற்க நேர்ந்தது. 498.

499. சிறைநலனும் சீரும் இலர்எனினும் மாந்தர்
உறைநிலத்தோடு ஒட்டல் அரிது.

அரண் நலனும் ஆற்றலும் மிக்குடையார் அல்லர் ஆயினும் அவர்தம் இடத்தில் வெல்லுதல் இயலாது.

வசதிகள் குறைவாக உடையவரும் கூடத் தாம் பிறந்த மண்ணை அகன்று வாழும் இடத்தை ஒட்டி வாழ்ந்து விட ஒருப்படார் என்ற கருத்தும் பெறப்படுகிறது. 499.

500. கால்ஆழ் களரில் நரிஅடும் கண்அஞ்சா
வேலாள் முகத்த களிறு.

கண்ணின் நலம் கருதி அஞ்சாமல் முகத்தில் வேல்களைத் தாங்கும் களிற்றை, கால் அழுந்தும் சேற்றில் நரியும் கொல்லும்.

களிற்றின் இயல்பான வலிமை நரிக்கு இல்லை, ஆயினும் இடத்தின் இயல்பு நரியின் வலிமையைக் கூட்டி வலிமையுடைய களிற்றையும் அடச் செய்து விடுகிறது.

ஆதலால் எந்தச் செயலுக்கும் ''இடம்'' பொருண்மை உடையது.

திட்டப் பணிகள் குன்றக்குடியில் நடைபெறுவது போல மற்ற இடங்களில் நிகழாமை உணரற்பாற்று. 500.

## 51.தெரிந்து தெளிதல்

நாடாள்பவர்கள் தமது ஆட்சி பற்றிய அனைத்துச் செயல்களையும் அவற்றின் விளைவு எதிர் விளைவுகளை ஆராய்ந்து தெளிந்த தெளிவுடன் செய்ய வேண்டும். சிறப்பாகத் தனக்கு உதவியாக அமையும் அமைச்சர், படைத்தலைவர், தூதர் முதலியவர்களை அவர்தம் குலமரபு, கல்வி, அறிவாற்றல், திறன், உள்ளார்ந்த ஈடுபாடு ஆகியன பற்றிக் கருத்தாலும் சிறு சோதனைகள் நிகழ்த்தியும் நன்றாகத் தெரிந்து, தெளிந்து அனைத்திலும் தகுதியுடையோரைத் துணையமர்த்திக் கொள்ளுதல் வேண்டும்.

இது நாடாள்வோருக்குக் கூறினாலும் பொறுப்புள்ள பணிகள் மேற்கொண்டோருக்கும் பொருந்தும்.

**501. அறம்பொருள் இன்பம் உயிர்அச்சம் நான்கின்**
**திறம்தெரிந்து தேறப் படும்.**

துணையாய் அமர்த்திக் கொள்ளப்படுவோர் அறமும் பொருளும் இன்பமும் உயிர்க்கேட்டிற்கு அஞ்தலும் ஆகிய நான்கின் திறமும் அஞ்சுதலுக்குரியன நிகழாவண்ணம் இயற்றும் திறமும் தெரிந்து அமர்த்துக.

அறவுணர்வு இல்லாதாதார் துரோகம் செய்வர்;

பொருளுணர்வு இல்லாதார் பொருள் நிர்வாகத்திற்கு ஆகார்;

அவர்களுக்குப் பொருள் ஆசையும் இருக்குமானால் துரோகம் செய்வர்.

இன்ப வேட்கை மிகுதியுடையோராயின் எளியராகித் துரோகம் செய்வர்; கடமைகளில் சோர்வர்.

உயிர் வாழ்தலையே விரும்பி, மரணத்திற்கு அஞ்சுபவர்கள் துன்பக் காலத்தில் துணையாகார். 501.

**502. குடிப்பிறந்த குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்**
**நாண்உடையான் கட்டே தெளிவு.**

உயர்ந்த குடிப்பிறந்து, குற்றங்களினின்றும் நீங்கி, பழிக்கு அஞ்சி ஒழுகும் நாணுடையாரையே ஆட்சியாளர்கள் தெளிந்து தெரிவு செய்ய வேண்டும்.

''குடிப்பிறத்தல்'' வழிவழியாகச் சிறந்த குடியில் பிறத்தல் இயல்பாகவே சிறந்த குணங்களும் திறமையும் வந்தமையத் துணை செய்யும் என்பது வரலாற்றறிஞர்களின் துணிபு. 502.

503. அரியகற்று ஆசுஅற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு.

கற்பதற்குரிய அறநூல்கள் பலவற்றையும் கற்றுக் குற்றங்கள் அற்றவர்களிடத்திலும் நுட்பமாக ஆராய்ந்தால் அறியாமை முதலிய குற்றம் இல்லாமல் இருப்பது அரிது.

அறிவு வளர வளர அறியாமை தென்படுதல் இயற்கை. ஆயினும் தேவைக்கேற்ற அறிவும் இன்றியமையாப் பண்புகளும் இருக்கின்றனவா என்று ஆய்வு செய்து எடுத்துக் கொள்ளலாம் என்பது கருத்து. முழுதும் அறிந்தவர்களையும் குற்றமே அற்றவர்களையும் காண்பதரிது என்பதறிக. 503.

504. குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

ஒருவனிடத்தில் உள்ள குணத்தையும் குற்றத்தையும் ஆராய்ந்து குணம் மிகுதியுமிருந்தால் எடுத்துக் கொள்க! குற்றம் மிகுதியாக இருந்தால் நீக்குக!

குணம் நாடி - குற்றம் நாடி என்பதற்கு விளைவுகள் கருதியே கொள்ளல் வேண்டும். இது எண்ணிக்கையின்பாற்பட்டதுமட்டும் அன்று. 504.

505. பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.

ஒருவருடைய பெருமைக்கும் கீழ்மைக்கும் அவரவர் செய்யும் செயல்களே உரைகல்.

ஒவ்வொருவரும் வேறுபிறவற்றால் சிறப்புடையார் போலத் தோன்றினாலும் உண்மையில் அவர்களுடைய பெருமையை அல்லது கீழ்மையை எடுத்துக் காட்டுவது அவர்களுடைய செயல்களே என்பது கருத்து. 505.

506. அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

சுற்றம் முதலியன இல்லாதாரை வினைக்குரியராகத் தேர்ந்தெடுப்பதைத் தவிர்த்திடுக. அவர் பேணுதற்குரியாரும் பற்றுமிலாராதலின் பழிக்கு நாணார்.

ஒருவர் நல்லவராய் இருத்தல் தமக்காக மட்டுமின்றித் தம்மைச் சார்ந்தார் வாழ- மகிழ என்பது கருத்து. யாதொரு பற்றும் இல்லாதாரை யார் பழிப்பர்; பழித்தால்தான் அவருக்கு என்ன ஆவது?

''அற்றாரை''- குறிப்பிடத்தக்க எவ்வித நலனும் இல்லாதாரை என்றும் கொள்ளலாம். 506.

507. காதன்மை கந்தா அறிவு அறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாம் தரும்.

அறிய வேண்டுவன அறியாதாரை அன்பு, பாசம் இவற்றின் அடிப்படையில் வினைக்குரியராகத் தேர்ந்தெடுத்தல் நாடாள்வோருக்கு எல்லா அறியாமையையும் தரும்.

பாசம் ஒன்றின் காரணமாகத் துணையாயிருப்போரைத் தேர்ந்தெடுக்கக் கூடாது. 507.

508. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்.

தன்னோடு தொடர்பற்ற ஒருவனை, ஆராயாது துணையமர்த்திக் கொண்டானாகில் அவனுக்கும் அவனது வழியினர்க்கும் கூடத் துன்பத்தைத் தரும்.

தன்னோடும், தன்குடியோடும் தொடர்பிலாத ஒருவரை, ஆராயாது துணையாயமர்த்திக் கொள்ளுதல் தன் குடி சார்ந்தார்க்கு அவரைப் புறக்கணித்ததால் வரும் துன்பம் தோன்றும் என்பது அறிக. 508.

509. தேறற்க யாரையும் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.

யாரையும் தேர்ந்தால் அல்லது தெளிய வேண்டா. தேர்ந்து ஆராய்ந்து தெளிந்த பின்பு அவரையும் அவரிடம் வினைகளை ஒப்படைக்கவும் ஐயுறற்க.

தெளிந்த பிறகும் ஐயுறவு கொண்டால் யாருமே துணையாக அமையார். 509.

510. தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.

ஒருவனை ஆராயாது தெளிதலும் ஆராய்ந்து தெளிந்த பின்பு அவனைப் பற்றி ஐயுறுதலும் ஆகிய இவ்விரண்டும் ஒருவனுக்கு ஒழியாத துன்பத்தைத் தரும்.

ஒருவனைத் தெளிந்து வினையில் வைத்தபிறகு ஐயுறுதல் மிகுந்த துன்பத்தைத் தரும்.

செட்டிநாட்டரசர் குடும்பத்தில் யாரையும் ஆராயாது பணிக்கு அமர்த்துதல் இல்லை.அமர்த்தப்பட்டோர் யாரையும் நீக்குவதுமில்லை. 510.

## 52. தெரிந்து வினையாடல்

ஒருவர் தான் மேற்கொள்ளும் செயல்களில் துணைநிற்பாரைத் தேர்ந்து தெளிந்து துணையாகக் கொண்ட பிறகு அவரவர் தகுதி திறனுக்கேற்ற பணிகளை ஒதுக்கிச் செய்யச் செய்தும் அவர்கள் பணிகளில் ஈடுபட்டுச் செய்யும்பொழுது நேரிடையாகவோ மறைமுகமாகவோ கண்காணித்து முறையாகப் பணியில் ஈடுபடுத்துதலும் பணிகளின் பயன்களைத் தப்பாமல் அடையும் முயற்சியில் ஈடுபட்டுச் செய்தலுமாம்.

ஒருவர் தாம் மேற்கொள்ளும் செயல்களின் நன்மை தீமைகளைத் தீர ஆராய்ந்து செயற்படுதல் என்று கூறினாலும் தவறில்லை.

511. நன்மையும் தீமையும் நாடிநலம் புரிந்த
தன்மையால் ஆளப் படும்.

நாடாள்பவர் தமக்குக் கொடுத்த பணிகளின் நன்மையும் தீமையும் ஆராய்ந்து பார்த்து, நாடாள்பவர்க்குத் தீமை தருவனவற்றை விலக்கி விட்டு நாடாள்பவர்க்கு நன்மை தருவனவற்றையே செய்யும் தன்மையிடையவனாயிருத்தலை ஆராய்ந்து சிறந்த தொழிலிலே அமைத்திடுவர் நாடாள்வோர்.

ஒரு பணியாளர் செய்த பணிநலத்தின் அடிப்படையிலேயே புதிய பொறுப்புக்களில் அமர்த்தப் பெறுவர்.

நாடாள்வோரின் இச்சைக்குரின செய்தல், சொன்னதைச் செய்தல் பயனுடையன செய்தல் ஆகா என்பது கருத்து. 511.

512. வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை
ஆராய்வான் செய்க வினை.

நாடாள்வோருக்கு வினை செய்வோர், நாடாள்வோருக்குப் பொருள் பெருகவரும் வழியைப் பண்ணியும், பொருள் பெருகி வந்தபொழுது மேலும் பெருக்கி வளர்த்தும், செல்வப் பெருக்கப் பணிகளைச் செய்யுமிடத்தும் வரக்கூடிய இடையூறுகளை நாள்தோறும் ஆராய்ந்து முயற்சி கெட்டுப் போகாமல் செய்க.

பொருள் செய்தல், பாதுகாத்தல் ஆகிய பணிகளைநாள்தோறும் ஆராய்ந்து செய்யாவிடில் கெடும் என்று கூறியது. 512.

513. அன்புஅறிவு தேற்றம்அறிவு அவாஇன்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.

நாடாள்வோரின் தெளிவு, தம்மிடத்தில் அன்பும் தமக்குரியன செய்யும் அறிவும், செயற்பாட்டில் கலங்காத தெளிவும் பொருள் சேர்ந்துழி அதில் தானும் அடைய வேண்டும் என்ற அவாவின்மையும் ஆகிய நான்கு இயல்புமுடையவர்களிடம் செயலை ஒப்படைப்பதில் இருக்கிறது.

வினை செய்வோருக்கு அவா வந்தால் பொருளிழப்புடன் ஒழுக்கக்கேடும் கொலை முதலியனவும் உருவாகும். 513.

514. எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்
வேறுஆகும் மாந்தர் பலர்.

எல்லாவகையாலும் தேர்ந்து தெளிந்து தொழிலில் அமர்த்திய பின்னும் செயற்படும் தொழிலியல்பால் மனவேறுபாடு அடையும் மாந்தர் பலராவர்.

தொழிலியல்பால் மனம் வேறுபடுதலாவது; பெருகிய லாபம் வருவதைத் தனதாக்கிக் கொள்ளும் முயற்சி; சிறப்பால் வரும் தகுதிகளுக்கு உரியராகும் வேட்கை; கண்காணித்தல் முதலியவற்றால் மனச்சங்கடமுற்றுப் பகை கொண்டு ஒழுகுதல் முதலியன. ''வினை வகையான் வேறாகும் மாந்தர் பலர்'' என்றதால் சிலர் தான் உண்மையும் உறுதியும் உடையோராகக் கிடைப்பர் என்பது கருத்து.

இந்தச் சிலரைப் பெற, பலரை ஆய்வு செய்ய வேண்டி இருக்கிறது. 514.

515. அறிந்துஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்
சிறந்தான்என்று ஏவற்பாற் றன்று.

நாடாள்வோர் தமக்குரிய செயல்களைத் திறம்படச் செய்யும் உபாயங்களை அறிந்து செய்ய வல்லானையும் செயல் நிலையில் தோன்றும் இடையூறுகளையும், வரும் துன்பங்களையும் பொறுத்துச் செயலைச் செய்து

முடிக்க வல்லானையும் அல்லாது தன்பால் அன்பு கொண்டார் என்ற காரணத்திற்காகச் செயல்களில் ஈடுபடுத்தக் கூடாது.

அன்பு மட்டுமே காரிய சாதனைக்கு பயன்படாது என்று கூறியது. 515.

516. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு
எய்த உணர்ந்து செயல்.

நாடாள்வோர் தமக்குரிய செயல்களைச் செய்வானின் தகுதி, திறமை, குண இயல்புகளை ஆராய்ந்தும் அவர் செய்யவிருக்கும் செயலின் இயல்பை ஆராய்ந்து அறிந்தும் பின் செய்வான் நிலையையும் செய்யும் தொழிலின் நிலையையும் செய்யும் காலச் சூழ்நிலையையும் ஒத்திணைத்துப் பார்த்தும் எல்லாவற்றிற்கும் இசைந்த நிலையில் அறிந்த ஒருவனைத் தொழிலில் ஈடுபடுத்த வேண்டும்.

ஒரு செயல் செய்து முடிப்பதில் செயலின் தன்மை , செய்வோர் திறன் ,செயற்பாடுறும் காலம் ஆகிய மூன்றும் சேர்ந்தாலே காரியம் வெற்றியாகும் என்பது கருத்து. 516.

517. இதனை இதனால் இவன்முடிக்கும் என்றுஆய்ந்து
அதனை அவன்கண் விடல்.

நாடாள்வோர் இந்தக் காரியத்தை இந்தக்கருவிகளைக் கொண்டு இவன் முடிப்பான் என்று செய்து முடிப்பவனின் திறமையை ஆராய்ந்து முடிக்கக் கூடிய பணியினை விடுக.

செயலும், செய்வார் திறனும், செய்து முடிப்பதற்குரிய கருவிகளாகிய இடம், பொருள், ஏவலர் முதலியனவற்றையும் கருத்திற் கொண்டு செயற்படுவோரிடம் பணிகளை ஒப்படைப்பது பயனுற முடித்தலுக்கு வழி என்று கூறியது. 517.

518. வினைக்குஉரிமை நாடிய பின்றை அவனை
அதற்குஉரிய னாகச் செயல்.

நாடாள்வோன் தமது செயல் செய்தலுக்குரியவன் ஒருவனைத் தேர்ந்து தெளிந்த பிறகு அவனை அந்தச் செயலுக்கு முற்றாக உரியவனாக்குக.

ஒருவனை ஒருபணிக்கு என்று தேர்ந்தெடுத்த பிறகு அதில் தலையீடு இல்லாமல் அந்தப் பணியை அவன் தானே செய்து முடிக்கும் பொறுப்பினைத் தருதல்.

இன்று இந்தியாவில் நிர்வாகத்தில் அரசியல் தலையீடு கூடாது என்று கூறப்பெறுவது அறிக. 518.

519. வினைக்கண் வினையுடையான் கேண்மைவேறு ஆக
நினைப்பானை நீங்கும் திரு.

நாடாள்வோர் தன்னுடைய பணிகளை முயற்சியுடன் செய்வானைப் பற்றி அயலார் சொல்லும் சொல் கேட்டு, அதன் காரணமாக மாறுபாடாக (அந்நியமாக) நினைப்பாராயின் அவரை விட்டுச் செல்வம் நீங்கும்.

பணியே வாழ்வெனக் கொண்டு முயற்சிப்பாரைத் தகாத மனிதர்கள் கோள் கூறிப் பிரிவினைப் படுத்துவர். அவர் சொல் கேட்கலாகாது என்பது கருத்து. 519.

520. நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

நாடாள்வோரின் செயல்களை ஏற்றுச் செய்வான் கோடாது (முறை பிறழாது) செய்யின் உலகியல் கோடாது. ஆதலால் நாடாள்வோர் நாள்தோறும் செய்யும் செயல்களையும் செய்வாரின் இயல்பினையும் ஆராய்க.

எந்த ஒரு செயலுக்கும் தொடர்ச்சியான மேலாண்மை - கண்காணிப்பு வேண்டும் என்பது கருத்து. 520.

## 53. சுற்றந்தழால்

பழகிய சுற்றத்தைப் பேணிப் பாதுகாத்துக் கொள்ளுதல். பிறப்பின் வகையாலும் பழகிய வகையாலும் முறையே அமைவது உறவுச்சுற்றம் நட்புச் சுற்றம். சுற்றம் சூழ வாழ வாழ்க்கையின் வளர்ச்சிக்குத் துணை. சுற்றம் ஆக்கம் தரும். பாதுகாப்புத் தரும். சுற்றம் சூழ வாழ்தல் ஒரு கலை. சுற்றம் பேணி வாழ்தலுக்கு இடையறாத அன்பு, நினைவில் வைத்துப் பாராட்டுதல் அன்பு காட்டுதல் ஒத்துப் போதல் குற்றம் பாராட்டாது இருத்தல் ஆகியன தேவை. நாடாள்வோருக்கும் சரி, தனி ஒருவராய் வெற்றி பொருந்திய வாழ்க்கை நடத்த விரும்புவோருக்கும் சரி சுற்றம் தேவை. செய்ய வேண்டிய வினைத் தேர்தலுக்கும் சுற்றம் துணை செய்யும் என்பதால் "தெரிந்து வினையாடலுக்குப்" பின்னும் வாழ்க்கையில் மறதிகள் வராமல் நினைவூட்டி இயக்கும் பணியைச் சுற்றம் செய்து வாழ்க்கைக்கு வலிவூட்டும் என்பதால் பொச்சாவாமைக்கு முன்னும் "சுற்றந்தழால்" எடுத்துக் கூறப்பெற்றது.

521. பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே உள.

ஒருவர் தம்மிடத்து உள்ள பற்றை நீக்கிக் கொண்டாராயினும் அவர்மாட்டுத் தாம் கொண்டொழுகிய பழைய அன்பை மறவாது பாராட்டிப் பேணுதல் நல்ல வகையில் அமைந்த சுற்றத்தின்கண் உண்டு.

தம்மொடு பழகிய ஒருவர் தமது பழகிய நட்பை முறித்து விட்டால் தாமும் முறித்துக் கொள்ளாது பழைய அன்பைப் பாராட்ட வேண்டும் என்பது கருத்து.

இங்ஙனம் பழைய அன்பைப் பாராட்டினால் பற்றற்றுப் போனாரும் திரும்ப நட்புச் சுற்றமாக வருதல் கூடும். நட்புச் சுற்றமாக வராது போனாலும் தீமை செய்தலுக்கு ஒருப்படார் என்பது கருத்து. 521.

522. விருப்புஅறாச் சுற்றம் இயையின் அருப்புஅறா
ஆக்கம் பலவும் தரும்.

ஒருவருக்கு அன்பு அறாத சுற்றம் எய்துமாயின் அச்சுற்றம் அவருக்கு வளர்ச்சி குன்றாத செல்வம் பலவும் தரும்.

அன்பு என்பது உண்மையாயிருப்பின் மேலும் மேலும் அந்த அன்பு முறுகி வளரும். .அன்பின் வழியதாகிய விருப்பம் குறையாது. குறையவும் கூடாது.

செல்வமும் இடையீடின்றி வளர வேண்டும் என்பதை உணர்த்த ''அன்பறா ஆக்கம்'' என்றார்.

சுற்றமாகப் பலர் கூடி தொழில் செய்து வளர்த்தலின் காரணமாக ஆக்கம் வளரும் என்றார். 522.

523. அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவுஅளாக்
கோடுஇன்றி நீர்நிறைந் தற்று.

தன் சுற்றத்தினருடன் நெஞ்சு கலந்த நிலையில் கலந்து பேசாதவன் வாழ்க்கை குளத்தில் நீர் நிறைந்தது போலாகும்.

கரையில்லாத குளத்து நீர் புறம் போய் விடும். பயன்படாது. சுற்றத்துடன் பேசி அளவளாவி வாழாதான் வாழ்க்கையில் ஐயமும் சூழ்ச்சியும் பகையும் தோன்ற இடமுண்டு. அதனால் உள்ள செல்வமும் வம்பு வழக்குகளுக்கு ஆகி அழிந்து விடும் என்று உணர்த்தியதாகக் கொள்க. 523.

524. சுற்றந்தால் சுற்றப் படஒழுகல் செல்வம்தான்
பெற்றத்தால் பெற்ற பயன்.

ஒருவன் பெற்ற செல்வத்தால் ஆய பயனாவது தன் சுற்றத்தாரால் சுற்றம் எனத் தழீஇக் கொள்ளப் பெற்று வாழ்தல்.

சுற்றம் தழீஇய வாழ்க்கை செல்வம் ஈட்டவும் துணை செய்கிறது. ஈட்டிய செல்வத்தைப் பாதுகாக்கவும் துணை செய்கிறது. துய்ப்பிலும் கூடித் துணை செய்கிறது. செல்வத்தின் பயன் சுற்றம் பேணுதலேயாம். 524.

525. கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.

ஒருவன் சுற்றத்திற்குக் கொடுத்தலும், இனிய சொல் சொல்லலும் வல்லவனாயின் தொடர்ந்து வரும் பல்வகைச் சுற்றத்தாலே சூழப்படுவான்.

கொடுத்தலும் இன்சொலும் அரிது. அதிலும் கொடுத்தலை விட இன்சொற் சொல்லுவது அரிது. ஒரோவழி அகநிலை உடன்பாடு இன்றியே கூடக் கொடுத்தல் நிகழும். ஆனால் இன்சொற் சொல்லுதல் அரிது.

அடுக்கிய சுற்றமாவது சுற்றத்தார் அவர்தம் சுற்றத்தார் என்று சுற்றத்தாரின் எண்ணிக்கை விரிவடையும் என்றவாறு. 525.

526. பெரும்கொடையான் பேணான் வெகுளி அவனின்
மருங்குஉடையார் மாநிலத்து இல்.

ஒருவன் மிக்க கொடை கொடுப்பவனாகவும் வெகுளியைப் பேணாதவனாகவும் இருப்பின், அவனைப் போலச் சுற்றத்தால் சூழப்பட்டார் இவ்வுலகத்தில் இல்லை.

''பெருங்கொடை''- வறுமை நீங்குமாறு அளித்தல்.

ஒருவனுக்குப் பெருங்கொடை கொடுப்பவனாகவும் வெகுளி யில்லாதவனாகவும் உடைய ஒருவன் சுற்றமாக அமையின் அவனைப் போலப் பேறு பெற்றார் இந்நில உலகத்தில் இல்லை. 526.

527. காக்கை கரவா கரைந்துஉண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள.

காக்கை இரையாயின கண்ட இடத்து மறையாது இனத்தை அழைத்துக் கூடி உண்ணும். இத்தன்மை உடையார்க்கே ஆக்கமும் (செல்வமும்) உண்டு. கூடி உண்பார்க்கு அழுக்காறின்மையால் செல்வப்பாதுகாப்பும் கூடி உண்பதன் மூலம் சுற்றம் அமைவதால் செல்வ வளர்ச்சியும் உண்டு என்ற கருத்து அறியப் பெற்றது. 527.

528. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்.

அரசன் எல்லாரையும் போலப் பொதுவில் நோக்காது சுற்றத்தாரைத் தகுதி வரிசையில் வைத்துச் சிறப்புச் செய்வதன் காரணமாக அவனோடு சுற்றமாகக் கூடி வாழ்வார் பலர்.

எல்லாரும் சமம் என்பது இலக்கேயானாலும் சுற்றத்தாராய் அமைந்து செல்வ வளர்ச்சிக்கும் பாதுகாப்புக்கும் துணையாய் அமைந்திருப்பார், முதல் நிலையில் பேணப்பட வேண்டும் என்று உணர்த்தியது. 528.

529. தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்
காரணம் இன்றி வளரும்.

ஒருவருக்குச் சுற்றமாக அமைந்திருந்து பின் யாதானும் ஒரு காரணத்தால் நீங்கியவர்கள் திரும்பவும் காரணமின்றியே சுற்றமாக வருதல் கூடும். சுற்றமாயமைந்தார் காரணமின்றியே பிரிந்து சென்றால், காரணமின்றியே திரும்ப வந்து சேர்வர். சுற்றமாய்க் கொள்ளுதலுக்குக் காரணம் இருத்தல் வேண்டும் என்று உய்த்துணர வைத்தது.

பிரிதலுக்குரிய காரணம் இல்லாத நிலையில் பிரிந்தார் தாமே மீண்டும் வருவர் என்றும் கூறியவாறு . 529.

530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்துஇருந்து எண்ணிக் கொளல்.

காரணம் இன்றித் தன்னைப் பிரிந்துபோய் அழைப்பின் பேரில் வந்து சேரும் சுற்றத்தானை, பிரிந்து சென்றதற்குரிய காரணம் யாதென ஆராய்ந்து அது மீண்டும் நிகழாதவாறு பேணிக் காத்துக் கொள்க.

சுற்றமாய் அமைதலும் பிரிதலும் அடிக்கடி நிகழின் அன்புக்கு மாறாகப் பகையே வளரும் என்பதறிக. விருப்பறா அன்பில் பகையும் பிரிவும் சேரின் தீராத்துன்பம் தரும். குடம் அமுதுக்கு ஒரு துளி நஞ்சு. 530.

## 54. பொச்சாவாமை

பொச்சாப்பு - மறதி. செய்ய வேண்டிய கடமையைச் செய்யாது விடுதல். களிப்பின் மிகுதியினாலும், சோம்பலின் மிகுதியினாலும் கடமைகளைச் செய்யாது சோர்ந்து விடுதல்.

மறதி பணிகளைக் கெடுக்கும்; நண்பரை இழக்கச் செய்யும். மறவாது நினைவில் கொள்ள வேண்டியவற்றைக் கொண்டு வாழ்தல், வாழ்க்கையைப் பயனுடையதாக்க உதவி செய்யும்.

531. இறந்த வெகுளியின் தீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியின் சோர்வு.

நாடாள்வோருக்கு மிகுந்த களிப்பால் வரும் மறதி, அளவிறந்த எரி சினத்திலும் தீயதாம் .

களிப்பும் சினமும் அளவொடு இருப்பின் பயன் தரும். அளவினைக் கடப்பின் இரண்டுமே கேடு பயக்கும் என்றுணர்த்தியது.

வாழ்க்கைக்குக் களிப்பும் இன்றியமையாத ஒன்று என்றதால் ''சிறந்த உவகை''என்றார்.

நன்னெறியினைக் காத்ததற்காக ஒரோவழி வெகுளியும் துணை செய்யும். 'அவியினும் வாழினும் என்?'' என்ற ஆசிரியர் வாக்கை அறிக. அதனால் அளவிறந்த எரிசினம் ஆகாது என்றார்.

வெகுளி பகைவரைக் கொல்ல ஒரோவழி பயன்படும். ஆனால் மறதியினால் வரும் வினைச்சோர்வு தன்னையே கொல்வது என்பதால், வெகுளியினும் வினைச்சோர்வு தீது என்றார்.

அளவிறந்த சினத்தால் பலர் பகைவராவர்.மறதியால் வரும் பகைவரின் அளவு அதனினும் மிகுதி உடையதாகும். வெகுளியால் வரும் பகையிலும் மறதியால் வரும் பகைமை பெரிதும் துன்பம் செய்யும் . எப்படியெனில் மறதி என்று ஏற்றுக்கொள்ளாது இகழப்பட்டதாகவும் அலட்சியப்படுத்தப்பட்டதாகவும் நன்றி மறந்ததாகவும் கருதப்பெற்று மிகவும் பழிக்கு ஆளாக நேரிடும்.

வெகுளி ஒரோவழி தோன்றுவது, மறதி வாழ்நாள் முழுதும் அனைத்துத் துறையிலும் ஊடுருவி இடர்ப்பாட்டினைச் செய்யும் . 531.

532. பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

நிலையான வறுமை அறிவைக் கெடுப்பது போல மறதி ஒருவருடைய புகழைக் கெடுக்கும் .

நிலையான வறுமை கற்கும் வாய்ப்பைத் தடைசெய்துவிடுகிறது. வறுமையுடையாருக்குச் சமூக அங்கீகாரம் இன்மையால் கேட்பதற்கும் வாய்ப்பு கிடைப்பது அரிது. வறுமை உடையோருக்குச் சமூக அங்கீகாரம் இன்மையால், கலந்துரையாடல் மூலமும் அறிவு வளர இயலாமல் போகிறது.

மறவாது நன்றி பாராட்டுவதாலும், உறவினைப் பேணி வளர்ப்பதாலும், உதவி செய்வதாலும் புகழ் வளரும். மறதியால் - நினைவின்மையால் புகழ் கெடும் என்றார். 532

533. பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை அதுவுலகத்து
எப்பால்நூ லோர்க்கும் துணிவு.

கடமை மறந்தொழுகுவார்க்குப் புகழுடைமை இல்லை. அது உலகத்தில் உள்ள எல்லா நூலோருக்கும் ஒப்ப முடிந்த முடிபாகும். முற் கூறிய கருத்தை மீண்டும் இன்றியமையாமை கருதி வலியுறுத்திக் கூறியது,

மறதியின்மை - வினைச் சோர்வின்மை, வாழ்க்கையின் பல்வேறு துறைகளிலும் வெற்றி பொருந்திய வாழ்வு நடத்தத் தேவை என்பதால் ‘ எப்பால் நூலோர்க்கும் துணிபு’ என்றார்.

மறதிக்காளாகி - வினைச் சோர்வுபடாமல் வாழ்வது உலகப் பொது நியதி என்றுணர்த்தியது. 533

534. அச்சம் உடையார்க்கு அரண் இல்லை ஆங்குஇல்லை
பொச்சாப்பு உடையார்க்கு நன்கு.

உள்ளத்தில் அச்சமுடையார்க்கு அரண் இருந்தாலும் பயனில்லை. அதுபோல மறதி உடையார்க்கு எந்தச் செல்வம் இருந்தாலும் பயனில்லை.

மறதி உடையர்க்கு எந்தச் செல்வம் இருந்தாலும் பயனில்லை 533.

535. முன்னுறக் காவாது இழுக்கியான் தன்பிழை
பின்னூறு இரங்கி விடும்.

தன்னால் தடுக்கப்பட வேண்டிய துன்பங்களை அவை வரும் முன்பே அறிந்து தன்னைக் காவாது மறந்திருந்தவன், பின் துன்பம் வந்துற்ற பொழுது தடுக்க இயலாது போவதின் காரணமாக நினைந்து வருந்தி அழிவான். 535.

536. இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
வாயின் அதுஒப்பது இல்.

நாடாள்வோருக்கு எப்போதும் எவரிடத்திலும் எப்போதும் மறதியின்மை தப்பாது வாய்க்குமாயின் அதுபோன்ற நன்மை வேறு ஒன்றும் இல்லை.

நாம் ஒருவரை மறவாமல் நினைவில் வைத்திருக்கிறோம் என்பது அவருக்கு மகிழ்வு தருவது. அதனால் விளையும் நன்மை பல என்றுணர்த்தியது. 536.

537. அரியஎன்று ஆகாத இல்லைபொச் சாவாக்
கருவியால் போற்றிச் செயின்.

செய்தற்கரியன என்று ஒன்று இல்லை, மனத்தில் மறவாது போற்றி எண்ணிச் செய்யின்.

நீங்கா நினைவொடு எண்ணிச் செயல்படுவோர்க்கு ஆகாத காரியம் என்று ஒன்று இல்லை. 537.

538. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யாது
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்.

நாடாள்வோருக்குச் சிறந்தவை என்று அறநூலோரும் சான்றோரும் உயர்த்திக் கூறிய செயல்களைக் கடைபிடித்துச் செய்தல் வேண்டும். இங்ஙனம் விதிக்கப்பட்டவைகளைச் செய்யாது இகழ்ந்தார்க்கு - மறந்தார்க்கு எழுமையும் நன்மை இல்லை.

வினைச் சோர்வு இம்மை மட்டுமல்ல, எழு பிறப்பும் தொடரும் என்றுணர்த்தியது. 538.

539. இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாம்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

ஒருவர் மகிழ்ச்சியில் மயங்கி இருக்கும்பொழுது முன்பு இத்தகைய மயக்கத்தால் வினைச் சோர்வு பட்டுக் கடமையைச் செய்யாததன் காரணமாகக் கெட்டுப் போனவர்களை நினைந்து கொள்க.

வினைச் சோர்வு பட்டார் துன்புறுதல் மறுக்க இயலாத உண்மையாதலால் ''கெட்டார்'' என்று உணர்த்தியவாறு. 539.

540. உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றும்தான்
உள்ளியது உள்ளப் பெறின்.

நாடாள்வோர் தாம் கருதிய பொருளைத் தாம் கருதியவாறே எளிதில் பெறுதல் கூடும், தாம் எண்ணியதைப் பின்னும் விடாது எண்ணக் கூடுமாயின். . அடைய எண்ணிய ஒன்றை அடைகிற வரையில் மறவாது தொடர்ந்து வினைச் சோர்வு படாது உழைத்தால் எளிதில் அடைய முடியும் என்று உணர்த்தியவாறு. 540.

## 55. செங்கோன்மை

நேர்மையான ஆட்சி - வளைவில்லாத கோல் நேராக இருக்கும்.

யார் மாட்டும் எதற்காகவும் வளைந்து குறுகிய நலன்கள் தேடாது, மக்கள் நலனையே நேர்மையையே நாடிச் செய்யப்பெறும் ஆட்சி செங்கோன்மையாம்.

541. ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை.

யார் குற்றம் செய்தாலும் - குற்றம் செய்தார்மாட்டுக் கருணையின்றி நடுநிலையுணர்வுடன் குற்றத்தினையும் குற்றம் நிகழ்ந்த சூழ்நிலையினையும் அதற்குரிய தண்டத்தினையும் ஆராய்ந்து செய்வதே முறை.

குற்றத்திற்குத் தண்டனையே தவிர, மனிதருக்கு அல்ல; இது இந்நூலின் சிறப்பு.

மனிதரைப் பொருத்து குற்றத்திற்குத் தண்டனை மாறும் வழக்கை மறுத்தது. 541.

542. வான்நோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி.

வான் மழையை நம்பி உலகமெல்லாம் வாழும். அதுபோல, மன்னவன் செங்கோலை நம்பி குடிமக்கள் வாழ்வர்.

உடல் பாதுகாப்புக்கு மழையும் உயிர் உடைமைப் பாதுகாப்புக்கு நல்லாட்சியும் தேவை. வானின் மழை, இயல்பாகக் கிடைப்பதுபோல அரசின் நீதியும் இயல்பாகக் கிடைத்தல் வேண்டும். வான்மழை பொய்ப்பின் வளம் கெடும். அரசு முறை பிறழின் மக்களின் வாழ்க்கை கெடும். 542.

543. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்.

அந்தணர்கள் செய்யும் அறநூல்களுக்கும், அறத்திற்கும் முதற்காரணமாக நின்றது மன்னனுடைய நல்லாட்சியேயாம்.

அந்தணர் வாழ்தலும், நூல் செய்தலும், அறம் பயிலுதலும் நல்லாட்சியில் மட்டுமே நிகழ இயலும். 543.

544. குடிதழீஇக் கோல்ஓச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு.

குடிமக்களைத் தழுவி நல்லாட்சி நடத்தும் மன்னனின் அடி நிழலைத் தழுவி இந்த உலகம் நிற்கும்.

தழுவுதல் - பரிவுடன் பாதுகாத்தல் ; வேண்டுவன செய்தல்.

'குடிதழீஇ' என்றதால் மக்களின் நலனை முதன்மைப்படுத்தியது அறிக. 544.

545. இயல்புளிக் கோல் ஓச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு.

முறைப்படி நல்லாட்சி செய்யும் மன்னவனது நாட்டில் பருவ மழையும் குன்றாத விளைவும் உள்ளனவாம்.

நல்லாட்சி-பருவமழை-நல்லவிளைவு. ஒன்றிற்கு ஒன்று இயற்கையாகவும் நடைமுறைச் செயல்களிலும் காரண-காரியங்களாகும். 545.

546. வேல்அன்று வென்றி தருவது மன்னவன்
கோல்அதூஉம் கோடாது எனின்.

மன்னவனுக்கு வெற்றியைத் தருவது வேல் அன்று; நீதி முறை மாறாத ஆட்சியே வெற்றியைத் தரும்.

போரில் வேல் கொண்டு வெற்றிபெற, நாட்டில் நல்லாட்சி நிலவ வேண்டும். வேல் வெற்றியைத் தந்தாலும், நாட்டில் நல்லாட்சி இல்லாது போனால் அந்த வெற்றி பயனுடையதாகாது. 546.

547. இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்.

உலகம் முழுவதையும் அரசன் காப்பான்; அரசனை - அவன் முட்டுப்பாடுகள் நேர்ந்த பொழுதும் வழாஅது செய்யும் நல்லாட்சியே காக்கும்.

''முட்டுப்பாடு வந்துற்றபோதும் முறை செய்தலே'' நல்லாட்சி என்றவாறு.

நல்லாட்சி இல்லையாயின் மக்கள் அரசை எதிர்த்து அழிப்பர் என்பது உணர்த்தியவாறு. 547.

548. எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும்.

நீதி வேண்டியவர்க்குக் காட்சிக்கு எளியராயிருந்து, வேண்டி நின்ற நீதியைத் தக்கவாறு ஆராய்ந்து முறை செய்யாத மன்னவன் தாழ்ந்த நிலையில் நின்று தானே கெடுவான்.

நல்லாட்சி நடத்தாத மன்னன் பகையின்றித் தாமே கெடுவன் என்றவாறு. 548.

549. குடிபுறங் காத்துஓம்பிக் குற்றம் கடிதல்
வடுஅன்று வேந்தன் தொழில்.

தன்குடிகளைப் பிறர் வருத்தாமல் பாதுகாத்தும் தானும் வருத்தாமல் பேணிக்காத்து அக்குடிகளிடத்துக் குற்றம் கண்டவிடத்துக் கடிதல் அரசனுக்குக் குற்றமன்று; அது அவன் தொழில்.

பேணிக்காத்தலும்,- கடிந்து தண்டம் வழங்குதலும் செயலால் முரண்பாடு. விளையும் பயனால் ஒன்றேயாம். அதாவது குடிமக்களுக்கு நன்மையேயாம் .

அரசு வழங்கும் தண்டனைகள் நன்மை நோக்கியது என்ற உண்மை உணர்த்தியவாறு. 549.

550. கொலையில் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

அரசன், கொலையிலும் கொடியவராக விளங்குபவரை மிகக் கடுந்தண்டங்களால் துன்புறுத்தல், கழனியில் களை பிடுங்கி எடுத்துப் பயிரைக் காப்பதினை ஒக்கும்.

''கொலைதான் மிகக் கொடியது''. அந்தக் கொலையை விடக் கொடியவர்கள் என்றதால் கொடுமையின் எல்லையை உணர்த்தியது அறிக.

''களை கட்டதனோடு நேர்'' என்றதால், அரசனின் ஒறுத்தலைக் கொலை செய்தல் என்று கொள்வதில் தவறில்லை. 550.

## 56.கொடுங்கோன்மை

அறநெறிச் சார்பும் நீதித்தன்மையும் இல்லாது ஆளுதல் கொடுங்கோன்மை. அரசிடம் அதிகாரங்கள் மையப்படுத்தப் பெற்றுள்ளன, அரசின் அதிகாரங்கள் அரசுக்காக அல்ல: மக்களுக்காகவே அரசிடம் அதிகாரங்கள் மையப்படுத்தப் பெற்றுள்ளன. அரசு தன்னுடைய அதிகாரத்தை முறையாகச் செலுத்தி மக்களுக்கு நம்பிக்கையும், நல்லெண்ணத்தின்பாற்பட்ட வாழ்க்கையும், உத்திரவாதம் உள்ள நல்வாழ்க்கையும் வழங்க வேண்டும்.இங்ஙனம் வழங்கும் அரசு 'செங்கோல்' அரசு. இதற்கு மாறாக மக்களை வருத்தித் துன்புறுத்தும் அரசு கொடுங்கோல் அரசு. தமிழ்நாட்டு மக்கள் கொடுங்கோல் அரசுகளைப் பெரும்பாலும் சந்தித்ததில்லை .

551. கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்கொண்டு
அல்லவை செய்தொழுகும் வேந்து.

பகை காரணமாக ஒருவரைக் கொல்லத் துணிந்து கொலை செய்பவரினும் கொடியவன் தமது ஆசை காரணமாக மக்களை அலைக்கழிவு செய்து துன்புறுத்தும் அரசன்.

பகை கொள்ளுதல் தீது. ஒரோவழி பகை கொண்டாலும் பகைமையை மாற்றிக் கொள்வதற்குரிய நன்னெறிகள் மேற்கொள்ளப்பட வேண்டும். பகை காரணமாக ஒருவரைக் கொல்ல நினைப்பது குற்றம்.

அரசு இயற்றுவோர் ஆசைகளுக்கு அப்பாற்பட்டவர்களாக எளிமையும் சீலமும் உடையவர்களாக இருத்தல் வேண்டும் என்பது உணர்த்தியது.

எவர் ஒருவரும் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளவே விரும்புவர். அதனால் மக்களுக்கும் பிறருக்கும் துன்பத்தையே தருவர். 551.

552. வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு.

கையில் வேல் கொண்டு நின்று வழிச் செல்வோரிடம் ''பொருள் தா'' என்று கேட்டல் இரவு அன்று. அஃது அச்சுறுத்தித் துன்பம் தரும் வழிப்பறியேயாம். அதுபோலத்தான் அதிகாரம் பெற்றுள்ள அரசு குடிமக்களிடம் இரந்து கேட்பதூஉமாம்.

அதாவது அரசு, அச்சுறுத்தல் இன்றி வரி முதலியனவற்றைத் தண்டுதல் வேண்டும் என்பது உணர்த்தியவாறு.

இன்று நமது நாட்டில் கணக்கில் வாராப்பணம் (கறுப்புப்பணம்) கணிசமான அளவு புழக்கத்தில் உள்ளது.இது தீது. வரி விதிப்பு முறைகளும் வசூலிக்கும் முறைகளும் எளிமைப்படுத்தப் பெற்றால் கறுப்புப் பணம் குறையும்.அதோடு நாட்டின் பொது அமைப்பில் ஆட்சியில் எதையும் பணம்(லஞ்சம்) கொடுத்துச் சாதிக்க வேண்டிய நிலை இல்லாமல் பொதுமைப்படுத்தி முறைப்படுத்தினால்தான் கறுப்புப் பணம் குறையும்.

மக்கள் சமுதாயத்தில் அறிவார்ந்த ஆள்வினையால் ஈட்டப்படாத செல்வம் அனைத்தும் குற்றத் தன்மையுடையது என்ற நியதி வழங்குதல் வேண்டும். 552.

553. நாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாள்தொறும் நாடு கெடும்.

நாட்டில் நடைபெறும் நிகழ்வுகளை நாள்தோறும் நாடி முறைமை செய்யாது - நீதி வழங்காது இயங்கும் அரசினைப் பெற்றுள்ள நாடு நாள்தோறும் அழிந்து வரும்.

நாட்டில் நடைபெறும் அனைத்து நிகழ்வுகளையும் அதன் பின்னணிகளையும் எதிர் விளைவுகளையும் நாள்தோறும் அரசு தம் செவிகளால் கேட்டும் தாமே நேரில் சென்று கண்களால் கண்டும் நாடி முறைமை செய்தல் வேண்டும். இங்ஙனம் செய்யாத அரசு நாள்தோறும் கெட்டுக் கொண்டு வரும்.

''நாள்தொறும் நாடி'' என்றது ஒவ்வொரு நாளும் தவறாது ஆய்வு செய்ய வேண்டும் என்று உணர்த்துவதற்காக. மேலும் ஒரு நிகழ்வின் நன்மை தீமைகள் என்றோ இருந்த நிலையிலேயே இருக்கும் என்ற அடிப்படையில் ஆட்சி செலுத்துதல் நன்றன்று. சமூகச் சூழ்நிலையினாலும் காலத்தின் விளைவுகளாலும் நன்மை தீதாதலும் தீது நன்மையாதலும் நல்லவர் கெட்டவர் ஆதலும் கெட்டவர் நல்லவர் ஆதலும் உண்டு. ஆதலால் எந்த ஒன்றையும் அன்றாடம் ஆய்வு செய்க என்று உணர்த்தியது.

''நாள்தொறும் நாடி''என்றதால் நீதி இயல்பாக அமையாது நாடிச் சென்றுதான் கண்டுகொள்ள வேண்டும் என்பதும் உணர்த்தியவாறு .

பாண்டியன் நெடுஞ்செழியன் , மெய்ப்பொருள் நாயனார் ஆகியோர் நாள்தோறும் நாட மறந்தமையினாலேயே அல்லலுக்கு ஆளாயினர். 553.

554. கூழும் குடியும் ஒருங்குஇழக்கும் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு.

முறை தவறிக் கொடுங்கோல் ஆட்சி நடத்தும் அரசு நாட்டின் வளத்தைையும் குடிமக்களையும் ஒரு சேர இழக்கும்.

முறை சேராது கொடுங்கோல் ஆட்சி நடைபெறும், நாட்டில் வாழும் மக்கள் துன்பத்தின் காரணமாகப் புரட்சி செய்து அரசையே மாற்றி அமைத்து விடுவர் என்பது கருத்து. ஜார் மன்னனின் அரசு அகற்றப்பட்ட வரலாற்றை அறிக. 554.

555. அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண ணீர்அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

கொடுங்கோன்மை மிக்க அரசின்கண் அகப்பட்டுக் கொண்ட மக்கள் , அல்லல் பொறாது அழுது வடிக்கும் கண்ணீர் அரசின் செல்வத்தை அழிக்கும் படையாகும்.

நாட்டு மக்களை வறுமையில் உழல விட்டுவிட்டுச் சுகபோகத்தில் திளைக்கும் அரசுகள், மக்களின் துன்பத்தால் விழும் அல்லது மாற்றப்படும்.

அரசியல் புரட்சிகளை உருவாக்கும் ஆற்றல் ஏழைகள் அழுத கண்ணீருக்கு உண்டு என்பது கருத்து. 555.

556. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதுஇன்றேல்
மன்னாவாம் மன்னர்க்கு ஒளி.

செங்கோல் முறையில் பொருந்தி நின்று ஆட்சி செய்யும் அரசிற்குப் புகழ் பொருந்தி நிற்கும். செங்கோல் முறைமை இல்லையெனில் அரசுகளுக்குப் புகழ் இல்லை.

அரசுக்குப் புகழ் என்பது -ஆளப்படும் மக்களின் மனநிறைவுடைய புகழ்ச் சொற்களேயாம். 556.

557. துளியின்மை ஞாலத்திற்கு எற்றுஅற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு.

மழை இல்லாமை வையகத்தில் வாழும் உயிர்களுக்கு எவ்வகைத் துன்பத்தைத் தருமோ அவ்வகைத் துன்பத்தை அரசின் பேணுதலை இழந்த குடிமக்கள் பெறுவர்.

வளரும் பயிருக்கு வான்மழை.
வளரும் குடிகளுக்கு நல்லரசு. 557.

558. இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா
மன்னவன் கோல்கீழ்ப் படின்.

முறை செய்யாத மன்னவனின் ஆட்சியில் வறியராய் வாழ்தலை விட பொருளுடையராக வாழ்தல் மிகுந்த துன்பத்தைத் தரும்.

கொடிய ஆட்சி செய்யும் அரசன் முறைகேடாகத் தமது வாழ்வுக்காகப் பொருளுடையாரை அச்சுறுத்திப் பொருள் சேர்ப்பன் என்பதால்

559. முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்.

முறைமை தவறி குடிமக்களைத் துன்புறுத்தும் அரசு உள்ள நாட்டில் பருவ மழையும் பெய்யாது; பருவம் தப்பிய நிலையில் கூட மழை பெய்யாது.

முறை தவறிய அரசு நிலவும் நாட்டில் 'பருவ மழை பொய்க்கும்' என்பது நம்பிக்கை மட்டுமல்ல; உண்மையும் கூட. 559.

560. ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின்.

உயிர்களைக் காத்தற்குரிய அரசு கடமை தவறி மக்களைக் காக்கத் தவறிவிடின் அந்நாட்டில் பசு பால் கறக்காது. அந்தணர் மறைகளை ஓதுதலை மறப்பர்,

பேணுபவர்க்கே பயன் தருவன பசுக்கள். பேணிக் கேட்போருக்கே அந்தணர் மறை ஓதுவர். கொடுங்கோல் அரசில் இவை நிகழ வாய்ப்பில்லை என்பது கருத்து,. 560.

## 57.வெருவந்த செய்யாமை

அஞ்சத்தக்க காரியங்களைச் செய்யாமை. தான் அஞ்சக் கூடியவற்றையும் மற்றவர்கள் அஞ்சக்கூடியவற்றையும் செய்யாதிருத்தல்.

561. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து.

ஒருவருடைய குற்றத்தை முறையாக நடுவு நிலையில் நின்று ஆராய்ந்து அக்குற்றத்தைச் செய்தவர் மேலும் செய்யாத வண்ணம் தடுக்கும் நோக்கத்துடன் குற்றத்திற்கு ஏற்றவாறு தண்டிப்பவனே நல்லரசன்.

ஒருவருடைய குற்றத்தை முறையாக விசாரித்தறிதலை 'தக்காங்கு நாடி' என்றார். தண்டனை வழங்குவதன் நோக்கம் ஒறுத்தலன்று. மேலும் குற்றம் செய்யாது திருத்தமுறுதலுக்கே என்பதனை உணர்த்த ' தலைச் செல்லா வண்ணத்தால்' என்றார். 561.

562. கடிதோச்சி மெல்ல எறிக நெடிதுஆக்கம்
நீங்காமை வேண்டு பவர்.

ஆட்சிச் செல்வம் நெடிய காலம் நிற்றலை விரும்பும் அரசர், குற்றவாளியைத் தண்டிக்கும் பொழுது தண்டனையைக் கடுமையாகக் காட்டி, மென்மையாகச் செய்க.

கடிதோச்சுதல், குற்றம் செய்வோர் குற்றம் செய்ய அஞ்சுதலுக்கும் ,மெல்ல எறிதல் குற்றும் செய்வோர் அழிவினைத் தரும் என்று அஞ்சுதலுக்கு ஆளாவதைத் தவிர்க்கவும் என்பதறிக.
562.

563. வெருவந்த செய்துஒழுகும் வெங்கோலன் ஆயின்
ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.

அரசன் குடிமக்களுக்கு அஞ்சுதலுக்குக் காரணமான செயல்களைச் செய்து ஒழுகும் கொடுங்கோலனாக இருப்பின், அவன் விரைந்து கெடுதல் உறுதி.

மறு ஆய்வு இல்லாத முடிவு என்பதை உணர்த்த 'ஒருவந்தம்' என்றார். 'கெடுதல்' தன்வினையாகக் கூறிய அமைதி அறிந்துணர்க. அதாவது, மற்றவர்கள் அஞ்சத்தக்கன செய்தொழுகுபவர் கெடுப்பார் இல்லாமலே கெடுவர் என்பது கருத்து. 563.

564. இறைகடியன் என்றுஉரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி ஒல்லைக் கெடும்.

'நமது அரசன் கொடியவன்' என்று குடிகளால் சொல்லப்படும் துன்பந்தரும் சொல்லைத் தோற்றுவிக்கும் அரசன் வாழ்நாளையும் செல்வத்தையும் இழப்பான்.

''இன்னாச் சொல்'' - தப்பிப் பிழைக்க வழி காணாது உளம் நொந்து உரைக்கும் சொல் . இன்னாச் சொல் வாழ்நாளைக் குறைக்கும் ; குடிமக்கள் உறவைக் கெடுக்கும்; செல்வத்தைக் குறைக்கும் என்று முறையே அறிக. 564.

565. அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்னது உடைத்து.

காணவிரும்பும் குடிமக்களுக்கு எளிதாகக் காண முடியாதவனாகவும் ஒரோவழி அரிய முயற்சிக்குப் பின் கண்டபோதும் கடுத்த முகத்தானாக விளங்கும் அரசனின் பெருஞ்செல்வம், பேய் பெருஞ்செல்வம் கண்டது போலவாகும்.

பேய், செல்வத்தைத் துய்க்குமாறறியாது; மற்றவர்களையும் துய்க்க அனுமதிக்காது. பயனற்ற செல்வம் என்பது குறிப்பு. 565.

566. கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்
நீடின்று ஆங்கே கெடும்.

அரசன் கடுஞ்சொல் சொல்பவனாகவும், கண்ணோட்டமில்லாதவனாகவும் இருப்பின் அவனுடைய பெருஞ்செல்வம் நீடித்தலின்றி

குடிமக்களுடைய அச்சத்திற்குக் காரணமாய் அமைவன கடுஞ்சொல்லும் கண்ணோட்டமின்மையுமாம்.

குடிமக்கள் அஞ்சிய வழி, செல்வப் பெருக்கம் தடைப்படும். அதனால் புதிய வருவாய் இன்றி அழிவது ஒரு வகை அழிவு. பிறிதொரு வகை அழிவு, குடிமக்கள் மேவி எதிர்த்து அழித்தல், இதற்குச் சான்று முடியாட்சிகளை எதிர்த்து நடந்த புரட்சிகளாகும். 566.

567. கடுமொழியும் கைஇகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம்.

பொறுத்தற்கியலாத கடுஞ்சொல்லும் குற்றம் செய்தவரால் தாங்குதலுக்குரிய அளவைக் கடந்த தண்டனையும் அரசனது பகையை வெல்லுதற்கு ஏற்ற வலிமையாகிய கடிய இரும்பையும் கூட அராவும் அரமாம்.

கடுமொழியும் கையிகந்த தண்டமும் அரசனின் வலிமையைக் குறைத்து அழிவைத் தரும். அதனால் அரம் என்று உவமையாக விளக்கப் பெற்றது. 567.

568. இனத்துஆற்றி எண்ணாத வேந்தன் சினத்துஆற்றிச்
சீறின் சிறுகும் திரு.

செய்ய வேண்டியன குறித்து அமைச்சரோடு கலந்து செய்யாமல் செயல்கள் செய்துழி அரசன் தவறு செய்து அத்தவற்றுக்காகக் காரணமின்றியே அமைச்சர்களைக் கோபித்துச் சீறும் அரசனின் செல்வம் நாள்தோறும் சுருங்கும்.

அரசன், தான் குற்றம் செய்துவிட்டு அக்குற்றத்தை அமைச்சர்கள் மேல் வைப்பதால் அமைச்சர்கள் ஆர்வம் குன்றுவர். அதனால் செல்வம் அழியும் என்றாயிற்று. 568.

569. செருவந்த போழ்தில் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

போர் வருவதற்கு முன்பே தமக்குப் பாதுகாப்பாக அரண் செய்து - கொள்ளாத அரசன், போர் வந்தபோது பாதுகாப்பின்றி அச்சத்தால் கெடுவான்.

வாழும்பொழுதே, எதிர்வரு நோக்கில் பாதுகாப்பு முயற்சிகள் தேவை என்றுணர்த்தியது. 569.

570. கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது
இல்லை நிலக்குப் பொறை.

கொடுங்கோலனிடம் கற்றோர்கள் சேரமாட்டார்கள். கல்லாதவர்கள் பிரிக்க இயலாதவாறு பிணைத்துக் கொள்வார்கள் என்பது கருத்து.

நல்லாரைச் சுமத்தல் பொறையாகத் தோன்றாது. கல்லாரைச் சுமத்தல் 'நிலக்குப் பொறை' என்றார். 570.

## 58. கண்ணோட்டம்.

பழகினவர்களின் விருப்பங்களை நிறைவேற்றுதல், அவர்கள் தகாதன செய்தொழுகும் பொழுது பொறுத்தாற்றுதல் முதலிய இயல்புகள் கண்ணோட்டத்தின் பாற்படும்; பழகினவர் அன்றி வருந்துவோர் மாட்டும் ஒரோவழி நிகழும்.

கண்ணோட்டம் னென்பது ஒரு சிறந்த பண்பாடு; ஒழுக்கம். அதே போழ்து விழிப்புணர்வும் சிறந்த செயல்பாட்டுத் திறனும் இல்லாதார் கண்ணோட்டத்தின் வழி இழப்புக்களைச் சந்திக்கக் கூடும். அவர்கள் இதனைத் தவிர்ப்பது நல்லது.

571. கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை
உண்மையான் உண்டுஇவ் வுலகு.

கண்ணோட்டம் என்னும் சிறந்த பண்பு இருப்பதினாலேயே இவ்வுலகம் அழியாது இருந்து வருகிறது.

கண்ணோட்டம் அழகு பொருந்திய பண்பாதலால் அதனைக் "காரிகை" என்றார். கண்ணோட்டம் ஆள்வோருக்கு இன்றியமையாதது. உலக இயக்கம் ஒருவரை ஒருவர் சார்ந்து ஒழுகுவதாக அமைவதால் "உண்டு இவ்வுலகு" என்றார். 571.

572. கண்ணோட்டத்து உள்ளது உலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.

உலக நடைமுறை கண்ணோட்டத்தினால் இயங்கி வருகிறது.கண்ணோட்டம் இல்லாதவர்கள் நிலத்திற்குச் சுமையென வாழ்வர்.

பயனின்மையால் " சுமை" என்றார். 572.

573. பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல் கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண்.

பாடுதலுக்குப் பொருத்தமில்லாத பண்ணினால் என்ன பயன்? அதுபோல் கண்ணோட்டம் இல்லாத கண்ணினால் என்ன பயன்?

பண் இசை நல்லதே. ஆயினும் கருத்துள்ள பாடலை மேவி இசை இருந்தாலே பயன். எனவே ''பண் என்னாம் பாடற்கியைபின்றேல்'' என்றார்.

கண்ணோட்டத்தின் செயற்பாடாகிய பரிவை வெளிக்காட்டுவது கண்ணேயாதலின், கண்ணோட்டமில்லாத கண், பயனற்றது என்று கூறினார். 573.

574. உளபோல் முகத்துஎவன் செய்யும் அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண்.

தகுந்த அளவிற்குக் கண்ணோட்டம் இல்லாத கண் முகத்தில் உள்ளதுபோல் தோன்றுவதன்றி வேறொரு பயனும் தராது.

''கண்ணோட்டம் இல்லாத கண்கள் '' பயனற்றவை என்பது கருத்து. கண்ணோட்டமும் தேவையான அளவுக்கு வேண்டும் என்பதனை உணர்த்த ''அளவினால்'' என்றார். வாழ்விற்கு ஆக்கந்தராத குறைந்த அளவு கண்ணோட்டம் காட்டுதல் பயனற்றது. கண் அமைப்பின் நோக்கமே கண்ணோட்டம் என்று உணர்த்தியமை அறிக. 574.

575. கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்
புண்ணென்று உணரப் படும்.

ஒருவனுடைய கண்ணிற்கு அழகு கண்ணோட்டம் காட்டுதல் , கண்ணோட்டம் இல்லாத கண் புண் என்று கருதப்படும்.

உடலின் மற்ற உறுப்புக்களுக்கு வேறு வகையால் அழகூட்டலாம். கண்ணிற்கு அழகு கண்ணோட்டம் காட்டுதலேயாம். கண்ணோட்டம் இலாதார் கண்கள் , காண்பவற்றின் மீது ஆசையுண்டாக்கி, அவ்வழித் துன்பம் தரும் ஆதலால் ''புண்'' என்றார். 575.

576. மண்ணோடு இயைந்த மரத்தனையர் கண்ணோடு
இயைந்துகண் ணோடா தவர்.

கண்களைப் பெற்றிருந்தும் கண்ணோடாத வன்நெஞ்சர் மண்ணோடு கலந்த மரம் போன்றவர்கள்.

''மண்ணோடு பொருந்திய'' என்று பொருள் கொள்வதிலும் தவறில்லை. மண்ணோடு பொருந்திய மரம் வளரும். மண்ணோடு கலந்து ஒன்றாகிப் போன மரம் வளராது. மட்கிய மரத்தால் மக்கட்குப் பயனில்லை என்றாயிற்று. ஆனால், மண்ணோடு கலந்து மட்கிய மரம், மனிதருக்குப் பயன்படாது போனாலும் மண்ணுக்கு உரமாகி விடும். கண்ணோட்டம் இல்லாதவர் எந்த வகையான பயனும் இல்லாதவர் என்பதறிக. 576.

577.கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்டம் இன்மையும் இல்.

கண்ணோட்டம் காட்டும் இயல்பில்லாதவர்கள் கண்ணில்லாத குருடர்கள் அனையவர்; கண்ணுடையவர் கண்ணோட்டம் இல்லாமலும் இருப்பது இல்லை.

கண்ணிற்குரிய கண்ணோட்டம் காட்டும் ஒழுக்கமின்மையால் ''கண்கள் இல்லை''என்று கூறினார். சிலருக்கு ஒரோவழி தற்சார்பான சூழ்நிலையில் தவிர்க்க இயலாத நிலையில் கண்ணோட்டம் நிகழும் என்பதை உணர்த்த '' கண்ணோட்டம் இன்மையும் இல்'' என்றார். 577.

578. கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்துஇவ் வுலகு.

காரியக்கேடு இல்லாமல் கண்ணோட்டம் காட்டவல்லவருக்கு இந்த உலகம் உரிமையுடையதாகும்

கண்ணோட்டமும் கடமையும் பெரும்பான்மையும் முரண்படுவன. இவை முரண்படாமல் - கடமை தவறாமல் கண்ணோட்டம் காட்டுதல் ஒரு அருந்திறன் ஆகும்.

579. ஒறுத்துஆற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்
பொறுத்துஆற்றும் பண்பே தலை.

தம்மை வருத்திப் பழகும் இயல்புடையாரிடத்தும் கண்ணோட்டத்துடன் அவர் செய்யும் துன்பங்களைப் பொறுத்தாற்றலே ஒருவருக்குத் தலையாய பண்பு.

தனக்குத் துன்பஞ் செய்தாரிடத்தும் கண்ணோட்டமே காட்டப் பெறுதல் வேண்டும். 579.

580. பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

தமக்கு நஞ்சூட்டினாலும், கண்ணோட்டத்தின்வழி அந்த நஞ்சினைக் குடித்து விட்டு, நஞ்சினைக் கொடுத்தாரோடு மேவி நட்புறவும் அமர்ந்திருப்பர் விரும்பத்தக்க கண்ணோட்டத்தினை விரும்புவர்.

கண்ணோட்டம் காட்டும் பண்பிற் சிறந்தவர்கள் நஞ்சினைத் தந்தாலும் குடித்துவிட்டுச் சாகாமல் வாழ்வார்கள் என்பதை உணர்த்த ''நஞ்சுண்டு அமைவர்'' என்றார். தூய அருளுள்ளம் படைத்தாரின் செங்குருதி நஞ்சினுக்கு மருந்து போலவாம். ஆதலால் மரணமில்லை என்று கூற '' அமைவர்'' என்றார்.சாக்ரடீசு , அப்பரடிகள் வரலாறுகளைக் கற்று அறிக. 580.

## 59.ஒற்றாடல்

ஆட்சி என்பது அளவிலாப் பொறுப்புடையது. அதுவும் மானுடத் தொகுதியை நிர்வகித்து நடத்துதல் என்பது இயலும் பணியன்று. ஆட்சியாளருக்குப் பகைவர் தோன்றுதலும் , நண்பர் தோன்றுதல் போல எளிதான ஒன்று. பகைவரே கூட நட்பாக நின்று தாம் கருதியது முடிக்க நினைப்பர். ஆதலால் பகைவர், நண்பர், சுற்றம், அலுவலர்கள் ஆகியவர்களின் முழுச் செயற்பாட்டையும் அறிந்து கொள்ளுதல் நாட்டின் பாதுகாப்புக்கு இன்றியமையாதது. இந்தப் பணியைத் திறமையுடன் செய்து முடிக்கும் பணிக்குப் பெயர் ஒற்றாடல்.

ஆட்சியின் நலன்கள் மக்களைச் சென்று அடைகின்றனவா என்று ஆராய்ந்தறிய ஒற்றாடல் பயன்படும்.

581. ஒற்றும் உரைசான்ற நூலும் இவைஇரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்.

ஒற்றும், புகழ்மை வாய்ந்த நீதிநூலும் ஆகிய இரண்டும் ஆட்சியாளனுக்குக் கண்கள் என்று தெளிதல் வேண்டும்.

ஒற்றரை ஒற்று என்றார். ஒற்றர் மூலம் புறத்தே நிகழ்வனவற்றைக் கண்டு, அவற்றின் நீதித்தன்மையை நூல்களின் வாயிலாகத் தெரிந்து செயற்பட வேண்டும் என்று கூறியது.
581.

582. எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில்.

எல்லாரிடத்தும் நிகழ்பவை எல்லாவற்றையும் எப்போதும் ஒற்றின் மூலம் உரியவாறு அறிந்து கொள்ளுதல் வேந்தன் தொழில்.

உள்ளது உள்ளவாறும், உரிய காலத்திலும் அறிதல் ''வல்லறிதல்'' ஆகும்.
582.

583. ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றம் கொளக்கிடந்தது இல்.

ஒற்றரால் எல்லாச் செய்திகளையும் மறைவாக அறிந்து வரச் செய்து , அவற்றினால் விளையும் பயனை ஆராய்ந்தறியாத அரசன் வெற்றியடைய இயலாது.

நாட்டில் நடக்கும் ஒவ்வொரு நிகழ்வின் உள்ளீட்டையும் அறிந்து, அதற்கேற்ப ஆட்சியியலை இயக்கினால் ஆட்சிக்கும் பாதுகாப்பு; மக்களுக்கும் பாதுகாப்பு. 583.

584. வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
அனைவரையும் ஆராய்வது ஒற்று.

ஆட்சித் தொடர்புடைய காரியங்களை இயற்றுபவர்கள், தம் சுற்றம், வேண்டாதார் ஆகிய அனைவரையும் ஆராய்ந்தறிவதே ஒற்று.

சுற்றத்தார் பகைவராதலும் கூடுமாதலால், சுற்றத்தாரையும் ஆராய்ந்தறிக என்றார். 584

585. கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று.

ஒற்றப்பட்டார், கண்டால் ஐயுறுதலுக்குரியதல்லாத உருவத்தோடும் அஞ்சாது நின்று எங்கும் எந்தச் சூழ்நிலையிலும் உண்மையை வெளியிடாத திறனும் வாய்ந்தவனே சிறந்த ஒற்றன்.

ஒற்றப்பட்டார் கண்டு கொண்ட பொழுது, அகப்பட்டுக் கொண்டேனே என்ற அச்சத்தின் மெய்ப்பாடுகள் வெளிப்படாதிருத்தலை உணர்த்தியது.

''யாண்டும்'' என்றது உண்மையை வாங்குதல் பொருட்டு துன்புறுத்திய நிலையிலும் என்பதை உணர்த்தியது. 585.

586. துறந்தார் படிவத்தர் ஆகி இறந்து ஆராய்ந்து
என்செயினும் சோர்விலது ஒற்று.

துறவிகள் வேடம் கொண்டு, மற்றவர் நெறியிகந்து துன்பம் விளைவிப்பினும் சோர்விலாது ஒற்றறியும் கடமை வழி நிற்பது ஒற்று.

பலரும் நம்புதலுக்குரியது என்பதனாலும், எளிதில் தீங்கு செய்யமாட்டார் என்பதனாலும் ''துறந்தார் படிவத்தர் ஆகி'' என்றார்.

நெறிமுறை பிறழ்ந்த நிலையில் தண்டம் தருவோரை ''இறந்தார்'' என்றார். 586.

587. மறைந்தவை கேட்கவற்று ஆகி அறிந்தவை
ஐயப்பாடு இல்லதே ஒற்று.

மறைவாகச் செய்த செயல்களை, அவர் தாமே சொல்லும் வகையில் அறிந்து ஐயப்பாடில்லாது தெளிந்து துணியவல்லதே ஒற்று.

''ஐயப்பாடில்லாது'' என்பதை ஒற்றப்பட்டார் - ஒற்றறிவார் இருபாலும் கூட்டலாம்.

ஒற்றப்பட்டார் ஐயுறாதவண்ணம் நின்று அவர் தானே அவர் தம்

மறைவான செயல்களைக் கூறுமாறு செய்து அறிதல்.

ஒற்றர் தாம் தெளியாது ஐயத்துடன் அரசனுக்குக் கூறுவதில் பயனில்லை என்பதனை அறிக. 587.

588. ஒற்றுஒற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்.

ஓர் ஒற்றன் ஒற்றின் மூலம் அறிந்து தந்த செய்தியினை மற்றுமோர் ஒற்றினால் ஒற்றறியச் செய்து அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

ஒற்றர் பழக்க வாசனையினாலும், தன்னயப்பினாலும் ஒற்றப்பட்டாரோடு உடன்பட்டு நின்று மாறுகொளக் கூறுதலும் உண்டு. இங்ஙனம் கூறுவது உண்மையாக இருத்தல் அரிது. 588.

589. ஒற்றுஒற்று உணராமை ஆள்க உடன்மூவர்
சொல்தொக்க தேறப் படும்.

ஒற்றரை ஆளும் பொழுது ஓர் ஒற்றரைப் பிறிதோர் ஒற்றர் அறியாமல் ஆள்க. ஒற்றர் மூவர் வாயிலாகத் தனித்தனியே அறிந்த செய்தியைத் தெளிந்து உண்மையறியப் பெறும்.

ஒற்றரே ஆயினும் ஒருவருக்கு ஒருவர் அறிய நேரின் சோம்பல் காரணமாக ஒருவர் அறிந்தவற்றையே ஒற்றறிந்த செய்தியாகத் தந்து விடுவர். ஆதலால் ஒற்றர்கள் ஒருவருக்கு ஒருவர் அறிமுகம் ஆகாது என்றார்.

ஒருவர் கூறுவது வைத்துத் துணிதல் கூடாது.ஏனெனில் திறமையின்மை, சோம்பல், விருப்பு,வெறுப்புகளால் ஒரு மனிதர் தவறானவையும் கூறக்கூடும் என்பதால் மூவர் கொண்டு அறிக என்றார். 589.

590. சிறப்புஅறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்
புறப்படுத்தான் ஆகும் மறை.

ஒற்றரின் சிறப்பான பணிக்குரிய சிறப்பைப் பிறர் அறியச் செய்யற்க. அங்ஙனம் செய்யின் அகத்துள்ளதை மறைத்து வைக்கும் திறனற்றுப் புறத்தே வெளியிட்டதாகி விடும்.

ஆளுநர் தம் ஒற்றுத் தொடர்புடைய உணர்வுகளைப் பலரறிய புலப்படுத்தக் கூடாது. இதனால் ஒற்றரும் கெடுவர். 590.

## 60.ஊக்கமுடைமை

உள்ளத்தின் எழுச்சியே ஊக்கமுடைமை. அதாவது வாழ்தல் விருப்பத்தின் வழிப்பட்ட ஆள்வினையுடன் -உள்ளக் கிளர்ச்சியுடன் எழுச்சியுடன் ஈடுபடுதல் ஊக்கமுடைமை.

591. உடையர் எனப்படுவது ஊக்கம் அஃதுஇல்லார்
உடையது உடையரோ மற்று.

ஊக்கம் உடையார் எல்லாவற்றையும் உடைமையாகப் பெற்றுள்ளார் என்று சொல்லப் பெறுவார். ஊக்கம் இல்லாதவர் வேறு எதனை உடைமையாகப் பெற்றிருந்தாலும் உடைமை பெற்றவராகக் கருதப் பெறமாட்டார்.

உள்ள எழுச்சியாகிய ஊக்கம் பெற்றிருந்தால் அஃது எல்லா உடைமைகளையும் பெற்றது போல என்று கூறினார். காரணம் ஊக்கமுடையார் எதனையும் அடைய முடியும் என்ற நம்பிக்கை.

ஊக்கமில்லாதார் உடைமைகளைப் பெற்றிருந்தாலும் பெற்றிருப்பதாகக் கருதப்பட மாட்டார். ஏன்? அப்பொருளைப் பேணிக் காக்கும் திறன் அவருக்கு இருக்காது என்பது அனுபவ உண்மை. உழைப்பால் வந்த பொருளே பொருள். 591.

592. உள்ளம் உடைமை உடைமை பொருள்உடைமை
நில்லாது நீங்கி விடும்.

ஊக்கம் உடைமையே உடைமை. பொருளுடைமை நில்லாது நீங்கிவிடும்.

ஊக்கம் உடையோர் பொருளாட்சி பெறுதல் உறுதி என்பதால் ''ஊக்கம் உடைமை உடைமை''என்றார்.

ஊக்கமில்லாதார் பொருளுடைமையைக் குறுக்கு வழிகளாலும் சமுதாய விபத்துக்களாலும் அடைந்து விடுதல் உண்டு. ஆயினும் அவர்களுக்கு அந்தப் பொருளைக் காப்பாற்றிக் கொள்ளும் திறன் இருக்காது. 592.

593. ஆக்கம் இழந்தேம்என்று அல்லாவார் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார்.

ஊக்கத்தை உயர்நிலை உடைமையாகப் பெற்றவர்கள் இழந்த செல்வத்திற்காக அழுமாட்டார்கள்.

அவர்கள் பெற்றிருந்த செல்வந்தான் போயிற்றே தவிர , அவர்களுடைய செல்வத்திற்குக் காரணமாக இருந்த ஊக்கத்தை ஒருபோதும் இழக்க மாட்டார்கள்.

அதனால் திரும்பவும் செல்வத்தைப் பெறுவர் என்பது உறுதி. 593.

594. ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை.

அசைவிலாத ஊக்கத்தைப் பெற்றவனின் முகவரியைக் கேட்டுக் கொண்டு செல்வம் அவனிடம் போய்ச் சேரும்.

''அசைவிலா ஊக்கம்'' என்பது, முயற்சியின்கண் வரும் தடைகளை இடையூறுகளைப் பொருட்படுத்தாது தொடர்ந்து முயற்சியில் ஈடுபடும் உளப்பாங்கு. 594.

595. வெள்ளத்து அனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத்து அனையது உயர்வு.

குளத்தில் நிறைந்துள்ள தண்ணீரின் அளவினதாக இருக்கும் தாமரையின் (நீர்ப் பூவின்) நீளம். அதுபோலச் சமுதாயத்தின் உள்ளப் பாங்கின் அளவுக்கு மானிடரின் உயர்வு இருக்கும்.

எந்த ஒருபொருளும் தன் நிலையில் உயர்வதில்லை; வாழ்வதில்லை. குளத்தின்கண் வளரும் தாமரை வளர்ச்சிக்குத் தண்ணீர் துணை செய்யும், தண்ணீர் அளவு உயரவில்லையானால் வளராது. வளர முடியாது. இது தாமரையின் குற்றமன்று. அதுபோல மக்கட் சமுதாயத்தின் உளப்பாங்கு ஊக்கத்தின் பாற்பட்டதாக நிற்பின் ஆங்கு வாழும் தனி மனிதனும் ஊக்கத்துடன் உழைப்பான்.

அங்ஙனமின்றி மக்கட் சமுதாயம் சுரண்டலுக்கும், ஆரவாரத்திற்கும், பொய்ம்மைக்கும் மதிப்புக் கொடுத்து ஊக்கத்தைப் புறக்கணிக்குமாயின் மனிதனிடத்தில் ஊக்கம் வளராது. இது அவன் குறையல்ல; மக்கட் சமுதாயத்தின் குறையேயாகும். 595.

596. உள்ளுவது எல்லாம் உயர்வுஉள்ளல் மற்றுஅது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து.

நினைப்பது எல்லாம் உயர்வுகளையே நினைத்திடுக. இங்ஙனம் நினைக்கப்பெறும் உயர்வு வாராதொழியினும் வந்தது போலக் கருதப்பெறும்.

எப்போதும் வளர்ச்சியைக் குறிக்கோளாகக் கொண்டவர்கள் எளிதான ஒன்றை இலக்காக எண்ண மாட்டார்கள். மிக உயர்ந்த ஒன்றையே இலக்காக எண்ணுவர். இங்ஙனம் எண்ணப்பெறும் உயர் குறிக்கோள் கை கூடாது போனாலும் கைகூடியது போலவே கருதப் பெறும்.

ஊக்கமுடையோர் ஒன்றினைக் குறிக்கோளாக ஏற்பின்

597. சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பின்
பட்டுப் பாடு ஊன்றுங் களிறு.

களிறு இரும்புத்தளையால் கட்டப்பெற்றாலும் தன் முயற்சியில் குன்றாது. அதுபோலவே ஊக்கம் உடையோர் தம் பெருமைக்குச் சிதைவு ஏற்பட்டாலும் தளராது முயன்று தன் பெருமையை நிலைநாட்டுவர்.

ஊக்கமுடையோரின் முயற்சியை இடர்ப்பாடுகள் நிறுத்தா; பின் வாங்கச் செய்யா என்பது கருத்து. 597.

598. உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னும் செருக்கு.

ஊக்கமில்லாதவர்கள், உலகத்தில் எப்பொழுதும் வண்மையுடையேம் என்ற பொருமையை அடைய இயலாது.

மற்றவர்களுக்கு வழங்கும் வள்ளன்மை , தடையின்றித் தொடர்ந்து நீடிக்க வேண்டுமாயின் பொருளீட்டத்திற்குரிய ஊக்கம் இன்றியமையாதது என்று உணர்த்தியது.

599. பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

யானை பெரிய உடலை உடையது; கூரிய கொம்புகளை உடையது. ஆயினும் ஊக்கமில்லாமையின் காரணமாகச் சிறிய புலிக்கும் அஞ்சி நிற்கும்.

கருவிகளால் அமைவதன்று ஆளுமை. ஊக்கத்தினாலேயே அமையும் என்பது கருத்து. 599.

600. உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கைஅஃ து இல்லார்
மரம்மக்கள் ஆதலே வேறு.

ஒருவருடைய உண்மையான செல்வம் ஊக்கமே. ஊக்கமில்லாதார் மக்களேயல்லர்; மரங்களை அனையர்.

ஊக்கமில்லாதாரை மரம் என்று இழித்தல் அறிவியலுக்கு உடன்பாடுடையதல்ல.

மரம் சூழ்நிலைகளுக்குத் தாக்குப்பிடித்து நின்று வளர்ந்து பயன் தருவது அறிக. 600.

## 61. மடியின்மை

மடியின்மை - சோம்பலின்மை. ஊக்கமுடையோர் ஒரோவழி தாம் கருதியன முடியாமையினாலோ, காலந்தாழ்த்தலினாலோ உள்ளம் சோர்வார். அவ்வழி சோம்பல் தோன்றும். இவ்வழி சோம்பலுடையார் எண்ணிக்கை மிகுதி. பிறிதொருவகையினர் ஊழ், நாள், கோள், நம்பிக்கை வழி சோம்பலுடையராவர், இவ்வகையினர் இன்றைய சமுதாயத்தில் பெரும் பகுதியினர். இவ்விரண்டிலும் சேராது இயற்கையாகவே ஊக்கம் எள்ளளவுமின்றிச் சோம்பித் திரிவோர் உண்டு. இவர்கள் மக்கட் சமுதாயத்திற்குச் சுமை போல்வர்.

மடி - மடமையின் அடிப்படையில் பிறந்த சொல்லாக இருக்கலாமா? ஆய்வு செய்தல் நன்று. அதாவது உயிர் வாழ்க்கை உயிர்ப்புள்ளது, இயக்க வழிப்பட்டது, குறிக்கோளுடையது என்று அறிய வேண்டும். உயிர்ப்புடன் இயங்கி இயக்கி வாழ்தலே வாழ்க்கையென்று அறிந்து வாழாமல் சோம்பித்திரிதல் அறியாமை அல்லவா?

601. குடிஎன்னும் குன்றா விளக்கம் மடிஎன்னும்
மாசூர மாய்ந்து கெடும்.

தான் பிறந்த குடியாகிய நந்தா விளக்கு ஒருவனுடைய சோம்பலாகிய இருள் வந்து மூடக் கெட்டுப் போகும்.

குடியைக் குன்றா விளக்கென்றது வழித்தோன்றல்கள் வழி, குடிவளர்ந்து விளக்கமாக நிலை பெறுதலின்.

சோம்பலை மாசு என்றது, மாசு பல தீமைகளுக்குப் பிறப்பிடமாதல் போல் சோம்பலும் பல தீமைகளுக்குப் பிறப்பிடமாதலின்.

''குன்றா விளக்கம்'' என்ற வாய்ப்பாட்டிற்கு நந்தா விளக்கு என்ற பொருளை விடக் குறையாத விளக்கம் என்று பொருள் கொள்ளுதல் நல்லது.
601.

602. மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

தாம் பிறந்த குடியை மேலும் உயர் குடியாக உயர்த்த வேண்டுவோர் சோம்பலைச் சோம்பலாகவே கருதி முயற்சியோடு வாழ்தல் வேண்டும்.

தாம் பிறந்த குடியை உயர்த்துதல் ஒருவனின் கடமை என்பதைக் குடிசெயல்வகை என்ற அதிகாரத்திலும் கூறுகிறார்.

சோம்பலின்றி முயற்சியுடன் வாழ்பவரின் குடியே உயரும் என்பது கருத்து. 603.

603. மடிமடியாக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினும் முந்து.

சோம்பலை உடனுறையும் ஒழுகலாறாகக் கொண்டொழுகும் அறிவில்லாதவனின் பிறந்த குடி அவனுக்கு முன்பே அழியும்.

சோம்பலுடையான் பிறந்த குடி அழிவது உறுதி.அதனினும் உறுதி அவன் பிறந்த குடியின் அழிவு அவனுடைய அழிவுக்கு முன்பாகவே நிகழ்வது.

சோம்பலுடையான் பிறந்த குடி அழிதலுக்குக் காரணம் இரக்கம் காரணமாகச் சோம்பலுடையானையும் தாங்கி வாழ்ந்ததினாலேயாம்.

அவனினும் அவன்குடி முந்துற அழியும் என்று கூறியது அவனைத் தாங்கிக் காப்பாற்றிய குடி அழியும் என்றதால் குடி அழிந்தபிறகு இவனைப் போல யாரும் இருக்கமாட்டார். ஆதலால் சோம்பலைத் தவிர்த்திடுக என்பதாகும். 603.

604. குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்று லவர்க்கு.

சோம்பலின்கண் வீழ்ந்து திருந்திய முயற்சி இல்லாது போனவரின் குடி அழிந்து குற்றங்களும் பெருகும். குடி அழிவதன் மூலம் குற்றம் பெருகும் என்றது அறிவுறுத்துவோர் இலராகப் போதலின் என்றறிக. 604.

605. நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்.

விரைந்து செய்தலையொழித்துக் காலம் நீட்டித்துச் செய்தல். மறதி, சோம்பல், மிகுதியான தூக்கம் ஆகியவை கெட்டுப்போக விரும்புபவர்கள் விரும்பி ஏற்கும் அணிகளாகும்.

உரிய காலத்தில் செய்யாது காலந்தாழ்த்திச் செய்தல் காரியக் கேட்டினைத் தரும். காலம் நீட்டித்துச் செய்தல் செய்யாமை போன்றதே.

மறதி- உறவு, பொருள் முதலிய இழப்பைத் தரும்; நெடுந்துயில் - உடலுக்குச் சோம்பலைத் தரும்; நோயைத் தரும். 605.

606. படியுடையார் பற்றுஅமைந்தக் கண்ணும் மடியுடையார்
மாண்பயன் எய்தல் அரிது.

நிலம் முழுதும் ஆண்டாரது செல்வம் வந்து எய்திய இடத்தும், அச்செல்வத்தின் பயனைச் சோம்பலுடையார் அடைதல் அரிது.

''படியுடையார் பற்றமைந்தக் கண்ணும்'' என்பதில் உள்ள உம்மை, ''எய்தாமை'' விளக்கிற்று என்பர். இது பொருந்தாது. பரம்பரைச் சொத்துரிமை முறையில் மன்னர் மகன் மன்னராகின்றானே. ஜனநாயக நடைமுறையில் கூட இது சாத்தியமாகிறதைக் காண்கிறோம்.

''பற்றமைந்தக் கண்ணும்'' என்பதற்குத் தேடி அடையாத செல்வத்தை அடைந்தபோதும் காக்கும் முயற்சி தோன்றவில்லை என்ற கருத்தில் கூறினார்.

செல்வத்தை அடைதல், அடைந்த செல்வத்தைப் பாதுகாத்தல், அடைந்த செல்வத்தை முறையாகத் துய்த்தல், அடைந்த செல்வத்தை முறையாகச் செலவிடுதல் ஆகிய அனைத்துக்கும் முயற்சி தேவை என்பதனை அறிக. 606.

607. இடிபுரிந்து எள்ளும்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர்.

சுற்றத்தார், நட்புடையோர் ஏளனம் செய்து சொல்லும் சொல் கேட்டும் வாளா இருப்பர் செயலில்லாது சோம்பிக் கிடப்பவர்கள்.

இயல்பாக முயற்சி இல்லாதவர்கள் மற்றவர்கள் இகழ்ந்து கூறும் சொல்லினைக் கேட்டுத் தாளாது சோம்பலைத் தவிர்த்து முயற்சியில் தலைப்படுவர். இகழ்ச்சி சொல்லக் கேட்டும் முயற்சியில் தலைப்படாதாரும் உண்டு. இவர்கள் மானுடப் பிறப்பினைச் சார்ந்த இழிபிறப்புயிர்களாக எண்ணப்படுதல் வேண்டும். 607.

608. மடிமை குடிமைக்கண் தங்கிற்றன் னொன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும்.

சோம்பல், சிறந்த குடியில் தோன்றிய ஒருவனிடத்துத் தங்கின் அவனையும் அவன் குடியையும் அவனுடைய பகைவருக்கு அடிமைப்படுத்தி விடும்.

சோம்பல் காரியக் கேடு. காரியக்கேடுகள் நிகழின் ஆற்றலழிந்து அடிமைப்படுதல் நிகழும். 608.

609. குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

தாம் பிறந்த குடியை வைத்தாளும் தன்மையில் வந்த குற்றம், ஒருவன் தனது சோம்பலை ஆற்றலாக மாற்றக் கெடும்.

'குடியாண்மை' என்ற சொல்லைக் குடிஆண்மை என்று பிரித்துப் பொருள் கூறுவாரும் உண்டு. இது தவறில்லை. ஆனாலும் தேவையற்றது.

குடியாண்மையாவது தாம் பிறந்த குடியின்மீது மேலாண்மை செய்யக் கூடிய நிலை. 609.

610. மடிஇலா மன்னவன் எய்தும் அடிஅளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு.

சோம்பலில்லாத மன்னவன் எய்துவன், திருமால் தம் அடியினால் அளந்த எல்லா நிலத்தையும் ஒருங்கே.

சோம்பல் இல்லாதார் உலகத்தையே பெறுவர் என்று கொள்க. 610.

## 62. ஆள்வினையுடைமை

செயல்களை ஆளுமையுடன் செய்யும் திறன் பெற்றிருத்தல். செயல்களின் மயமானது இந்த உலகம். தாமாகவே கூடச் செயல்கள் நிகழும். மலைகளின் வளர்ச்சி -மலைக்காடுகளின் வளர்ச்சி போன்ற நல்ல செயல்களும், மண்ணரிப்பு முதலிய தீமைகளும் செய்வாரின்றியே நிகழும் செயல்கள். ஆயினும், இவை அழகாக பயனுடையனவாக இருப்பதில்லை. அதுபோல் காலமோ தேவைகளோ உந்தும் பொழுது அறிவுணர்வும் ஆளுமையும் இன்றிச் செய்யும் செயல்கள் செயல்கள்போலத் தோன்றும். முழுப்பயன் தரா. ஆதலால் செயல்களைக் குறித்த காலத்தில் குறித்த முறையில் குறித்த பயன்கொள்ளத் தக்க வகையில் செய்வதற்குரிய ஆன்மவலிமை பெற்று வாழ்தல் ஆள்வினையுடையராதலாகும்.

611. அருமை உடைத்துஎன்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

செய்ய வேண்டிய பணி அருமையான. நம்மால் செய்ய இயலாது என்று தள்ளற்க. அந்தப் பணியைச் செய்ய மேற்கொள்ளும் முயற்சி பெருமையைத் தரும்.

மனித ஆற்றல் வளர்ச்சிக் குரியது. ஆதலால் பணி செய்ய விருப்பமுடைய மனிதனுக்கு அருமையான பணி என்று ஒன்று இல்லை.

செய்யத் தொடங்கிப் பயன்தரத் தக்க வகையில் முடிந்தாலும் முடியாது போனாலும் முயற்சி பெருமை தரும். அற்பக் காரியங்களில் பெறும் வெற்றியை விடப் பெரிய பணிகளில் பெறும் தோல்வி பாராட்டுதலுக்குரியது. 611.

612. வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு.

தொடங்கிய ஒரு பணியைத் தொடர்ந்து செய்து முடிக்காமல் இடையில் விடுதல் பயனைத் தராது. செய்த பணிகளைக் குறையாக விட்டவரை உலகம் விட்டுவிடும்.

தொடங்கிய ஒரு பணியைத் தொடர்ந்து செய்து முடிக்காமல் இடையில் விட்டு விடுவதால் பணியும் முடியாது. பயனும் இல்லை. செய்த பணியளவும் வீணாகிப் பயனற்று இழப்பினையும் அவமானத்தையும் தரும்.

இன்றைய உலகில் வினைக்கண் வினை கெடுத்து நிற்போர் மிகுதி என்பதை உணர்க. 612.

613. தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு.

எல்லாருக்கும் உதவி செய்தல் என்னும் உயரிய குணம் தளராத தொழில் முயற்சியுடைமையின் கண்ணேயே தங்கும்.

திருக்குறள் தோன்றிய காலத்தில் தொழில் வேளாண்மை. வேளாண்மை செய்து வாழ்க்கை நடத்தியோரிடம் இருந்த பண்பு தொழில் மீதும் ஏற்றிக் கூறப்பட்டது.

பிறர்க்கு உதவி செய்யும் பெற்றியராக வாழ ஆசைப்படுவோர் தளராத உழைப்புடையோராக வாழ்தல் வேண்டும். 613.

614. தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாள்ஆண்மை போலக் கெடும்.

ஆளுமையும் வீரமுமில்லாத பேடி கையில் உள்ள வாளினால் என்ன பயன்? அதுபோல உழைத்துப் பொருளீட்டாதானிடம் உள்ள உதவி செய்யும் குணத்தினால் யாது பயன்? ஒரு பயனுமில்லை.

பேடி கை வாள் பயன்படாமையின் காரணமாகத் துருப்பிடித்து அழியும். அதுபோல, உழைப்பில்லாதவனின் உதவி செய்யும் குணம் பொருளின்மையாலும் வறுமையாலும் அழியும்.

வாள் பயன்படுத்தப் பயன்படுத்தக் கூர்மையாகி வெட்டுந்திறன் கூடுதலாகப் பெறும். அதுபோலத் தளராத உழைப்பில் வளரும் செல்வம் உதவி செய்யும் பண்பை மேலும் மேலும் ஊக்கி வளர்க்கும். 614.

615. இன்பம் விழையான் வினை விழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்.

இன்பத்தை விரும்பாது தொழிலையே விரும்பி எவன் உழைக்கின்றானோ அவன் தன்னுடைய சுற்றத்தினருடைய துன்பங்களைத் துடைத்து நீக்கித் தாங்கி நிற்கும் தூணாவான்.

இன்பவிழைவு தொழில் முயற்சிக்குக் கேடு தரும். நமது நாட்டில் விடுப்பு என்ற பெரிய நோய் வளர்ந்ததற்குக் காரணம் இன்பமும் வேண்டி நிற்பதே

துண் தன்மீது ஏற்றப்பட்ட பாரத்தைத் தாங்கி நிற்பது. அதுபோலத் தம்மைச் சார்ந்தோர் துன்பத்தை நீக்கி அவர்களைத் தாங்கி நிற்றல் சிறந்த முறையில் தொழில் புரிவோரின் இயல்பு. 615.

616. முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

முயற்சி செல்வத்தினை ஆக்கும். முயற்சி இன்மை இல்லாமையில் புகுத்திவிடும். 'இன்மை'- வறுமை என்று கூறப்படும். வறுமைக்கு முதற்காரணம் அறிவின்மையும் உழைப்பின்மையுமேயாம். இவற்றையும் வறுமையெனக் கருதுதல் வேண்டும். முயற்சியின் படைப்பே செல்வம். மற்றைச் செல்வங்கள் செல்வங்களாகா.(அதாவது, முயற்சியின்றிச் சுரண்டல் முறையில் குவியும் செல்வம்) முயற்சி என்பது பொருள் நிறைந்த சொல். மிகச் சாதாரணமாகக் கைக்குக் கிடைத்த வேலையைச் செய்வதும் ஏவியதை மட்டும் செய்வதும் வேலையல்ல; முயற்சியும் அல்ல.

இடர்ப்பாடுகளைக் கண்டவுடன் சோர்தலும், தம் இயல்புக்கு அப்பாற்பட்டது என்று செய்யாது விடுதலும் முயற்சியின் பாற்பட்டதாகா. தடைகளைக் கடந்தும் பெரும் பணிகளைப் பொறுப்புடனும் செய்வதே முயற்சியாகும். 616.

617. மடிஉளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாள்உளாள் தாமரை யினாள்.

சோம்பலுடையானை மூதேவி என்பர். சோம்பல் இல்லாதவன் முயற்சியினிடத்தில் திருமகள் இருப்பாள்.

மாமுகடி-மூதேவி. தாமரையினாள்-திருமகள்.

சேற்றில் தோன்றி மலர்தலுக்கு வாய்ப்பில்லாத நீர்ப்பரப்பைக் கடந்து தலையை வெளியே நீட்டி கதிரவன் துணையையும் பெற்று மலர்தல் தாமரை. தாமரை மலர் அயர்விலா முயற்சியின் ஒரு சின்னம். அதனால் திருமகள் அதில் தங்கியிருக்கிறாள். சூழ்நிலையைக் கடந்து பெறவேண்டிய ஒத்துழைப்புக்களைப் பெற்று வளர்ந்தால் பெருஞ்செல்வம் பெறலாம் என்பதே கருத்து. 617

618. பொறிஇன்மை யார்க்கும் பழியன்று அறிவுஅறிந்த
ஆள்வினை இன்மை பழி.

ஒருவனின் நல்வாழ்க்கைக்குக் களம், கருவிகள் வாய்க்காமை பழியன்று. அறிவறிந்த உழைப்பின்மையே பழி.

'அறிவறிந்த ஆள்வினை இன்மை' என்றது அறிவியலோடு சேராத உழைப்பு உரிய பயனைத் தராது என்பதனால்.

ஏழையாகப் பிறந்தது இழிவன்று. அறிவறிந்த ஆள்வினைகள் பல இயற்றி வளமுடையராக வளராமையே பழி. 618.

619.தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

ஒருவருக்கு நல்வாழ்க்கை என்பது விதி வகையால் அமையாது போனாலும் உடல் வருந்த முயற்சி செய்தால் அந்த அளவுக்குக் கூலி கிடைக்கும்.

இங்குத் தெய்வம் என்றது கடவுளையோ அல்லது மற்ற தெய்வங்களையோ அல்ல. ஆசிரியர் காலத்தில் ஊழினைத் தெய்வம் என்று கூறும் மரபு இருந்தது.

'தெய்வத்தான் ஆகாதெனினும்'- நேற்றைய வாழ்க்கையால் ஆகாது போனாலும்.

நேற்றைய சோம்பல் நிறைந்த வாழ்க்கையை இன்று முயன்று மாற்றியமைத்துக் கொண்டு முயற்சி செய்தால் அந்த அளவுக்குப் பயன் கிடைக்கும். பழக்கங்களை மாற்றுவது கடுமையாதலின் ''மெய்வருத்த'' என்றார்.

''கூலி'' என்பது கொச்சைப் பொருள் தரும் சொல் அல்ல. நல்ல தமிழ்ச் சொல். பயன் என்றே பொருள் கொள்ள வேண்டும். 619.

620. ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவுஇன்றித்
தாழாது உஞற்று பவர்.

இடர்களைக் கண்டு சளைத்து இளைத்துப் போகாமல் தொடர்ந்து தாழ்விலா முயற்சியை மேற்கொள்வோர் ஊழின் தாக்குதலையும் புறம் கண்டு பயன் காப்பர்.

முயற்சியின் அமைவு இன்னதென உணர்த்துவதற்காக 'உலைவின்றி' 'தாழாது' என்ற சொற்களை அணைத்துக் கூறினார்.

'உலைவின்றி'-மனத்தில் சலனம், ஊசலாட்டம் இன்றி.
'தாழாது' - நாளும் நாளும் தொடர்ந்து வளர்ச்சியை நோக்கி.620.

## 63. இடுக்கண் அழியாமை.

அடிபடும் பொழுதெல்லாம் பந்து மேலெழும்; பாம்பு சீறும். நிலம் உழும் பொழுதெல்லாம் செழுமையுறும். அதுபோலத் துன்பம் வந்துற்ற பொழுதெல்லாம் அழுது அழிந்து போகாமல் மேலும் மேலும் முயற்சியில் ஈடுபடுதல் வாழ்வியல் சார்ந்த உண்மை.

போதிய அறிவின்மையாலும் பொருந்திய சூழலின்மையாலும் முன் பட்டறிவு இன்மையாலும் இடுக்கண் வருவது இயற்கை; தவிர்க்க இயலாதது. இடுக்கண்ணைக் (துன்பத்தை) கண்டு நடுங்கி, அவலத்தை வளர்த்து அழுது அழியாமல் தொடர்ந்து அறிவறிந்த ஆள்வினையில் ஈடுபட்டு வெற்றி காண்பதை வாழ்க்கையின் நோக்கமாகக் கொள்ளும்படி அறிவுறுத்துவது இந்த அதிகாரம்..

621. இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல்.

இடுக்கண் - துன்பம் வரும்பொழுது எள்ளி நகைத்திடுக. அந்த நகுதலைத் தொடர்ந்து வரும் சாதனை ஒப்பற்றதாக அமையும்.

நகுதல் - பரிகாசச் சிரிப்பு. அதாவது துன்பத்திற்குக் காரணமாய் அமைந்த தனது குற்றங்குறைகளையே நோக்கிப் பரிகாசமாகச் சிரித்தல். அங்ஙனம் சிரிக்கும் பொழுது தன்னைச் சார்ந்த குற்றங்குறை நீங்குவதால் சாதனைகள் பிறக்கும் . வாழ்க்கையில் வெற்றிகளை விடப் போராட்டங்களைக் கண்டு மகிழ்வதே சிறப்பு. 621.

622. வெள்ளத்து அனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்.

அறிவுடையவன் தன்னை நோக்கி வரும் வெள்ளம் போன்ற துன்பங்களை உள்ளத்தால் நினைத்தல் வழிக் கெட்டு விடும்.

ஊழியினால் வரும் இடுக்கண். ஆள்வினையால் அழியும் நிலையை எடுத்துக் கூறியது.

நினைத்தலால் துன்பம் கெடும் என்றது, உயர்வுடைய நினைப்பு, ஆள்வினையாக உருப்பெறும் என்ற நம்பிக்கையில் கூறியது. 622.

623. இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர்.

கடமைகளை இயற்றும் பொழுது வரும் துன்பத்திற்கு வருந்தாதவர்கள் துன்பத்திற்குத் துன்பம் கொடுப்பர்.

துன்பத்தைப் போக்கும் உழைப்பே இன்பத்திற்கு வழி; வேறு குறுக்கு வழிகள் இல்லை. 623.

624. மடுத்தவாய் எல்லாம் பகடுஅன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து.

கடமை வாய்த்த வழியெல்லாம் பகடு போலக் கடமையைச் செய்பவனின் துன்பம், தாமே துன்பத்தைப் பெறும்.

தூக்குதற்கரிய பாரஞ்சுமந்து இழுக்கும் எருது, பக்கவாட்டில் சாய்ந்து நிலத்தை நோக்கி முகத்தைத் தாழ்த்தி முகர்ந்தும் முழங்காலினை மடித்தும் இழுக்கும் காட்சியைச் சற்றே காண்க. அதுபோலத் துன்பத்தைக் கண்டு துன்புறாமல் உழைப்பை மேற்கொள்ளுதல் வேண்டும். 624.

625. அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கட் படும்.

துன்பங்கள் ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கி வரினும், அத்துன்பங்களுக்கு அழியாது உள்ளக்கோட்பாட்டை விடாதானுக்கு வந்துற்ற துன்பங்கள் துன்பப்பட்டுப் போகும்.

''அடுக்கி வரினும்'' துன்பங்களினுடைய மிகுதி பற்றிக் கூறியது.

626. அற்றேம்என்று அல்லற் படுபவோ பெற்றேம்என்று
ஓம்புதல் தேற்றா தவர்.

பொருளைப் பெற்றபோது அதனைப் பாதுகாக்க மாட்டாதவர்கள் பொருள் அற்று வறுமை வந்தபொழுது நோவதென். 626.

627. இலக்கம் உடம்புஇடும்பைக்கு என்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம் மேல்.

உடல் வாழ்க்கைக்குத் துன்பம் இயற்கையென்று நினைந்து துன்பத்தைத் துன்பமாக ஏற்றுக் கொள்ளாதவர்கள் மேலானவர்கள். அவர்களுக்குத் துன்பம் வாராது.

துன்புறாமல் துன்புறுவன எல்லாம் வளரும்; வாழும். 627.

628. இன்பம் விழையான் இடும்பை இயல்புஎன்பான்
துன்பம் உறுதல் இலன்.

துன்பங்களை விரும்பாமல் துன்பங்களை இயல்பாக ஏற்றுக் கொள்பவன் துன்புற மாட்டான்.

இன்பம், துன்பம் அனுபவிப்பவனுடைய அணுகுமுறையிலேயே இருக்கிறது. 628.

629. இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்.

இன்பம் வந்துற்றபொழுது விரும்பி அனுபவிக்காதவன் துன்பம் வந்த பொழுது துன்புறுதல் இலன்.

இன்பத்தை விரும்பி அனுபவிப்பவர் துன்பம் வந்துற்ற பொழுது அல்லற்படுவர் என்றது. 629.

630. இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்
ஒன்னார் விழையும் சிறப்பு.

ஒருவன் கடமையைச் செய்யும் பொழுது வரும் துன்பங்களை இன்பம் எனக் கொண்டொழுகின் அவன் பகைவரும் அவனை மதித்துச் சிறப்புச் செய்வர்.

"இன்னாமை இன்பம் எனக்கொளின்" என்றதால் கொள்வோர் அருமை என்பது புலப்படுத்தியது. 630,

## 2. அங்கவியல்

### 64. அமைச்சு

அங்கம் - உறுப்பு. அதாவது ஆட்சியின் உறுப்புகளாக நின்று துணை செய்வன. இவற்றுள் முதல் உறுப்பு அமைச்சு. ஆம்! ஆட்சிக்கு அமைச்சர்களே பொறிகளும் புலன்களுமாக நின்று நடத்துபவர்கள். சிறந்த அமைச்சினைப் பெற்ற நாடுகள் வளரும்.

631. கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு.

ஆட்சியினுடைய பணிகளைச் செய்து முடிப்பதற்குரியனவாக வாய்த்திருக்கும் கருவிகள், பணி செய்தற்குரிய சூழல் அமைந்த காலம், மேற்கூறிய கருவிகாலம் முதலியன அறிந்து செய்யும் செயல், செய்யும் செயலின்

அருமை ஆகிய மாட்சிமை அமைந்தது அமைச்சு.

கருவி : அறிவுக் கருவிகளாகிய சான்றோர்; செயற்கருவிகளாகிய புறக்கருவிகள்.

காலம்: உரிய காலம்; காலத்தால் முந்திச் செய்யினும் சில பணிகள் கெடும். காலத்தால் பிந்திச் செய்தல் பயன் தராது என்பது உறுதி.

செய்கையும் செய்யும் அருவினையும, கருவி, காலத்தோடு தொடர்புடையனவே. 631.

632. வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ(டு)
ஐந்துடன் மாண்டது அமைச்சு.

வினை செய்வதில் வன்கண்மையும், குடிகளைக் காத்தலும் இவையிரண்டையும் முறையாகச் செய்தற்குரிய அறிவைப் பெறப்பல நூல்களைக் கற்றறிதலும் ஆள்வினையும் முற்குறளில் சொன்ன உறுப்புக்கள் ஐந்துடன் பெற்றது அமைச்சு.

''வன்கண்''- தனியே பிரிக்காமல் குடிமக்களைக் காத்தற் பணியில், சோர்விலாமலும் பிடிவாதமாக நிற்றலும் என்று பொருள் கொள்ளுதல் சிறப்பு.

''வன்கண்''- உள்ளூறுத்தல் உடைய வன்மையாளன் என்னும் பொருள் கொண்டு, ஒரோவழி வன்கண்மையுடைய குடிகள் இருப்பின் அவர்களையும் காத்தல் வேண்டுதல் என்று கொள்ளுவதிலும் தவறில்லை. 632.

633. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்லது அமைச்சு.

பகைவர்க்குத் துணையாயிருப்பாரைப் பிரித்தலும், தமக்குத் துணையாயிருப்பாரைத் தம்மை விட்டுப் பிரிந்து போகாமல் பேணிக்காத்தக் கொள்ளலும், தம்மிடமிருந்து பிரிந்து சென்றாரை மீண்டும் வேண்டிப் பொருத்திக் கொள்ளலும் செய்யவல்லவனே அமைச்சன்.

''பிரித்தலும் பேணிக் கொளலும்'' என்ற பகுதிக்குப் பகைவரிடமிருந்து பிரித்தெடுத்தோரை, திரும்பப் பகைவரிடம் போய் விடாதவாறு பேணிக்கொள்ள வேண்டும் என்று பொருள் கொள்ளுதல் நன்று. ''பிரிந்தார்ப் பொருந்துதல்'' - என்பதற்குப் பகைவரிடமிருந்தோரைத் தம்மிடம் கொண்டு வந்து சேர்த்துக் கொள்ளுதல் என்று கூறுவது சிறப்பு. 633.

634. தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு.

ஒரு காரியத்தைப் பல்வகையானும் ஆராய்ந்து அறிதலும், அறிந்து செயற்பாடுறுதலும் ஆராய்ந்து எடுத்த முடிவை ஒரே நிலையில் சொல்லுதலும் வல்லதே அமைச்சு.

அரசு செய்யும் ஒரு காரியம் என்பது நாட்டு மக்களின் வாழ்க்கைப் போக்கை நிர்ணயிப்பது. ஆதலால் அந்தக் காரியத்தைச் செய்யும் முன், அந்தக் காரியத்தைப் பல் வகையானும் - விளைவு- எதிர் விளைவுகளை ஆராய்ந்து அறிந்து கொள்வது அமைச்சின் பொறுப்பு. அங்ஙனம் ஆராய்ந்து தெளிந்த முடிவுகள் கூடச் செயற்பாடின்றேல் பயனில்லை.

அமைச்சர்கள் நினைத்தபடியெல்லாம் சொல்லாமல் ஒருதலையாக ஆராய்ந்து ஒருமுடிவாக எடுத்துச் சொல்ல வேண்டும். 634.

635. அறன்அறிந்து ஆன்றுஅமைந்த சொல்லான்எஞ் ஞான்றும்
திறன்அறிந்தான் தேர்ச்சித் துணை.

அறநெறிகளை அறிந்து அனுபவத்தால் முதிர்ச்சிச் சொற்களைக் கூறும் அமைச்சன் என்றும், திறமைகளைத் தேர்ந்து தெளிவார்க்குத் துணை.

ஒருவருடைய திறமைகளைத் தேர்தலில் அறநெறிச் சார்பும் அனுபவ முதிர்ச்சியும் துணை செய்யும்.

அறநெறிச் சார்பை வலியுறுத்தியதால், சாதி, இனச் சார்புகள் வழிநின்று தேர்தல் செய்தல் கூடாது என்றவாறாயிற்று. 635.

636. மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை.

இயற்கையாய் அமைந்த நுண்ணறிவுடன் பலநூல்கள் கற்ற அறிவும் கூடிய அமைச்சர் முன் எத்தகைய அதிநுட்பச் சூழ்ச்சிகளும் முன்னிற்கா.

இயற்கையான நுண்ணறிவு, நூலறிவுடன் சேரும் பொழுதுதான் அறிவு உறுதிப்படுகிறது; செழிப்பாகிறது.

நூலறிவுச் சார்பு இல்லாத மதிநுட்பம் பயனுடையதன்று. அதுபோலவே மதிநுட்பச் சார்பிலாத நூலறிவும் பயனுடையதன்று.

முன்னையதால் ஒரோவழி பயன் உண்டு. பின்னையதால் பயன் காண்பரிது. 636.

637. செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல்.

நூலறிவின் வழி, செயல் செய்யும் திறன் அறிந்திருந்தாலும் உலகத்தியற்கை அறிந்து செய்க.

''உலகத்து இயற்கை அறிந்து செயல்'' உலகத்தின் தட்ப வெப்பக் கோள்நிலைகள் அறிந்து செய்க என்று கொள்க.

உலக மாந்தர் வாழ்வியல் நிகழ்வின் அமைப்பு அறிந்து செய்க என்று கொள்ளவும் கூடும். ஆனால் உலக மாந்தரின் இயல்பறிந்து ஒத்து வராவிடில் செய்யாதொழிதல் கூடாது. உலகமாந்தரின் நடையறிந்து செய்யும் திறனில் மாற்றமும் வளர்ச்சியும் தேவை என்பதே கருத்து. 637.

**638. அறிகொன்று அறியான் எனினும் உறுதி**
**உழைஇருந்தான் கூறல் கடன்.**

அறியும் திறனறிந்தார் சொல்லிய அறிவைச் சொல்லப்படுபவன் அறியாது அழித்தானாயினும் அவனுக்குத் துணையாய் அமைந்த அமைச்சன் தொடர்ந்து உறுதிபயக்கும் அறிவுரைகளைக் கூறுதல் கடமை.

அமைச்சுத் தொழில், கடமையைச் சார்ந்த பணியாதலால் ஆள்பவர் ஏற்காது ஒழிதல் - ஏற்றும் ஒழுகாதிருத்தல் ஆகிய குற்றங்களைக் கண்டு வாளா ஒய்ந்து விடாது அறிவுரை கூறுதல் வேண்டும் என்றது.

இந்த நெறி நட்பியலுக்கும் மனையறவியலுக்கும் பொருந்தும்.
அறிஞர் சொல்லும் அறிவுரையை உடனடியாக ஏற்காது அல்லது ஏற்று ஒழுகாது போவதற்கு ஆள்பவரின் திறமை, அவர்தம் சூழல் முதலியன தடையாக அமைந்திருக்கலாம். இவை நிலையானதல்ல. மாறவும் கூடும். அப்போது சொல்லிய அறிவு செயற்பாட்டுக்கு வரும் அல்லவா? அதனால் தொடர்ந்து கூறுக என்றார்.

''கடன்'' ஆவன எல்லாம் பிறப்பின்வழி அமைந்தன என்று ஒருபோதும் மாறாது ஒழியாது செய்தற்குரியன. 638.

**639. பழுதுஎண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்**
**எழுபது கோடி உறும்.**

பக்கத்தில் இருந்து கெடுதல் எண்ணுகின்ற அமைச்சர் ஒருவர், எழுபது கோடிப் பேர் செய்யும் தீமையிலும் மிகுதியாகச் செய்வார்.
கெடுதல் எண்ணும் ஒரு மந்திரி எழுபது கோடி பகைவரை உண்டாக்குவார் என்றும் கொள்ளலாம். 639.

**640. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்**
**திறப்பாடு இலா தவர்.**

செய்யப்படும் வினைகளை முறையாக ஆராய்ந்தறிந்தும் செயல்திறன் இல்லாதவர்கள் அக்காரியங்களை முடிவிலா நிலையிலேயே செய்வர். அதாவது, காரியங்களைச் செய்வதில் தோல்விகளையே தழுவுவர்.

தொடங்கிய ஒன்றினை முடித்தலிலேயே ஆள்வினைத் திறன் இருக்கிறது.

முறைப்படச் சூழ்ந்தும் திறப்பாடில்லாதவர் முடிவிலவே செய்வர் என்றதால் ஆராய்ந்தறியும் அறிவுடைமையும் செய்யும் திறனும் ஒருங்கே அமைதல் வேண்டும் என்பதாயிற்று. 640.

## 65. சொல்வன்மை

சொல்லப்படுவது சொல். மனம், புத்தி, சித்தம் முதலிய அகநிலை உறுப்புக்கள் ஒன்றிணைந்த நிலையில், சிந்தித்து முடிவு செய்தவற்றை மற்றவர்கள் துணையுடன் செயற்படுத்தவும் மற்றவர்கள் பயனுறவும் அயலவர்களை ஆயத்தப்படுத்தவும் சொல்லப்படுவது சொல்.

''சொல்'' என்பதில் உள்ள ''வன்மை'' என்ற சொல் வன்முறையைக் குறிக்கும் வன்மையன்று. சொல்லின் உறுதி என்றே பொருள் கொள்ள வேண்டும். சொல்லில் வன்மையாவது; அடிக்கடி மாற்றிச் சொல்ல வேண்டிய அவசியமில்லாது ஒருதலையாக ஆராய்ந்து முடிவாகச் சொல்லுதல், மேலும் எளிதில் மற்றவர்களுடைய விவாதங்களால் பயனற்றுப் போகக்கூடிய அல்லது நிலைத்து நிற்க முடியாத சொற்களாக இல்லாமல் சொற்களைத் தேர்ந்து தெளிந்து சொல்ல வேண்டும். சொற்களின் பயனீட்டமாகிய செயல் தூண்டல், நேயமிக்க உறவு, முதலியன தவறாமல் சித்திக்கும் சொற்கள் பயனுடைய சொற்கள்.

நல்லனவும் கூட எடுத்துக்கூறும் திறமும் பாங்கும் இன்மையால் பயனற்றுப் போகின்றன. ஒரு பொருளும் படாத சொற்கள் சொல்லும் திறத்தால் பாங்கால் பயனைத் தந்து விடுகின்றன.

641. நாநலம் என்னும் நலன்உடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று.

ஒருவர் பெறக்கூடிய எல்லா நலன்களிலும் நாநலமே தலைசிறந்தது. நாநலம் மற்ற நலன்களிலும் அடங்கித் தோன்றுதலுடன் அந்நலன்களில் எல்லாம் சிறந்து விளங்குகின்றது.

ஆக்கவும் அழிக்கவும் வல்லது சொல். செயலூக்கம், நன்று தேடல், உறவினைப் பெறுதல் ஆகியனவெல்லாம் நாநலத்தின் பயன்களேயாம். 641.

642. ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்துஓம்பல் சொல்லின்கண் சோர்வு.

ஆக்கமும், அழிவும் சொற்களால் வருவன. ஆதலால் சொல்லின்கண் சோர்வு வராமல் பாதுகாத்துக் கொள்க.

சொற்களில் சோர்வுபடுதலாவது, தகாதனவற்றைச் சொல்வது. 642.

643. கேட்டார் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்.

நமது சொற்களைக் கேட்டவர்களை நட்புணர்வுடன் பிணைக்கக் கூடியனவாகவும் கேளாரும் - நட்பை அவாவிக் கேளாதவரும் கேட்க விரும்பும் சொற்களை மொழிவதே சொல்.

சொற்களின் தோற்றம் - வளர்ச்சி நட்புணர்வினை வளர்ப்பதற்கே என்பது தேற்றம். ஆதலால் வெறுப்பு, பகையை வளர்க்கும் சொற்களைச் சொல்லக் கூடாது என்பது தெளிவு. 643.

644. திறன்அறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனின்ஊஉங்கு இல்.

சொற்களின் திறன்(விளைவிக்கும் பயன்) அறிந்து சொல்லுக. இங்ஙனம் சொல்லுதலில் சிறந்த அறமும் பொருளும் ஈண்டு இல்லை.

எளிதில் கேட்பவரின் நெஞ்சத்தில் புகுந்து பயன் விளைவிக்கும் சொற்களே திறப்பாடுடைய சொற்கள்.

"கேட்பவரின் திறன் அறிந்து சொல்லுக" என்று பொருள் கொள்ளுதலும் கூடும்.

சொற்களின் பயன் அறமாகவும் பொருளாகவும் அமையும் என்பது தெளிவு 644.

645. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து.

ஒன்றைச் சொல்லும்முன் ஆராய்ந்து சொல்லுக. சொல்லும் சொல்லை வேறொரு சொல் வெல்லாமல் இருக்கும்படியாகச் சொல்லுக.

"சொல்"- மானுடத்தின் நிகழ்வுகளுக்குப் புறநிலையில் தொடக்கமாயமைவது. சொல்லப்பெறும் சொல் மற்றவர்களால் ஏற்றுக் கொள்ளப் பெறாத நிலையில் விவாதங்கள் வளரும். வெற்றி - தோல்விச் சிக்கல்கள் உண்டாகும். ஆதலால், பிறிதொரு சொல் வெற்றி பெறக்கூடிய சொற்களைச் சொல்லற்க. 645.

646. வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்.

பிறர் விரும்பி ஏற்கத்தக்கவாறு சொல்லுதலும் பிறர் கூறும் சொற்களின் பயனைக் கொள்ளுதலும் நல்லவர்களின் கோட்பாடு.

பிறர் சொற் பயன் கோடல் என்றதால் தாம் சொல்லுவதே சரி என்ற பிடிவாதப் போக்கு மறுக்கப்படுகிறது. 646.

647. சொலல்வல்லன் சோர்வுஇலன் அஞ்சான் அவனை
இகல் வெல்லல் யார்க்கும் அரிது.

எண்ணியவற்றைச் சொல்லும் வல்லமை உடையவனாகவும், மறதியில்லாதவனாகவும், அவையஞ்சாதவனாகவும் உள்ளவனை யாரும் வெல்லுதல் இயலாது.

பலர், நிறைய எண்ணுவார்கள். ஆனால், சொல் வன்மையின்மையினால் ஆதரவு திரட்ட இயலாது என்ற கருத்தைச் ''சொலல் வல்லன்'' என்று கூறி உணர்த்தியது.

''சோர்விலன்'' தாம் கூறும் சொற்கள் உடனடியாக ஏற்றுக் கொள்ளப்படாமையினால் தளர்ந்து போய்த் தொடர்நிலை நிற்காமையை உணர்த்தியவாறாயிற்று. ''அஞ்சான்''என்றது மற்றவர்கள் என்ன நினைப்பார்களோ என்று அஞ்சி எண்ணுவதைச் சொல்லாமலேயே தவிர்த்தல் என்றும் பொருள் கொள்ளலாம். 647.

648. விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்துஇனிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

சொல்லப் பெறும் காரியங்களை முறைப்படுத்தி இனிய முறையில் சொல்லும் திறனுடையாரைப்பெறின் உலகம் அவர்தம் சொற்களைக் கேட்டுத் தொழிற்பாடுறும். இத்திருக்குறள் வரலாற்றுப் போக்கில் ஆய்வுக்குரியது.

பலரைச் செயற்பாடுறுத்த வேண்டும் எனில் முறையாக இனிதாக ஆணையிடும் சொல்லாற்றலும் வேண்டும் என்பதாயிற்று. 648.

649. பலசொல்லக் காமுறுவர்மன்ற மாசு அற்ற
சிலசொல்லல் தேற்றா தவர்.

நல்லனவாய் சில சொற்களைக் கொண்டு கேட்பாருக்குத் தெளிவுண்டாக்க இயலாத வர்கள் பலப்பல சொல்லக் காமுறுவர்.

தெளிவு, சொற்களின் தொகுதியில் அல்ல. சொல்லப்பெறும் முறையில்தான் இருக்கிறது. தெளிவாய்ச் சொல்லும் திறனற்றவர்களே பல

சொல்லக் காமுறுவர். பல சொல்லு தலால் நோக்கங்கள் பாழ்படுதலும் கூடும். காலச் சேதமும் ஆற்றல் செலவும் கூடும். 649.

650. இணர்ஊழ்த்தும் நாறா மலர்அனையர் கற்றது
உணர விரித்துஉரையா தார்.

கற்றறிந்தனவற்றைப் பிறரறியும் வண்ணம் விரித்துரைக்க இயலாதவர்கள் மலர்ந்தும் மணமில்லாத மலர் அனையர்.

கற்பது, அறிவதற்காக மட்டுமன்று சொல்லவுமேயாம். கற்றுயர்ந்ததைச் சொன்னாலே அறிவு வளர்ந்து செயற்பாட்டுக்கு வருகிறது. 650.

## 66. வினைத்தூய்மை

வினை ஒருவன் செய்யும் செயல் -தொழிலைக் குறிக்கும். 'எது வினை?' என்பான் கம்பன். செய்யும் செயலின் - தொழிலின் தூய்மையாவது செய்யும் தொழிலைப் பிழைப்பாகக்கருதாமல் மனிதநேயத்தை மையமாகக் கொண்டதாக மனிதர்களுக்குப் பயன் தரக் கூடியதாக அமைதல். மானுட வாழ்வியலின் மேம்பாட்டுக்குரிய அறம்,பொருள், இன்பம் பயப்பனவாக அமைதல் வேண்டும்.

சொற்கள் வினைத்தூண்டுதலுக்குரியன. அதனால் சொல்வன்மையைத் தொடர்ந்து வினைத்தூய்மை சொன்னார்.

651. துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்
வேண்டிய எல்லாம் தரும்.

ஒருவருக்கு அமைந்த துணை, செல்வம் தரும். வினைத்தூய்மை வேண்டுவன எல்லாம் தரும்.

துணையின் பயன்பாட்டளவு எல்லைக்குட்பட்டது. ஆனால், வினைத்தூய்மை பலரை ஈர்க்கும். பலப்பல பயனைக் கூட்டும். அதனால், துன்பத்தின் காரண காரியங்களை அறிந்து அவற்றை ஆள்வினைத் திறனுடன் சந்தித்து மாற்றுதலேயாம்.

இன்று வினைநலமின்மை ஆக்கந் தருகிறது. சுரண்டுதல், வினைநலமற்றது. இத்தகு தீவினை இயற்றுவோர் இன்று வாழ்கின்றனர். (வாழாது வாழ்கின்றனர்) மக்கள் விழித்தெழுக. 651.

652. என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

புகழினையும், அறத்தினையும் தராத தீவினைகளை என்றும் ஒழித்திடுதல் வேண்டும்.

அறத்தினையும் புகழினையும் தராத செயல்களை ஒழித்திடுக. காலம், சூழ்நிலை, வினைகளைப் பாராமல் ஒழித்திட வேண்டும் என்பதற்காகத் தற்காலிக நன்மைகளைக் கருதிக்கூட நன்றி பயவாவினை செய்தல் கூடாது என்பதனை வலியுறுத்த ''என்றும்'' என்றார்.

''நன்றி'' - நன்மை. ஆக்கம் என்பாரும் உளர். ஆக்கமும் நன்மை தருவதேயாம். 652.

653. ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர்.

தாம் மேன்மையுறுதல் வேண்டும் என்று கருதுவோர், புகழ் கெடும் செயல்களைச் செய்தலைத் தவிர்க்க வேண்டும்.

ஓஒதல் - ஒவ்வுதல்- தவிர்த்தல். 653.

654. இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

அச்சம் இல்லாத தெளிந்த அறிவினையுடையவர், துன்பத்துள்படினும் பழி சுமக்கும் காரியங்களைச் செய்யார்.

துன்பத்திற்கு முறையான தீர்வு காண்பதே முறை. பழி சுமக்கும் வழிகள் மூலம் துன்பத்திற்குக் காணப்பெறும் தீர்வு மேலும் துன்பத்தைத் தரும். 654.

655. எற்றென்று இரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றுஅன்ன செய்யாமை நன்று.

தான் செய்த செயல்களின் எதிர் விளைவுகளைக் கண்டு ''என்ன செய்தோம்?'' என்று கழிவிரக்கப்படக்கூடிய செயல்களைச் செய்யற்க. மீண்டும் கழிவிரக்கத்திற்குரிய செயல்களையே பழக்க வாசனையால் செய்வானாகில் அவன் யாதொன்றும் செய்யாதிருத்தலே நன்று.

''முன்னால் செய்த காரியங்களைச் செய்ததுபோல் பின்னும் செய்யாதொழிவது நன்று'' என்ற உரை ''செய்வானேல்'' என்று கூறியிருப்பதால் பொருந்தாது.

''மற்றன்ன'' - என்றது பிழை வருதலுக்குரியனவல்லாத பிறதுறைப் பணிகள் என்று கொள்வது சிறப்பு. 655.

656. ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

பெற்றெடுத்த தாயின் பசித் துன்பத்தைக் கண்டாலும் தாயின் பசியை நீக்கும் பொருட்டுப் பெரியோர் பழிக்கத்தக்க செயல்களைச் செய்யற்க.

''துன்பத்தில் எல்லை பெற்ற தாயின் பசி''என்பது ஆசிரியர் கருத்து. பெற்ற தாயின் பசி பற்றிக் கவலைப்படாதோர் இன்று உளர். 656.

657. பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை.

பழிகளுடன் வரும் ஆக்கத்திலும் பெரியோருக்கு வறுமையே உயர்வு.

''வறுமையின் காரணமாகப் பழிப்பதற்குரிய செயல்களை ஏற்கலாம்; மன்னிக்கலாம்'' என்ற கொள்கையை மறுத்தது. 257.

658. கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு அவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்.

அறநெறிகள் ஆகாவென ஒதுக்கிய செயல்களைச் செய்தார்க்கு அவை நிறைவெய்தா. ஒரோவழி நிறைவெய்தினாலும் துன்பத்தைத் தரும்.

''முடிந்தாலும் '' என்பது, ஒரோவழி அறமல்லாதவை வெற்றி பெறும் என்ற உலகியற்கை உணர்த்தியது. 658.

659. அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை.

பிறர் அழக்கொண்ட பொருள்கள் அழவைத்துவிட்டுப் போய்விடும்.பிறர் மகிழத் தேடிய பொருள்கள், இழந்தாலும் திரும்ப வரும்.

''அழக்கொண்டவை'' மற்றவர் வருந்தி உழைத்த உழைப்பில் உருவாக்கிய செல்வத்தை உரிய ஊதியம் தராமல் எடுத்துக் கொண்ட பொருள்.

சுரண்டப்படாமல் தப்பித்துக் கொள்வதற்குரிய அறிவு வந்தபொழுது உழைக்காமல் பெற்ற செல்வமுடையார் அவற்றை இழக்க நேரிடுதல் இயற்கையின் நியதி. 659.

660. சலத்தால் பொருள்செய்துஏமார்த்தல் பசுமண்
கலத்துள்நீர் பெய்துஇரீஇ யற்று.

சூழ்ச்சிகள் மூலம் பொருளீட்டிப் பாதுகாக்க முடியும் என்று எண்ணுவது சுடப்பெறாத பச்சை மண் சட்டியில் தண்ணீரைச் சேமித்தது போலவேயாம்.

சுடாத பச்சை மண் சட்டியில் தண்ணீர் நிற்காது.

சலத்தால் பொருள் செய்தலாவது; உழைப்பிற்கேற்ற ஊதியம் தராது பொருள் ஈட்டல்; விற்கும் பொருள்களில் கலப்படம் செய்தல்; விற்கும் பொருள்களின் அளவைக் குறைத்தல்;கொள்முதலில் விலையைக் குறைத்தல்; அதிக வட்டி வாங்குதல் முதலியன.

பண மதிப்பீட்டுச் சமுதாயம் இருக்கும் வரை , சலத்தால் பொருள் செய்தலை மக்கள் கைவிட மாட்டார்கள் என்பதே வரலாறு காட்டும் உண்மை. 660.

## 67. வினைத்திட்பம்

தூய்மை மட்டும் போதாது, திண்மை( உறுதி) தேவை. திண்மை இல்லாத தூய்மை சோர்வு படும். அல்லது தோல்விகளும் துன்பங்களும் வந்துழி எடுத்துக்கொண்ட பணிகளைக் கைவிட்டு விடுவர்.அல்லது ஆற்றாமை காரணமாகச் சோம்பலின் வயப்படுவர். திண்மைதான் தூய்மையைக் கூடக் காப்பது. செய்யும் பணிகளில் வெற்றி தோல்விகளைப் பாராட்டாது, பெருமை சிறுமை பாராது புகழ்வழி நோக்காது செய்தற்குரிய மனத்திண்மை வேண்டும். தூய்மையான-மனித நேயமிக்க பணி என்ற வினைத்தூய்மையிருப்பதால் அச்சம் ஏன்? துணிந்து தொழிற்படுதல் வேண்டும் என்று வலியுறுத்தவே ''வினைத்தூய்மை''யைத் தொடர்ந்து ''வினைத்திட்பம்'' கூறினார்.

இன்றைய இடர்ப்பாடுகளுக்கெல்லாம் காரணம், வினை செய்வார் இலர் என்பதன்று. வினைத்தூய்மை இன்மையும் காரணமன்று. வினைத்திட்பம் இன்மையே என்பதறிக.

661. வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற.

செயலில் உறுதியென்பது ஒருவனுடைய (செயல் செய்பவனுடைய) மன உறுதியேயாம். மனத்திட்பத்தை ஒழிந்த பிறவெல்லாம் இருந்தாலும் பயனில்லை.

''மற்றைய எல்லாம் பிற'' என்றது அறிவுடைமை முதலியன.

எந்த ஒரு பணிக்கும் உடன்படாதார் ஓராயிரம் பேர் இருக்கவே செய்வர்; இஃது உலகியற்கை . இங்ஙனம் இருப்பது அவர்களுடைய பழக்க வாசனை. அவர்களின் எதிர்ப்பு முதலியவற்றைக் கண்டு அஞ்சாது மனித நேயமிக்க செயல்களை மன உறுதியுடன் செய்தல் வேண்டும்.

காங்கிரசு (இ) 1989 நாடாளுமன்றத் தேர்தலின் பொழுது மனித நேயமிக்கதும், அது நூறாண்டுகளுக்கும் மேலாகப் போற்றி வளர்த்ததுமாகிய சமயச் சார்பின்மையை இந்து வெறியர்களுக்கு அஞ்சிக் கைவிட்டது; அதனால் தோற்றது. இது மனத்திட்பம் இன்மைக்குச் சான்று. 661.

662. ஊறுஒரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறுஎன்பர் ஆய்ந்தவர் கோள்.

ஆராய்ந்து அறிந்த அறிஞர்கள் பயன்படும் பழுதிலாப் பணிகளையே செய்க என்றும், பயனிலாத பழுதுபடும் செயல்களைச் செய்யற்க என்றும் கடறுவர். ஒரே வழி பழுது படும் செயல்களைச் செய்ய முனைந்து விட்டாலும் அதனை இடையில் நிறுத்தாது பயனுடையதாக அமையத்தக்க வகையில் செய்க என்றும் கூறுவர்.

எச்செயலும் பயனுடையதாக அமைதல் வேண்டும் என்பது ஆசிரியர் குறிக்கோள். ''பலனில் பற்றின்றிச் செய்க''என்ற ஆன்றோர் வாக்குடன் முரண்பாடுடையது ஆகாதோ எனின், இல்லை. இங்குப் பலன் என்றது தற்சார்பான பலனேயாம். 662.

663. கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை இடைக்கொட்கின்
எற்றா விழுமந் தரும்.

செய்யப்பெறும் பணிகள் அச்செயலின் முடிவில், மற்றவர் அறியத்தக்க வகையில் செய்தல் மனத்திட்பம். அங்ஙனமின்றி இடையிலேயே வெளிப்படின் அச்செயல் நீங்காத் துன்பத்தைத் தரும்.

உரையாசிரியர்கள் பலரும் இந்தக் குறளுக்குப் போரொடு தொடர்புபடுத்திக் குறிப்பு எழுதியுள்ளனர். ஆனாலும் இது சாதாரண மனிதனின் அன்றாட வாழ்க்கைக்கும் பொருந்தும். 663.

664. சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்.

செயல்கள் - செயல்களைச் செய்யும் முறைமை பற்றிச் சொல்லுதல் எல்லோர்க்கும் எளிதாம். ஆனால், சொல்லிய வண்ணம் செய்தல் அரிது.

இன்று, மனித நேயம் சோசலிசம் முதலியன பற்றி நிறையச் சொல்லுகிறார்கள் .ஆனால் காரியத்தில் காண முடியவில்லை. 664.

665.வீறுஎய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்
ஊறுஎய்தி உள்ளப் படும்

எண்ணங்களாலும் பிற சிறப்புக்களாலும் பெருமை பெற்றவர்களின் செயல் துணிவு, அரசராலும் நினைக்கப் பெறும்.

தொடக்கத்தில் கேளாது, பின் தீயூழ் வந்துழி நல்லமைச்சரின் பெருமை நினைக்கப்படும் என்றார். 665.

666. எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்.

ஒருவர் தாம் எண்ணியவற்றையெல்லாம் எண்ணியவாறே அடைவர், எண்ணியவர் உறுதியுடன் கடைப்பிடியுடையராக இருப்பின்.

''திண்மை''- முயற்சியின் பாற்பட்டது. திண்மையிலாதார் எண்ணுவதிலும் கூட ஒரு தன்மைத்தாக எண்ணார் என்பதூஉம் அறிக. 666.

667. உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து.

உருவத்தின் சிறுமை கண்டு இகழ்தலைத் தவிர்த்திடுக. உருண்டு ஓடும் தேருக்கு அதன் சிறிய அச்சாணி ஓட்டத்திற்குத் துணை. அதுபோல்வாரை உடையது உலகம்.

அச்சாணி, தேரின் சக்கரம் கழன்று விடாமல் பாதுகாப்பதுடன் தேர்ச் சக்கரத்தின் உருளலுக்கும் துணை செய்கிறது. தேரின் அச்சாணி உருவத்தில் சிறியதாயினும் திண்மையுடையது. 667.

668. கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது
தூக்கம் கடிந்து செயல்.

தெளிந்த அறிவினால் தேர்ந்தெடுத்த பணியினைச் செய்யும் பொழுது மனம் சலியாதும் காலம் நீட்டிக்காமலும் உடனே செய்யவேண்டும்.

பணியிடையில் எதிர்ப்புகள், தோல்விகள், இழப்புகள் வரக்கூடும். இவற்றால் மனம் சலித்தல் கூடாது. எதிர்ப்புகள், தோல்விகள், இழப்புகள் பணியினால் வருபவையல்ல. பணிகளைச் செய்வோரின் அணுகுமுறையால் வருபவையேயாம்.

ஒரு பணிக்குரிய காலம் தொடர்ந்து இருத்தல் இயலாது, காலம் மாறுபடலாம். பணியின் தன்மையும் பயனும் மாறுபடலாம். ஆதலால் காலம் நீட்டித்தல் கூடாது. 668.

669. துன்பம் உறவரினும் செய்க துணிவுஆற்றி
இன்பம் பயக்கும் வினை.

துன்பமே வந்து உறுத்தினாலும் துணிவுடன் இன்பம் தரும் செயல்களைச் செய்க.

''இன்பம் பயக்கும் எனின்'' என்றும் பாடம் உண்டு. முன்பே ''எண்ணித் துணிக'' என்று கூறியுள்ளதால் ஈண்டு எண்ணித் துணிந்த பணி இன்பம் பயக்கும் என்ற ஒருதலையான முடிவுக்குப் பிறகு தொடங்கிய பணியாக இருப்பதே முறையாதலின் ''இன்பம் பயக்கும் வினை'' என்ற பாடமே சரியானது.

எந்த ஒரு பணியும் தொடக்கத்தில் துன்பம் தருதலே இயற்கை.

போதிய பட்டறிவு இன்மையாலும், சுற்றுப்புறச் சூழ்நிலைகள் தகுதிப்படுத்தப்படாததாக இருப்பதனாலும் துன்பம் வரும். காலப்போக்கில்தான் எந்த ஒருபணியும் இன்பம் தர இயலும் . சில பணிகள் ஒரு தலைமுறை கடந்தும் கூட இன்பம் தரலாம். இன்பம் தராமலும் போகலாம். ஆனால் இன்பம் தராது போனாலும் துன்பத்தின் தாக்கத்தைக் குறைத்திருக்கும் என்பதை அறிக. 669.

670. எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டாது உலகு.

எந்த வகையான உறுதிகளை ஒருவர் அடைந்திருந்தாலும் செய்யும் செயலில் உறுதியில்லாதாரை உலகம் விரும்பாது.

உறுதிப்பாடுடைமைக்குச் சான்று, செயலிற் காட்டும் உறுதியே என்பது பெறப்பட்டது. 670.

## 68. வினை செயல்வகை

ஒரு செயலைச் செய்யும் வழிமுறைகளைப் பற்றி விளக்குவது. செய்யப்பெறும் ஒரு செயல் முழுமையான பயனைத் தரவேண்டுமாயின் அந்தச் செயலை முறையாகச் செய்தல் அவசியம். ஒவ்வொரு செயலுக்கும் நான்கு நிலைகள் உண்டு.

ஒன்று :செய்ய வேண்டிய செயலை எண்ணித் துணிதல்.

இரண்டு ;எண்ணித் துணிந்த செயலைச் செய்தலுக்குரிய காலம், கருவி, துணை முதலியன பற்றி முடிவு செய்து ஆயத்த நிலைப்படுத்தல்.

மூன்று ; செயலைச் செய்தல்.

நான்கு ; செய்த செயலைப் பயன் தரும் வரை தொடர்ந்து செய்தல் ; பேணுதல் , பாதுகாத்தல்.

செயலைச் செய்வதை விடச் செயலுக்கு முன்னும் பின்னும்தான் அதிகப் பொறுப்பு இருக்கிறது என்பதறிக.

671. சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது.

செய்யப்புகும் ஒரு செயலைப் பற்றி நன்றாக ஆய்வு செய்து துணிந்த பின்பு அச்செயலைத் துணிவுடன் செய்யாது காலம் நீட்டித்தல் தீது .

ஒரு செயலைச் செய்வது என்று துணிந்த பிறகு ,காலம் நீட்டித்தால் முடிவு எடுத்திருந்த செயலுக்குரிய காலம் மாறுபடுதலால் சூழ்நிலை மாறுபட்டுச் செயல் செய்தற்குரிய சூழல் கெடும் என்பதறிக.

காலம் என்பது பலமுனைகளிலும் தொடர்புடையது . ஆதலால் காலம் நீட்டித்தல்

கூடாது.காலம் நீட்டித்தால் ஏற்படும் இழப்பு ஒன்றாக இருக்காது: பலப்பல என்பது ஓர்க. காலந்தவறுதல் தாழ்ச்சியைத்தரும் என்பதால் காலம் நீட்டித்தலையே தாழ்ச்சி என்று கூறினார். 671,

672. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

காலம் நீட்டித்துச் செய்யக்கூடிய செயல்களைக் காலம் நீட்டித்தே செய்க காலந்தாழ்த்தாது செய்யக்கூடிய செயல்களைக் காலந்தாழ்த்தாது விரைந்து செய்க.

கருத்து மாற்றங்களை எதிர்பார்த்தல், ஆகாது என்று ஒரு சிலரை ஒதுக்குதல் ஆகியவற்றில் காலம் நீட்டிப்பது பயன் தரலாம். ''காலம் மருந்து'' என்பது அனுபவ வாக்கு.

ஆக்கத்தின்பாற்பட்ட பணிகள், பிறர் துன்பம் துடைக்கும் பணிகள் ஆகியவற்றில் காலம் தாழ்த்துதல் கூடாது. இந்த வகைப்பணிகளில் காலந்தாழ்த்தினால் இல்லையென்று கூறியதாகவே கருதப்பெறும். 672.

673. ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

செயல் செய்து முடிக்கக்கூடிய பல்வேறு வாயில்களையும் அறிந்து செய்தால் செயல் நன்றாக முடியும். செயலைச் சிறப்புறச் செய்து முடிக்கக்கூடிய வாயில்கள் கிடைக்காது போனால் செய்யக் கூடியதைச் செய்க.

ஒரு பெரிய செயலைச் செய்து முடிக்கப் பல்வேறு வாயில்களையும் கருவியாகக் கொண்டு செய்து முடித்தல் வேண்டும். அதாவது ஒரே வாயிலை மட்டும் நம்பிச் செயலைத் தொடங்குதல் கூடாது என்பதறிக.

பெரிய செயல்களைச் செய்வதற்குரிய வாயில்கள் அமையாது போயின் ,செய்யக் கூடியவைகளைச் செய்க என்பது ''செல்லும்வாய் நோக்கிச் செயல்'' என்பது. 673.

674. வினைபகை என்றுஇரண்டின் எச்சம் நினையுங்கால்
தீஎச்சம் போலத் தெறும்.

செய்யும் செயல், பகைமுடித்தல் ஆகிய இரண்டும் முழுமையாகச் செய்து முடிக்கப் பெறாதுவிடின் அணைக்காது விடுத்த தீப்போலத் துன்பம் தரும்.

செய்யத் தொடங்கிய செயல் முழுமையாகச் செய்து முடிக்காது போனால், பதிலுக்குத் துன்பம் வரும். பகையை மாற்றுதலாகிய பணியை அரைகுறையாய் விடினும் துன்பமேயாம்.

வீட்டில் பற்றிய தீ, ஒரு பகுதி அணைக்கப்பெறாது விடப்பட்டால் அணைத்த பயனும் போயிற்று. விடுத்த தீ மேலும் பரவி அழிக்கும். 974.

675. பொருள்கருவி காலம் வினையி னொடு ஐந்தும்
இருள் தீர எண்ணிச் செயல்.

செயல் செய்யப் புகும்போது செய்து முடித்தற்குரிய பொருள், கருவி, காலம், செயல், இடம் ஆகிய ஐந்தையும் மயக்கம் இல்லாமல் ஆய்வு செய்து எண்ணிச் செய்க.

தற்சார்பாலும் சோம்பலாலும் வருவது மயக்கம். 675.

676. முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

செய்யப்புகும் செயல் முற்றாக முடியும் நிலையும், இடையூறு வரும் நிலைகளும் அச்செயல் முடித்தால் அடையும் பயனும் நோக்கிச் செய்க.

அதாவது, இடையூறுகளைக் கடந்து செயல் செய்யப் பெருமுயற்சி தேவை. முயற்சியின் அளவுக்குப் பெரும் பயன் இல்லாது போனால் ஒரு செயலைச் செய்வானேன்? 676

677. செய்வினை செய்வான் செயன்முறை அவ்வினை
உள்ளறிவான் உள்ளம் கொளல்.

செய்யக் கூடிய செயல்களைச் செய்பவனின் செயல்முறையாவது அச்செயலில் முன் அனுபவம் உடையாருடைய உள்ளத்தைத் துணையாகக் கொண்டு செய்தலாகும்.

பட்டறிவிற்கு ஈடானது ஒன்றில்லை. ஆதலால், ‘‘உள்ளறிவான் உள்ளம் கொளல’’ என்றார். பட்டறிவுடையாரின் துணைக் கொண்டு செய்தால் காலம், பொருள், ஆற்றல் மிச்சப்படுவதுடன் சில சிக்கல்களும் தவிர்க்கப் பெறும். 677.

678. வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத்தற்று.

ஒரு செயலால் பிறிதொரு செயலை ஆக்கிக் கொள்ளல் மதம் பிடித்த யானையைப் பிறிதொரு யானையால் பிடித்தது போலாம்.

ஒரு யானையைக் கொண்டு பிறிதொரு யானையைப் பிடித்தல் யானை பிடிக்கும் மரபு. ‘‘மானைக் காட்டி மானைப் பிடித்தல் என்றும் ஒரு வழக்கு உண்டு.’’

ஆழ்ந்த சிந்தனையுடன் செய்தால் ஒரு செயல்வழிப் பல செயல்கள் கைகூடும். எந்தவொரு தூய்மையான தொண்டும் பன்முனைப் பயன் தரும். 678.

679. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல்

நண்பருக்கு நல்லது செய்தலினும் பகைவரிடமிருந்து பிரித்து எடுத்தவரிடம் விரைந்து ஒட்டிக்கொள்க.

பகைவரிடமிருந்து பிரித்து எடுத்தவர் ஊசலாட்டத்தில் மீண்டும் மாறுவர் என்று கருதி விரைந்து ஒட்டிக் கொள்க என்றார்.

நண்பருக்குப் பகைவரால் வரும் துன்பத்தைத் தடுத்தல் நன்மை செய்தலினும் பயனுடையது என்பது கருத்து. 679.

680. உறைசிறியார் உண்ணடுங்கல் அஞ்சிக் குறைபெறின்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

சிறியராய் இருப்பவர், தம்பகைவரைக் கண்டு உள் நடுங்கி அஞ்சுதலினும் பெரியாரைப் பணிந்து சமாதானம் செய்து கொள்ளுதல் நல்லது.

அஞ்சி வாழ்தலினும் பொருது முடித்தற்கியலாதவரிடம் பொருது அழிதலினும் சமாதானம் நல்லது என்று கூறியவாறு. 680.

## 69. தூது

இருவருக்கிடையே நட்பை ஏற்படுத்தி வளர்க்கும் பணியில் ஈடுபடுதல், பழகியவர்களிடையே பிணக்குகள் ஏற்பட்டால் இடையில் இருந்து பேசி இணக்கம் ஏற்படுத்துதல், பகைமை கொண்டவர்களுக்கிடையில் பேசிச் சமாதானம் செய்து வைத்தல், கூட்டின் காரணமாக வலிமைகூடிப் போர் விளைவிப்போரை ஒருவரிடமிருந்து பிரித்தல் முதலியன தூதுவரின் கடமைகள். இத்தகைய தூது பண்டு அரசுகளுக்கிடையில் மட்டுமே நிகழ்ந்ததால் அரசியல் சார்பான பணி, தூது என்று கருதப்பெற்றது. குடும்ப வாழ்க்கையிலும் சமூக வாழ்க்கையிலும் கூடத் தூது தவிர்க்க இயலாதது.

பெரிய புராணத்தில் சிவபெருமான் பரவையாரிடம் சுந்தரருக்காகத் தூது சென்றமையை அறிக.

தமிழர்தம் ஆட்சி அமைப்பில் அமைந்த ஐம்பெருங்குழுவில் 'தூதுவர் ஓர் உறுப்பினர்'' என்ற உண்மை அறியத்தக்கது.

681. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுஉரைப்பான் பண்பு.

அன்புடையராக இருத்தலும் வளர்ந்த குடிமரபில் பிறந்தமையிலாகிய பின்னணியும் அரசர் விரும்பும் பண்புகளை உடையராயிருத்தலும் தூதுவர்களின்

பண்பாக இருத்தல் வேண்டும்.

தூது செல்லும் இடத்தில் வெறுப்பன பேசுதலும் உடன்படா மனப்போக்கும் நிகழலாம். அப்போதும் நிலை தடுமாறாமல் நெறிதவறிப் பேசுவோரிடமும், செய்வோரிடமும் அன்புடையதாகப் பழகி இணக்கம் காணவேண்டும் என்பதால் அன்புடைமை முதலில் கூறினார்.

வளர்ந்த குடியில் பிறந்திருந்தால் தலைமுறை வழி நற்பண்புகள் அமைந்திருக்கும் என்ற நம்பிக்கையிலும் முன்னோர்-பெற்றோர் இருந்த பெருஞ்சிறப்பு வழி காட்டப்பெறும் பெருமை, ஒரோவழி பின்தோன்றியவர்களிடமும் காட்டப்பெறும் என்பதாலும் 'ஆன்ற குடிப்பிறத்தல்' என்று கூறினார்

யார் ஒருவரும் அவாவிப் பழகும் பண்புகளைப் பெற்றாலே எடுத்த காரியம் முடியும் என்பதால் 'வேந்தவாம் பண்பு' என்றார். 681.

682. அன்புஅறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுஉரைப்பார்க்கு
இன்றி அமையாத மூன்று.

அன்பும் அறனும் ஆராய்ந்து கண்டு செற்களைச் சொல்லும் வன்மையும் தூது உரைப்பார்க்கு இன்றியமையாத மூன்று.

''அன்பு''-தூது அனுப்பும் அரசன் மாட்டு என்று கூறுவர். தவறில்லையாயினும் தூதுரைக்கும் அரசனிடத்து அன்பு என்பதே சிறந்த பொருள். 682.

683. நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

நூல் பல கற்றுத் தெளிந்த அறிவைப் பெறுதல், வேல் தங்கிய வேந்தரிடம் தூது செல்வோருக்குத் தேவையான பண்பு.

வேற்றரசனும் அந்த அரசனின் அவை அமைச்சர்களும் தொடுக்கும் வினாக்களுக்கு விடை சொல்லப் பல நூல் பயிற்சி தேவை என்றார். 683.

684. அறிவுஉரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு.

இயற்கையாயமைந்த அறிவும், கவர்ச்சி மிக்க உருவமும், ஆராய்ந்தறிந்த கல்வியும் வளமாகப் பெற்றவர்களே தூது செல்லுதல் வேண்டும்.

''ஆராய்ந்தறிந்த கல்வி'' கற்கும் கல்வியை ஆராய்ந்து தெளிந்து துணிதல்.

ஆராய்ச்சி இல்லாத கல்வி, ஏட்டுக் கல்வி, எத்துணையும் பயன் தராது. 684.

685. தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது.

விரிவாக இல்லாமல் தெளிகுத்துச் சொல்லியும், தகாதனவற்றை நேரிடையாகச் சொல்லாமல் ஒதுக்கி மகிழ்ச்சி தரும் வகையில் சொல்லியும் நன்மை செய்வதே தூது.

காலக் கேட்டைத் தவிர்க்க ''தொகுத்துச் சொல்லி'' என்றார். எந்த ஒன்றை விரித்துச் சொன்னாலும் வழுக்கள் ஏற்படும்; அதைத் தவிர்க்கவும், 'தொகுத்துக் கூறுதல் ' என்றார்.

கோபம் வரக்கூடிய செய்திகளை அப்படியே எதிர்மறையாகச் சொல்லாமல் நலம் பயக்கும் வழிவகை கண்டு மகிழ்ச்சி பொங்கச் சொல்லுதல் தூது . 685.

686. கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லி காலத்தால்
தக்கது அறிவதாம் தூது.

நீதி நூல்களைக் கற்றுத் தெறிந்தவனும் தூது சென்ற அரசனின் வெகுளிக்கு அஞ்சாதவனும் தூதுரைக்கும் காலத்தில் சூழலையறிந்து தூதினை முடிக்குந் திறனுமுடையவனுமே தூதுவன். 686.

687. கடன்அறிந்து காலம் கருதி இடனறிந்து
எண்ணி உரைப்பான் தலை.

தமது கடமையை அறிந்து, (அந்தக் கடமையை) நிறைவேற்றுவதற்குரிய வகையில் காலத்தையும் இடத்தையும் அறிந்து அவற்றிற்கேற்றாற்போல எண்ணிச் சொல்லுபவன் தலைசிறந்த தூதுவன்.

செய்ய வேண்டிய கடமையைக் 'கடன்' என்றார். உரிய தகுதி நலன்களையும் பெறுவதால் 'கடன்' ஆயிற்று.

கடமை உணர்ந்தவர்கள் காரியம் நிறைவேறத் தக்க வகையில் எண்ணிச் செய்வர்.கடமையை உணராதவர்கள் 'ஏனோதானோ' என்று செய்வர். எதிர் விளைவு வாராமலும் உடன்பாட்டு விளைவு உருவாகத் தக்க வகையிலும் எண்ணிச் செய்தல் வேண்டும் என்பதனால் 'காலமும் இடமும்' குறிப்பிட்டார். 687.

688. தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

தூய்மையுடைமையும், துணையாக அமையும் இயல்பும் துணிவுடைமையும் உண்மை கூறுவோரின் இயல்பு.

தூய்மையாவது ஆசைக்காட்படாதிருத்தல், யாரிடம் வாய்மை கூறப்படுகிறதோ அவர் வாய்மை கூறுவோரைத் தமது துணை என்று எடுத்துக்கொள்ளா விடில் சொல்லும் வாய்மை எடுபடாது. ஆதலால் துணைமை வேண்டும். 688.

689. விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

தனது அரசன் சொன்னவைகளைச் சொன்னபடி, மாற்றரசர்க்குச் சொல்லாதவன் தூதுவன்.

தனது அரசன் சோர்ந்தும் வெகுண்டும் சில சொல்லியிருக்கலாம். அந்தச் சொற்களை அப்படியே சோர்ந்து சொல்லுவது தூதுவனுக்கு ஆகாது. 689.

690. இறுதி பயப்பனும் எஞ்சாது இறைவற்கு
உறுதி பயப்பதாம் தூது.

தமது வாழ்க்கைக்கு முடிவே வருவதாய் இருந்தாலும் அதற்காக அஞ்சாது தனது அரசருக்கு உறுதி பயப்பவைகளைச் செய்பவனே தூதுவன். 690

## 70. மன்னரைச் சேர்ந்தொழுகுதல்

மண்ணாளும் அரசர்களைச் சேர்ந்து ஒழுகும் நெறிமுறைகளை விளக்குவது இந்த அதிகாரம். அரசர்களிடம் - இன்று உயர் பதவியிலிருப்பவர்களிடம் ஒழுகுதல் என்று எடுத்துக் கொண்டாலும் பிழையில்லை. உயர்நிலையிலிருப்பவர்களுடன் பழகுதல் ஒரு கலை. இந்நிலையில் கைவந்தவர்கள் எண்ணிய முடிப்பர். யாதொரு இடர்ப்பாடும் இவர்களை அணுகாது.

691. அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

தீயினை விட்டு விலகினால் குளிரும்; மிகவும் நெருக்கமாக அணுகினால் சுடும். அரசரை விட்டு அகன்று ஒழுகினாலும் தீங்கு; அணுகி நின்றாலும் தீங்கு.

அரசரை அணுகி நின்றொழுகுதல், அகன்று நின்றொழுகுதலை விட மிக்க துன்பம் தரும்.

அரசு அதிகாரம் எதுவும் செய்ய வல்லது. அரசு அதிகாரத்தின் அங்கீகாரமின்றி வாழ்தல் இயலாது என்ற அளவுக்கு அரசு அதிகாரம் குடிமக்கள் மீது ஆதிக்கம் கொண்டுள்ளது. இஃது மீண்டும் ஒரு புதுவகையான அடிமையை அறிமுகப்படுத்துவதாகும்.

மார்கழிக் கடுங்குளிருக்கு, தீயின் அருகில் உட்கார்ந்து தீக்காய்வர் பலர். தீக்காய்வாருக்கும் தீக்கும் உள்ள தூரம் நெடிதும் அன்று. அணுக்கமும் அன்று. தீயை மிக அணுகினாலும் சுடும். தீயை விட்டு அகன்றாலும் குளிர் வருத்தும். அதுபோல அரசை மிக நெருக்கமாக அணுகினாலும் அரசின் ஆணை துன்புறுத்தும். அரசின் கவனத்தை விட்டு நெடுந்தூரம் விலகினாலும் அரசு ஐயப்பட்டுத் துன்புறுத்தும். அரசு துன்புறுத்தாது ஒழிந்தாலும் பகைவர் துன்புறுத்துவார் என்று உணர்க. 691.

692. மன்னர் விழைப விழையாமை மன்னரால்
மன்னிய ஆக்கம் தரும்

அரசர்கள் விரும்புவனவற்றை விரும்பாதிருப்பின் அரசரால் நிலைத்த ஆக்கம் தரும்.

மன்னர் விரும்பும் புகழ், பெருமை, அதிகாரம், பெண் ஆகியவற்றை அமைச்சர்கள் விரும்பக் கூடாது என்பது கருத்து. 692.

693. போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கும் அரிது.

போற்றுகின்ற நிலையில் அரியவற்றைப் போற்றுக. போற்றாதொழியும் நிலையில் யாராலும் தேற்ற முடியாது.

போற்றிப் பேணவேண்டிய நிலையிலும் தாழ்ந்து போனால் என்ன செய்வது? யாராலும் தேற்ற முடியாது என்பது முடிவு. 693.

694. செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்துஒழுகல்
ஆன்ற பெரியார் அகத்து.

அரசர் முன்பு இரகசியம் பேசுதலும், நகைத்து விளையாடலும் தவிர்த்திடுதல் வேண்டும்.

இரகசியத்தைச் 'செவிச்சொல்' என்றார். கேட்கும் ஒருவர் காதில் மட்டுமே புலன் ஆவதால் செவிச் சொல் என்றார். பலர் கூடியுள்ள அவையிலும் பலர் பணி செய்யும் அலுவலகங்களிலும் கூடச் செவிச் சொல் தவிர்க்கப்படுதல் வேண்டும். நகைத்து விளையாடுதல் அறவே கூடாது. 694.

695. எப்பொருளும் ஓரார் தொடரார்மற்று அப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை.

அரசர் ஒருவரிடம் செவிச்சொல்லாகப் பேசும் செய்தியைத் தாமே முயன்று கேளார். அரசரைத் தொடர்ந்து மற்றவரிடம் பேசிய செவிச் சொல் பற்றிக் கேட்கவும் மாட்டார். அரசன் தானே தம்மிடம் சொல்லவேண்டியவற்றைச் சொல்லும்பொழுது மட்டுமே கேட்கவும். மற்றவர்கள் செவிச்சொல்லாகப் பேசிக்கொள்வனவற்றைக் கேட்டறிய முற்படுவது தவறு. (அதாவது ஒட்டுக் கேட்டல்)

இருவர் செவிச் சொல்லாகப் பேசிக் கொண்டதைக் கேட்டறிய முயற்சி செய்வதும் தவறு. 695.

696. குறிப்பறிந்து காலம் கருதி வெறுப்புஇல
வேண்டுப வேட்பச் சொலல்.

அரசனது காரியங்களைச் செய்யும் பொழுது அவன் குறிப்பினை அறிந்து காலங்கருதிச் செய்ய வேண்டும். அரசன் வெறுப்புக் காட்டுபவை வேண்டாம். அரசன் விரும்பிக் கேட்கத்தக்க வகையில் சொல்லும் பண்பு வேண்டும். 696.

697. வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்
கேட்பினும் சொல்லா விடல்.

அரசன் விரும்பக் கூடிய பயனுடையனவற்றையே சொல்லுக. பயனற்றவற்றை அரசன் விரும்பிக் கேட்டாலும் சொல்லுவதைத் தவிர்த்திடுக.

பயனுடையவற்றை விரும்பிக் கேட்காது போனாலும் விருப்பம் உண்டாக்கும் வகையில் சொல்லுக என்பது கருத்து. 697.

698. இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோடு ஒழுகப் படும்.

ஆள்வோர் தமக்கு இளையர் என்றும் இனவழி உறவினர் என்றும் உறவும் உரிமையும் கொண்டாடுவதன் மூலம் ஆள்வோரை அவமதிக்காது அரசின் ஆட்சி ஒளியோடு ஒன்றித்துப் பழகுதல் வேண்டும்.

அரசின் ஆட்சிமுறையே மிக்குயர்ந்தது. ஆதலால் ''ஒளி'' என்றார்.

ஆள்வோர் உறவையும் நட்பையும் கூட்டிக் காரியங்கள் செய்வதே நேற்றும் இன்றும் நடைமுறை. 698.

699. கொளப்பட்டேம் என்றுஎண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்குற்ற காட்சி யவர்.

அரசின் ஆதிக்க எல்லையில் கொள்ளப் பெற்றமையை எண்ணி, ஆள்பவர் விரும்பாதனவற்றைச் செய்ய மாட்டார்கள், நிலையான அறிவினை உடையவர்கள்.

''அதிகாரம்'' நிலையானது அல்ல. ஆதலால், அதிகாரத்தில் இருக்கும் பொழுது விழிப்பாக இருப்பர் அறிவுடையோர். 699.

700. பழையம் எனக்கருதிப் பண்புஅல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்.

அரசனிடம் பழகிய பழக்கம் உடையோம் எனக்கருதிப் பண்பல்லாதனவற்றைச் செய்யும் பொழுது - உரிமையுடன் பணிகளைச் செய்யும் பொழுது உரிமைக்குக் கேட்டினைத் தரும்.

உயர்ந்தோரிடம் நாம் கொள்ளும் பழக்கங்கள் வழி உளவாகும் உறவு, உறவுக்காகவே; உரிமைக்காகவல்ல என்று எண்ணிப் பழகுதல் நன்று. 700.

## 71. குறிப்பறிதல்

நடை, உடை பாவனைகளால் ஒருவருடைய எண்ணத்தை அறிந்து கொள்ளுதல்.

குறிப்பாகப் பொறிகளில் ஏற்படும் அசைவுகள், மாற்றங்களைக் கொண்டு ஒருவருடைய எண்ணத்தை அல்லது நோக்கத்தைத் தெரிந்து கொள்ளல் .

வாழ்க்கையை இனிய வெற்றிகளுடன் இயக்கக் குறிப்பறிந்து செய்தலும் ஒழுகுதலும் துணை.

701. கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக்கு அணி.

ஒருவர் ஒன்றைக் கூறாமலே முகம், கண் இவற்றை நோக்குவதின் மூலம் அறிவோர் என்றும் இந்த வற்றாத கடல் சூழ்ந்த உலகத்திற்கு அணி.

குறிப்பறிந்து செய்வோர் வளம் பெறுவார் என்பதால் ''மாறாநீர் வையம்'' என்று கூறி விளக்கினார். 701.

702. ஐயப் படாஅது அகத்தது உணர்வானை
தெய்வத்தோடு ஒப்பக் கொளல்.

ஒருவர் அகத்தில் உள்ளதை ஐயத்திற்கு இடமின்றி உணர்வோரை, தெய்வத்தினைப் போலக் கொண்டு மதித்திடுக.

மாந்தரிடம் இயல்பாக உள்ள குறைந்த ஆற்றல்களைப் போல் அல்லாமல் உயரிய ஆற்றல் இருப்பின் தெய்வத்தின் ஆற்றல் என்று கோடல் மரபு. 702.

703. குறிப்பின் குறிப்புஉணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல்.

தமக்குத் துணையாகத் தனது குறிப்புக்களின் வாயிலாகவே குறிப்பினை அறிந்து செயல்படுவாரைத் தமது செயலுக்குரிய உறுப்புகளுள் ஒருவராக எது கொடுத்தும் கொள்க.

குறிப்பிற் குறிப்புணர்தல் என்பதற்கு, பிறர் குறிப்பினை அறியும் என்ற பொருள் சிறப்புடையதன்று.

'உறுப்பு' என்றது பிழையில்லாத ஒத்துழைப்பு என்று நம்பிக்கையை உணர்த்த. 'யாது கொடுத்தும் கொளல் ' என்றது கிடைத்தற்கரிய அருமையை அறிவுறுத்த.பெரும்பயன் விளையும் ஆதலால் யாது கொடுத்தும் கொள்க என்றார். 703.

704. குறித்தது கூறாமைக் கொள்வாரோடு ஏனை
உறுப்புஓர் அனையரால் வேறு.

ஒருவர் எண்ணியதை அவர் கூறாமலேயே அறிவாரே சிறந்த உறுப்பு. அஃதறிய இயலாதார் உறுப்பால் ஒத்திருந்தாலும் அறிவால் வேறுபட்டவரேயாம்.

ஒருவருக்கு உறுப்பாக அமையும் இயல்பினைப் பெற்றவர்கள் அவர்தம் குறிப்புணரும் அறிவினராயிருத்தல் இயற்கை.

உறுப்பாக அமைந்திருப்பது போலத் தோற்றம். ஆனால் அன்பில், உணர்வில் உறுப்பின் இயல்பு அமையாதவர்கள் உளத்தால் வேறுபட்டோர் என்பது அறிக. 704.

705. குறிப்பின் குறிப்புஉணரா வாயின் உறுப்பினுள்
என்ன பயத்தவோ கண்.

ஒருவரது எண்ணத்தினைக் குறிப்பால் உணர முடியாது போயின் உறுப்புக்களுள் சிறந்த கண்களின் பயன் என்ன?

'கண்' பேசுதலுக்கும் உணர்த்துதலுக்கும் உரிய கருவி, உய்த்துணர்வார் கிடைத்தால். 705.

706. அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.

பளிங்கு தன்னை அடைந்த பொருளினைக் காட்டும் .அதுபோல, நெஞ்சத்தின் கடுப்பினை ( கோபத்தை) முகம் காட்டும்.

பொதுவாக நெஞ்சத்து ஏற்படும் அனைத்து உணர்வுகளையும் காட்டும் திறன் முகத்திற்கு உண்டு. 706.

707. முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும்.

மக்களுக்கு அவர்தம் முகத்தினும் முதிர்ந்த அறிவுடைய உறுப்பு பிறிதொன்று இருக்கிறதா? தம்மையுடையார் மகிழும்பொழுது மலர்ச்சியையும், சினம் கொள்ளும் பொழுது கருகிய நிலையினையும் முந்திக் காட்டும்.

''அகத்தின் அழகு முகத்தில் தெரியும்'' என்ற பழமொழி அறிக.

ஒருவருடைய அகத்தினை அவருடைய முகத்தினைக் கொண்டே அறியலாம் . 707.

708. முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி
உற்றது உணர்வார்ப் பெறின்.

தம்முன் நிற்கும் ஒருவருடைய அகத்தின் எண்ணங்களை அறிய முற்படுவாருக்கு முகம் நோக்கி நிற்றலே போதும். வாயினால் சொல்ல வேண்டுவதில்லை.

ஒருவருடைய முகத்தினைக் கொண்டே அகத்தினை உணர்ந்தறியும் ஆற்றலுடையாரின் முகம் நோக்கி நின்றாலே போதும்.

முகத்தினால் உணரும் திறனுடையார்க்கு, வாயினால் சொல்ல வேண்டியதில்லை. 708.

709. பகைமையும் கேண்மையும் கண்உரைக்கும் கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின்.

கண்ணினுடைய பார்வை வகைகளை உணர்வாருக்கு, கண்களே ஒருவருடைய பகைமையையும், உறவையும் எடுத்துக் கூறும்.

கண்ணின் பார்வைக்கு ஓராயிரம் பொருளுண்டு. கண்ணின் பார்வைத் திறன்களின் வேறுபாட்டை அறிந்தவர்க்குக் கண்ணே பகையையும் உறவையும் கூறும். 709.

710. நுண்ணியம் என்பார் அளக்கும்கோல் காணுங்கால்
கண்ணல்லது இல்லை பிற.

நுண்ணறிவுடையோரைக் கண்டறியும் அளக்குங்கோல் கண்களேயாம்; பிற அல்ல.

ஒருவருடைய நுண்ணறிவுத் திறனையும் கண்கள் கண்டறியும். 710.

## 72. அவையறிதல்

சான்றோர்கள் பலர் கூடியிருக்கின்ற அவையின் தன்மையினை அறிந்து பேசுதல்.

711. அவைஅறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகைஅறிந்த தூய்மை யவர்.

சொற்களின் வகைதொகையினை அறிந்த தூய்மையினை உடையார், அவையின் தன்மையை ஆராய்ந்தறிந்து சொல்லுக.

சொற்களின் வகைதொகை-ஒரே சொல் பலபொருள் உடையதாக அமையும். அதனால் சொல்லின் தொகையறிந்து சொல்லுக என்றார். 711.

712. இடைதெரிந்து நன்குஉணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்.

சொல்பவருக்கும், கேட்பவருக்கும் உள்ள இடைவெளியை நன்குணர்ந்து சொல்லுக. சொற்களின் நடையறிந்து நன்மை பயக்கச் சொல்லும் இயல்பினர் .

சொல்பவருக்கும் சொல்லப்படுபவருக்கும் இடைவெளி குறைவாக இருந்தால் இருவருக்கும் உள்ள இடைவெளியைக் குறைக்கக்கூடிய சொற்களாகத் தெரிந்து சொல்ல வேண்டும் என்பது கருத்து .

''சொல்பவருக்கும் - கேட்பவருக்கும் உள்ள இடைவெளி, உணரும் திறன், நோக்கங்கள் ஆகியவற்றின் காரணமாக உருவாவது . 712.

713. அவைஅறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்
வகைஅறியார் வல்லதூஉம் இல்.

அவையறியாது சொல்லுபவர்கள், சொல்லின் வகையறியாதவர்கள். மேலும் பல கலைத் துறைகளிலும் அனுபவம் இல்லாதவர்கள் .

''சொல்ல வல்லார்'' இலராக இருந்தாலும் உளவியல், நட்பியல் போன்றவை அறிந்திருந்தால் குறையை ஈடுசெய்து கொள்ள இயலும் என்பது கருத்து . 713.

714. ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணம் கொளல்.

ஒள்ளிய அறிவினையுடையாரின் அவையினைச் சார்ந்த ஒருவர் ஒள்ளிய அறிவினராதல் கூடும். அதுபோலவே புல்லறிவாண்மையுடையாரின் அவையைச் சார்ந்த ஒருவர் புல்லறிவாண்மையுடையராதலே இயலும்.

'' இமயஞ் சார்ந்த காக்கை பொன்னிறமாதல் '' போல, ஒள்ளிய அறிவுடையாரின் அவை சேர்ந்தால் ஒள்ளிய அறிவுடையராகலாம். புல்லறிவாண்மையுடையாரின் அவை சேர்ந்தால் புல்லறிவாண்மையுடையராதலே கூடும். ''சார்ந்ததன் வண்ணமே ஆதல் உயிரியற்கை '' என்ற வாய்பாடு அறிக.

ஒள்ளிய அறிவுடையோரவையில் புல்லறிவாண்மையுடையோர் பிதற்றினாலும் அறிவுடையோர் பெருந்தகைமையால் பொறுத்தாற்றி அறிவு கொளுத்துவர். புல்லறிவாளரோ தம்மைச் சார்ந்தவர் பெற்றுள்ள அறிவையும் பழிப்பர். ஆதலால் புல்லறிவாளர்களிடம் அறிவுடையோராகக் காட்டாதிருத்தலே நன்று என்ற கருத்தும் ஏற்புடையதே. 714.

715. நன்றுஎன்ற றவற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.

நன்று என்று பட்டியலிடப் பெற்றவற்றுளெல்லாம் நன்று , மூதறிஞர்கள் அவையில் அவர்தம் குறிப்புக் கிடைக்காமல் முந்தி ஒன்றைச் சொல்லாதிருக்கும் அடக்கம் .

'' முந்து கிளவாச் செறிவு''-என்றதால் மூதறிஞர்கள் கேட்டால் சொல்லலாம் என்றுணர்த்தியவாறு.

அடக்கம் அறியாமையின்பாற்பட்டதல்ல என்பதனை உணர்த்தச் ''செறிவு'' என்றார். 715.

716. ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுஉணர்வார் முன்னர் இழுக்கு.

நன்னெறியில் நின்றொழுகுவார் நிலை தடுமாறியது போன்றதே மெய்ப்பொருள் கற்றுணர்ந்தார் முன் கற்றதை முறையாகச் சொல்லும் திறனின்றி இழுக்குப்படுதல் .

நன்னெறியில் நின்றமையப்பெற்ற பெருநெறிகள், ஒருஅடி தவறுதலால் பயனற்றுப் போதல்போல் கற்றுணர்ந்தார் அவையில்சொல்ல மாட்டாதார் கல்வி அறிவும் இழுக்குப்படும். 716.

717. கற்றுஅறிந்தார் கல்வி விளங்கும் கசடறக்
சொல்தெரிதல் வல்லார் அகத்து.

குற்றமறச் சொற்பொருள் ஆராய்ந்தறிவார் அவையில் கற்றறிந்த கல்வியினாலாய சிறப்பு விளங்கித் தோன்றும் .

கற்றறிந்தார் அவையிலேயே கல்வியறிவு அறியப் பெறும் .விளக்கமும் அறியப் பெறும். அதனால் கற்றறிவில்லாத அவையில் அறிவு விலை போகாது என்பது தேற்றம். 717.

718. உணர்வது உடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று.

கல்வியறிவின் அருமையை உணர்வார்முன் சொல்லுதல் வளரும் பாத்தியில் தண்ணீரை ஊற்றியதைப் போன்றது .

வளரும் பயிருக்கு நீர் துணை செய்தல் போல அறிவில் வளர்வோருக்குக் கற்றறிந்தார் அவை தரும் பாராட்டு, துணை செய்யும். 718.

719. புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்
நன்குசெலச் சொல்லு வார்.

கற்றறிந்த அவையில் நல்லவண்ணம் நற்பொருளைச் சொல்லும் இயல்பினை யுடையவர்கள் ஒற்றறியாப் புல்லர்கள் அவையில் மறந்தும் நற்பொருளைக் கூறுதல் வேண்டாம்.

புல்லர் அவையில் நல்லன கூறுதல் பன்றியின் முன்னே முத்துக்களைப் பரப்பியதைப் போலப் பயனற்றுப் போகும். 719.

720. அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தம்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல் .

கொள்கையால், கோட்பாட்டால் தம்மினமில்லாதார்முன் விவாதம் செய்தல் முற்றத்தில் அமிர்தத்தினைக் கொட்டியதை ஒக்கும். 720.

## 73. அவையஞ்சாமை

அவையில் அஞ்சாமல் தமது கருத்துக்களை எடுத்துக் கூறுதல் அவையில் சொல்ல அச்சம் ஏற்படக் காரணங்கள் .

1. அவையினரை நோக்கத் தமது அறிவைத் தாழ்வாகக் கருதுதல். இது தவறு தாழ்வுணர்ச்சி தீமையிலும் தீமை. அவையிலுள்ளாரிடம் சொன்னால்தான் குறை, நிறையாகும்.

2. அவையினர் தமது கருத்தை ஏற்பார்களோ, மாட்டார்களோ என்ற ஐயம். இது பெரும் பிழை. பிறர் ஏற்பார்கள் அல்லது ஏற்க மாட்டார்கள் என்று எண்ணி எண்ணியதைச் சொல்லாதிருத்தல் பிழை. தொடக்கத்தில் எந்த அறிவுறுத்தலும் மக்களால் ஏற்கப்படாதவைகளே என்பதறிக.

**721. வகைஅறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்**
**தொகைஅறிந்த தூய்மை யவர்.**

தூய்மைகள் அனைத்தும் ஒருங்கே பெற்ற, கற்கவேண்டிய நூல்கள் பலவும் கற்ற தூய்மையாளர்கள், அவையில் சோர்ந்தும் குறையுடைய சொற்களைச் சொல்லமாட்டார்கள்

''ஏதாவது குறையுடைய மனிதராக இருந்தாலும் அக்குறையின் காரணமாக அச்சப்படுதலால் வாய் சோர்வர்'' என்று உணர்த்திய அருமை அறிக.

" வகையறிந்து'' என்றதால் அறிவாண்மையும் "தொகையறிந்து" என்றதால் பலராலும் தூய்மை உடைமையும் என்றவாறு. 721.

**722. கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்**
**கற்ற செலச்சொல்லு வார்.**

கற்றறிந்த அவையினர்முன் தாம் கற்றவற்றை முறையாக மனங்கொள்ளச் சொல்லும் திறமுடையவர்களைக் "கற்றவர்களில் எல்லாம் கற்றவர்" என்று அறிஞர் உலகம் பாராட்டும்.

நிறைய கற்றவர்கள் எடுத்துச் சொலமாட்டாமையினாலே கற்றிலர் என்று கருதப்படுகின்றனர். எதை எங்குச் சொல்லினும் கேட்பவர் மனங்கொள்ளச் சொல்லும் திறன்வேண்டும் என்பது கருத்து. 722.

**723. பகையகத்துச் சாவார் எளியர் அரியர்**
**அவையகத்து அஞ்சா தவர்.**

பகைப்புலத்தில் வலிமை இல்லாதார் பலர் சாவர். அதுபோல சொல்லும் துணிவு உள்ளவர்கள் சிலரேயாவர்.

கற்றல், சொல்லுதல், கூட்டுச்சேர்தல் தெளிந்தும் துணிந்தும் செயலாற்றுதல் வாழ்வியலின் இயக்கமுறை. கூறும் திறமில்லையானால் இவ்வியக்கம் தடைப்படும் என்பதறிக. 723.

724. கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற
மிக்காருள் மிக்க கொளல்.

கற்றறிந்த அறிஞர் அவையில் இருப்போர் ஏற்கத்தக்க வகையில் தாம் கற்றவற்றைச் சொல்லி, அவையின் அறிஞர்களிடமிருந்து தாம் கற்றறிந்ததை விடக் கூடுதலாக அறிந்து கொள்க.

அறிஞர்களிடையில் நிகழும் விவாதம் அறிவை வளர்க்கும் என்பது கருத்து. 724.

725. ஆற்றின் அளவுஅறிந்து கற்க அவைஅஞ்சா
மாற்றம் கொடுத்தல் பொருட்டு.

அவையஞ்சாது, தொடுக்கப்படும் வினாக்களுக்கு விடை கூறும் பொருட்டுக் கற்க வேண்டிய அளவுக்குக் கற்க வேண்டும்.

உலகம் கற்று வளரும் அளவறிந்து கற்றாலே உலகவர் அவையில் நிற்க இயலும். அதனால், "அளவறிந்து" என்றார். 725.

726. வாளொடுஎன் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடுஎன்
நுண்ணவை அஞ்சு பவர்க்கு.

பொருதும் வன்மையைப் பெறாதார் கையில் வாள் இருந்து என்ன பயன்? அவையஞ்சாமல் சொல்லாடல் செய்யும் வலிமையில்லாதோர் நுண்ணிய நூல்பல கற்பினும் என்ன பயன்?

கற்பது சொல்வதற்கே என்ற கருத்து உறுதிப்படுத்தப் படுகிறது. செயலாண்மை உடையார்க்கு வாளொடு பழகுதலும் நூலோடு பழகுதலும் பொருந்தும் என்றாயிற்று. 726.

727. பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சு மவன்கற்ற நூல்.

பகைப்புலத்தில் பேடியின் கையில் வாள் போன்றது, சபையில் சொல்லுவதற்கு அஞ்சுபவன் கற்ற நூல்.

அச்சத்தால் பீடிக்கப்பட்டவர்களுக்கு பகைப்புலத்தில் கையில் வாள் இருந்தும் பயனில்லை. 727.

728. பல்லவை கற்றும் பயம்இலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்.

நல்லவர்கள் கூடியுள்ள அவையில் தாம் கற்றவற்றை நல்லவண்ணம் சொல்லத் தெரியாதவர்கள் பல நூல்களைக் கற்றிருந்தாலும் யாதொரு பயனுமிலாதவர்களே.

மற்றவர்க்கு விளக்கமுற எடுத்துச் சொல்வது, மேலும் தாம் விளக்கமுறவும் பயனுறவுமேயாம். ஆதலால், சொல்லும் ஆற்றல் இல்லாதார் கற்றும் பயனிலர் என்பது கருத்து. 728.

729. கல்லா தவரில் கடைஎன்ப கற்றுஅறிந்தும்
நல்லார் அவையஞ்சு வார்.

பல நூல்களைக் கற்றும் கற்றதன் பயன் தெரிந்திருந்தும் தாம் கற்றதை நல்லவர் அவையில் சொல்ல அஞ்சுபவர்கள் கல்லாதவர்களினும் கடையராகக் கருதப்படுவார்கள்.

கற்றும் சொல்லத் தெரியாதவர்களால் யாதொரு பயனுமில்லை யாதலால் கல்லாதாரோடொப்பர் என்பது கருத்து. 729.

730. உளர்எனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.

அவைக் களத்தைக் கண்டஞ்சித் தான் கற்றவற்றை அவையில் உள்ளோர் மனம்கொள்ளச் சொல்ல இயலாதவர் அவர் வாழும் பொழுதே பயனின்மையின் காரணமாக இறந்தவர் என்று கருதப்படுவாரோடு ஒக்க எண்ணப்படுவர்.

பயனுடையராக வாழ்தலே வாழ்க்கை என்ற கோட்பாட்டை வலியுறுத்த "உளரெனினும் இல்லாரொடு ஒப்பர்" என்றார். 730.

## 74. நாடு

மாந்தர்தம் வாழ்வியல் நாட்டில் நடைபெறுவதால் நாட்டின் இயல்புணர்த்தும் அதிகாரம் இது. நாடு என்று எடுத்துக் கொண்டபோதிலும் இயற்கை அமைவுகள் மட்டுமின்றி நாட்டில் வாழும் மக்களின் இயல்தபுகளும் எடுத்துக் கூறப்பெறுகின்றன அரசர் மக்களின் தனித்தனிஇயல்புகள் உணர்த்தியபின் நாட்டின் பொது இயல்புகளை எடுத்துக் கூறுகிறார்.

731. தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு.

தப்பாமல் விளையும் நிலங்களும் அறவோரும் கேடில்லாத செல்வரும் ஒருங்கே சேர்வது நாடு.

எக்காலத்திலும் யாதானும் ஒரு விளைபொருளைப் பிழையின்றித் தரும் நிலம்' தள்ளா விளையுள்' என்றார். மற்றவர்களைத் தாழ்த்தி வரும் செல்வம் பழிக்கப்படும். சுரண்டப்படுபவர் விழித்துக் கொள்ளும்பொழுது செல்வம் குறையும் என்பதனை விளக்கத் "தாழ்விலாச் செல்வர்" என்றார். செல்வம் ஈட்டலில் ஒருவருக்கு மேற்பட்டவர்கள் பங்கும் இருக்கிறது. ஈட்டிய செல்வம் பகிர்வில் துலாக்கோல் போல மற்றவர் வாழ்வு தாழாமல் சமநிலையில் இருத்தல் தாழ்விலாச் செல்வத்தின் தன்மை என்றும் பொருள் கொள்ளலாம்.

"தள்ளாவிளையுள்" என்றதால் பழுதுபடாமல் விளையத்தக்க நல்ல வளமான நிலம் என்றுணர்த்தியது. 731.

732. பெரும்பொருளான் பெட்டக்க தாகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு.

அளவிறந்த பொருள்கள் விளைவதாகவும் பலராலும் விரும்பப்படுவதாகவும் கேடுகளால் பாதிப்பு ஏற்படாமல் விளைவதாகவும் விளங்குவதே நாடு.

விளையுளுக்கு வருங்கேடு; நிலத்தின் தன்மை, பயிர்நிலையில் வருங்கேடு, பூச்சி நோய் போன்றவை அறிவியல் சார்ந்த வேளாண்மைக் கருத்து இது. 732.

733. பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு
இறைஒருங்கு நேர்வது நாடு.

பொறுத்தற்கரிய பொறுப்புக்கள் வந்தாலும் அவற்றைத் தாங்கிக் கொண்டு அரசுக்குரிய வரியை ஒருமுகமாகத் தரும் இயல்புடைய குடிமக்களையுடைய நாடே நாடு.

"பொறையொருங்கு மேல்வருங்கால்" என்றது தனது குடும்பப் பொறுப்பு மிக்குடையதேயாயினும் அரசுக்குரிய வரியைத் தருவது சிறப்பு என்றுணர்த்தியது.

"பொறையொருங்கு மேல்வருங்கால்" என்பதை அரசுக்குரியதாக்கி, அரசுக்குப் பெரும் பொறுப்புக்கள் வரும்போது அவற்றைத் தாங்கமுடியாமல் அரசு நிலை தவறிவிடாமல் அரசுக்குரிய வரியைத் தவறாமல் விருப்பத்துடன் தரும் குடிமக்களையுடைய நாடே நாடு என்றும் கூறலாம்.

இன்று நமது நாட்டில் வரி ஏய்ப்பும் பெருமைக்குரியதாக விளங்குகிறது 733.

734. உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு.

உறுத்தித் துன்பத்தைத் தரும் பசியும், நீங்காப் பிணியும் குடிமக்களிடையில் செறுத்தழிக்கும் பகையும் இல்லாதபடி அமைவதே நாடு.

பசி. இடையறாது உறுத்தலின் 'உறுபசி' என்றார்.

மருத்துவம் முதலியவற்றால் நீங்காத பிணியை 'ஓவாப்பிணி' என்றார். தொழுநோயும் ஆஸ்துமாவும் குறிப்பிட்ட நோய்கள்.

குடிமக்கள் தங்களுக்குள் இணைந்து ஒற்றுமையாக வாழாது வன்கண்மையான நிலையில் பகைத்து வாழ்வார்களானால் நாட்டின் பொருள் உற்பத்தி பாதிக்கும். அரசின் காவற்பணிகளும் கூடும். ஆதலால் செறுபகையைத் தவிர்க்கும்படி கூறினார். 734.

735. பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்துஅலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு.

நாட்டில் பல குழுக்களும், பாழ் செய்யும் உட்பகையும் இவை காரணமாக ஆட்சிக்கு இடையூறு செய்யும் கொலைத் தன்மை மிக்க குறும்புடையவர்களும் இல்லாமல் அமைவது நாடு.

சாதி, மதங்களால் ஏற்படும் பல குழுக்கள் என்பார் பரிமேலழகர். இன்று ஒரே சாதி, மதத்திற்குள்ளேயும் கூடக் குழுக்கள் தோன்றிவிட்டன. 735.

736. கேடுஅறியாக் கெட்ட இடத்தும் வளம்குன்றா
நாடென்ப நாட்டின் தலை.

எந்தவிதக் கேட்டினையும் அறியாததாய், ஒரோவழி கெட்டாலும் வளங்குன்றாததாய் உள்ள நாடே நாடுகளுக்குள் சிறந்தது என்பர்.

நாட்டிற்குக் கேடு, இயற்கை மாறுபாட்டால் வரும் அழிவுகள், வெள்ளத்தால் ஏற்படும் அழிவுகள், வறட்சியால் ஏற்படும் பாதிப்புகள் குறிப்பிடத்தக்கவை. இவற்றால் ஏற்பட்ட பாதிப்புக்களின் சுவடே தெரியாமல் மறுமுயற்சி செய்து வளத்தைப் படைக்கும் மக்கள் வாழும் நாடு என்பதறிக.

இரண்டாவது கேடு, பகைவரால் வரும் கேடு. பகைவர்களின் படையெடுப்பால் அழிவது. உழைப்புடைய மக்கள் வாழும் நாட்டில் அழிவை ஈடுகட்டி வளத்தைப் படைத்துவிடுவர்.

இரண்டாவது உலகப் பெரும்போரில் அழிந்த செருமனி வளர்ந்துள்ள நிலையை அறிக. இயற்கை முற்றிலும் ஒவ்வாத இசுரேல் நாட்டின் முன்னேற்றத்தை ஓர்க. 736.

737. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு.

இருவகைப்பட்ட தண்ணீரும் வாய்த்த மலையும் ஊற்றுகளும் ஆறுகளும் வலிமையுடையதாகிய அரணும் நாட்டிற்கு உறுப்பு.

இருபுனல்- ஏரிகளின் நீர்ப்பரப்பும் நிலத்தடி நீருமாகும். 'மலை' இயற்கை வளத்திற்குத் துணை செய்வது. 'வாய்ந்தமலை' என்றார். மலை எப்படி வாய்ந்திருந்தாலும் மலையைப் பசுமையாக வைத்திருப்பது மக்களின் பொறுப்பு.

வருபுனல்-மழைநீர்; மலைகளிலிருந்து வற்றாது வரும் ஆற்று நீர், ஊற்று நீர் ஆகியன வருபுனல்.

ஏரிகளில் நீரைப் பராமரிப்பதும் நிலத்தடி நீரைப் பராமரிப்பதும் இணைந்த பணி. 737.

738. பிணியின்மை செல்வம் விளைவுஇன்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்குஇவ் வைந்து.

பிணியின்மை, செல்வமுடைமை, நுகர்பொருள்களின் விளைவு ,அதனால் உளதாகும் மகிழ்வு, செல்வத்தைக் காக்கும் பணிக்குத் துணையாயமையும் காவல் இவை ஐந்தும் நாட்டிற்கு அணிகளாகும்.

செல்வம்- பின்னே குறிப்பிடப்படும் விளைவுப் பொருள்களை நீக்கிய அனைத்துப் பொருள்களும் செல்வம் ஆகும்.

விளைவின்பம்- நுகர்பொருள்கள். அழியும் தன்மையினின்று விலகிய முத்து முதலியன செல்வங்கள். நுகர்பொருள்கள் விளைவு ஆகியன மிகுந்தாலும் சிறந்த காவல் இல்லாமல் போயின் பயனற்றுப் போகும் என்பதால் காவலையும் அணியெனச் சேர்த்துக் கூறினார். 738.

739. நாடுஎன்ப நாடா வளத்தன நாடுஅல்ல
நாட வளந்தரு நாடு.

நாடு என்று சிறப்பித்துக் கூறப் பெறுவது மக்களின் முயற்சியின்றியே வளமுடையதாக இருப்பது. மக்களுடைய முயற்சியின் பயனாக வளம் தருவது நாடல்ல.

"நாடா வளத்தன" என்றது "உழவர் உழாதன நான்கு பயனுடைத்து" என்பது போல இயற்கையாக அமைந்த வளம். இது நாடு தழுவிய நிலையில் அமைவது. 739.

740. ஆங்கமைவு எய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

எல்லாவிதமான வளமும் வசதிகளும் அமைந்த நாடாயினும் நல்லரசு அமையாது போனால் பயனில்லை.

"காவல்" இன்மையால் கெடும் என்பதால் வேந்தமைவு இல்லாத நாடு என்றார்.

ஆனால், மார்க்ஸ் 'அரசு இல்லாத சமுதாயம் பொதுவுடைமைச் சமுதாயத்தின் இலக்கணம்' என்று கூறுகின்றார்.

ஒவ்வொருவரும் தன்னைத்தான் கொண்டொழுகின் காவல எதற்கு? 740.

## 75. அரண்

நாட்டினைப் புறப்பகையினின்று காக்க உதவி செய்தல் அரண். அரணின் இலக்கணமும் இயல்பும் விரித்துரைப்பது இந்த அதிகாரம்.

741. ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

பிறர்மேல் படையெடுத்துச் செல்லும் அரசுகளும் அரண் பொருள் அச்சத்தின் காரணமாகப் பிறர்மேல் செல்லாது டதன்னைத்தானே காத்துக் கொள்பவர்களுக்கும் அரண் பொருளேயாம்.

742. மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடும் உடைய தரண்.

முத்து, மணி இவைகளின் நிறத்தை உடைய நீரும், மணல் வெளியும் மலையும் அடர்த்தியான நிழல் தரும் காடும் முறையாக அமைந்தது அரண். (கோட்டை).

மணி, முத்து நிறமுள்ள தண்ணீர் தூய்மையாக இருக்கும். தூய்மையாக இருப்பதால் தரைமட்டம் அண்மையில் இருப்பது போலத் தெரியும்.

ஆழம் மிகுதியாயிருக்கும் - ஆனால் ஆழம் குறைவானது போலத் தரை தெரியும். 742.

743. உயர்வகலந் திண்மை அருமையிந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல்.

கோட்டைச் சுவர் உயரம் அகலம் உறுதி அணுகுவதற்கு அருமை என இந்நான்குடையதாய் அமைவது அரண் என்று நூல்கள் கூறும்.

'உயரம்' - ஏணி வைத்து ஏற இயலாது. 'அகலம்' - எளிதில் கடத்தலோ சுரங்கப்பாதை அமைத்தலோ இயலாது. 'திண்மை'- எளிதில் இடிபடாத் தன்மை. 'அருமை'- தோற்றத்தாலேயே அச்சுறுத்தும் தன்மையது. 743.

744. சிறுகாப்பிற் பேரிடத்த தாகி உறுபகை
ஊக்கம் அழிப்ப தரண்

சிறிய முயற்சியினாலேயே காப்பதற்குரியதாய், அகன்ற இடத்தையுடையதாய் அமைந்து, வந்து தாக்கும் பகைவருடைய மனவெழுச்சியைக் கெடுப்பதே அரண்.

பெரிய முயற்சிகள் இல்லாமல் சிறிய முயற்சிகளாலேயே காக்கப்படுவது சிறந்த அரண். 744.

745. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்
நிலைக்கெளிதாம் நீர தரண்.

பகைவர் எளிதிற் பிடிக்க இயலாததாகவும், தேவையான உணவுப் பண்டங்களைக் கொண்டதாகவும் கோட்டைக்குள் இருப்பவர்கள் எளிதில் வெற்றி பெறத்தக்கதாகவும் அமைவது அரண். 745.

746. எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துதவும்
நல்லா ளுடைய தரண்.

கோட்டைக்குள் இருந்து போராடுவோருக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் உடையதாய, பகைவர்க்கு இடங்கொடாத நல்ல படை வீரர்களை உடையதாகவும் இருப்பதே அரண். 746.

747. முற்றியும் முற்றா தெறிந்தும் அறைப்படுத்தும்
பற்றற்கு அரியது அரண்.

அரணுக்குள் இருப்பார் வெளியே போகாமல் பாதுகாத்துக் கொள்ளத்தக்கவாகவும் ஒரேவழியில் அரணைத் திறந்து அரணை முற்றுகை செய்துள்ளோரிடம் போர் செய்யும் வசதியுள்ளதாகவும், பகைவரால் எளிதில் கையகப்படுத்தமுடியாததாகவும் அமைந்தது அரண்.

அகத்திருப்போர் வெளியே போதல் போர்ச் சூழ்ச்சிகளுக்கு இடையூறு விளைவிக்கும். 747.

748. முற்றுஆற்றி முற்றி யவரையும் பற்றுஆற்றிப்
பற்றியார் வெல்வது அரண்.

அரணின் அகத்திலிருப்போரைப் பாதுகாத்தும், தம் அரணை முற்றுகை செய்திருப்பவர்களையும் அரணைப் பிடிக்க முடியும் என்ற ஆசையை விடும்படியாகத் தாக்கித் துன்புறுத்தி வெல்வதற்குத் துணையாய் அமைவது அரண்.

முற்றுகை செய்தவர் பிடித்தல் அருமை கருதி ஆசையை விடுதல் - பற்றாற்றுதல். 748.

749. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறுஎய்தி மாண்டது அரண்.

அரண் அகத்தார் வெற்றி கருதிச் செய்யும் முயற்சிகளுக்குத் துணையாய் அமைந்து போர்முனையில் பகைவரைத் தோற்றோடச் செய்து, நிமிர்ந்து புகழுடன் நிற்பது அரண்.

அகத்தார் செய்யும் முயற்சியும் பகைவர் வீழ்தலும் ஒன்றோடொன்று தொடர்புடையது.

இந்தக் குறள் அரணுக்குச் சொன்னாலும் தோழமைக்கும் கூட இத்தகைய பண்பு அமைந்திருந்தால் நல்லது. 749.

750. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்கண் இல்ல தரண்.

எத்தகைய மாட்சிமையுடைய அரண் இருந்தாலும் செயல்திறன் இல்லாதார்மாட்டு அரண் பயனிலாமல் போகிறது.

எந்த வகையான மாட்சிமைக்கும் செயல்மாட்சியே அடிப்படை. 750.

## 76. பொருள் செயல்வகை

உலக இயக்கம் உணவினாலும் மற்ற நுகர் பொருள்களாலும் ஆயது. மானுடம் உண்டு, உடுத்து, நுகர்ந்து வாழ்தலுக்குரிய பொருள்களைப் படைத்தல் பொருள் செய்தலாகும்.

751. பொருள்அல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருள்அல்லது இல்லை பொருள்.

பொருள் போலக் கருதிப் பேணத்தக்க தகுதி பல இல்லாதாரையும் பொருள் போலப் பெருமைப்படுத்தி உயர்த்தும் பொருளைவிடச் சிறந்த பொருள் வேறு ஒன்றும் இல்லை.

தரமான நுகர்வால் வளமும் வலிமையும் நிறைந்த வாழ்வு அமைவதால் "பொருள்" ஆகி விடுகிறது.

752. இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு.

எவ்வளவு பெருமைக்குரியராக இருந்தாலும் பொருள் வளம் இல்லாதவரை எல்லோருமே இகழ்ச்சி செய்வர். எவ்விதத் தகுதியும் இல்லாதவர் எனினும் பொருள் வளம் பெற்றிருப்பவரை எல்லாரும் சிறப்புச் செய்வர்.

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் - இந்த நடைமுறையில் பிழையில்லை. தகுதி பல உடையான் இல்லாதவன் ஆனது எப்படி?

செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு - என்பது அறிவுக்கு முரண்பட்ட நிலை. இங்ஙனம் செல்வர் சிறப்பிக்கப்படுதல் முறையன்று. ''பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள'' என்னும் குறளினை அறிக. 752.

753. பொருள்என்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று.

பொருள் என்று போற்றப் பெறும் அணையா விளக்கு எண்ணிய தேசம்தோறும் சென்று பகையை மாற்றும் .

பொருள் -திசைதோறும் அறிமுகப்படுத்தி வளர்க்கும் சாதனம் என்றும் கொள்ளலாம். 753.

754. அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறன்அறிந்து
தீதுஇன்றி வந்த பொருள்.

ஒருவன் தீவினையை விட்டு ஈட்டிய பொருள் அவனுக்கு அறத்தினையும் கொடுக்கும்; இன்பத்தினையும் கொடுக்கும்.

திறனறிந்து தீதின்றி வந்த பொருள் - உழைப்பறிந்து உழைப்பின் வாயிலாக சுரண்டப்படும் தீமையின்றி வந்த பொருள் என்ற கருத்தாகக் கொள்ளலாம்.

''தீதின்றி வந்த பொருள்'' பிறர் பங்கைத் திருடியதால் வந்ததல்ல; அழக்கொண்டதுமல்ல. 754.

755. அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

பகைப் புலத்து மக்களிடம் காட்டும் அருளொடும், தன் நாட்டு மக்களிடம் காட்டும் அன்பொடும் வராத பொருளாக்கத்தை நல்ல அரசர்கள் ஏற்க மாட்டார்கள்; கைவிட்டு விடுவார்கள்.

''அருளொடும்'' என்பதற்குத் தம் குடிமக்களிடத்துச் செய்யும் அருளொடும் என்று பொருள் கூறுவர். தொடர்பிலார் மாட்டு நிகழ்வதே அருள். தன் நாட்டு மக்களைத் தொடர்பிலாதவர் என்று கூறமுடியாது. ஆதலால் பகைப் புலத்து மக்களிடம் காட்டும் அருள் என்று கூறுவது பொருத்தமாகும். பகைப்புலத்து மக்களிடம் கொஞ்சமும் இரக்கமின்றி வீடழித்தல், உழுது வெள்ளெருக்கு விதைத்தல்போன்ற கொடுஞ்செயல்கள் நடந்துள்ளன என்பதை வரலாற்றில் அறிக.

''வாராப் பொருளாக்கம்''- என்றதால் அரசரின் படை வீரர்கள் ஊக்கமிகுதியால் தீயவழிகளில் பொருள் ஈட்டிக்கொண்டு வருவதை ஏற்கார் என்று பொருள் கொள்ளப் பெற்றது. 755.

756. உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.

யாரொருவர் உரிமை கொண்டாடாமல் வந்து சேரும் பொருளும், சுங்கம் , தண்டம் வழிவரும் பொருளும் அரசுக்குரிய பொருள்கள் .

வழியுரிமையுடையோர் இல்லாமை வழி கிடைக்கும் பொருள், உறுபொருள்.

வர்த்தகத்தில் உள்நாட்டு - வெளிநாட்டு வர்த்தகத்திற்குத் தண்டல் செய்யப்படுவது சுங்கவரி -ஆயம் என்று கூறுவர்.

இன்று உள்நாட்டில் பயன்படும் பொருளுக்கும் கூடச் சுங்கம் இருக்கிறது. 756.

757. அருள்என்னும் அன்புஈன் குழவி பொருள்என்னும்
செல்வச் செவிலியால் உண்டு.

அன்பு என்று சொல்லப் பெறும் தாய் பெற்ற அருள் என்னும் பிள்ளை பொருள் என்னும் செவிலியால் வளர்க்கப்படும்.

உயிர்கள் மாட்டு நிகழும் உணர்வே அருள். இந்த அருள் செயற்பாட்டுக்கு வரவேண்டுமாயின் பொருள் வேண்டும்.

பொருளுடைமையைப் போற்றினால்தான் அன்பும் அருளும் பயன்படும். 757.

758. குன்றுஏறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்துஒன்று
உண்டாகச் செய்வான் வினை.

குன்றின் உச்சியில் ஏறிப் பத்திரமாக நின்று கொண்டு யானைகளின் போரைப் பார்ப்பது போன்றது தன்கையில் பொருள் உண்டாகுமாறு செயல் செய்வானது வேலை.

யானைப் போரைத் தரையில் நின்று பார்த்தால் அச்சம் தோன்றலாம். போரிடும் யானைகள் தறி கெட்டு ஓடுவதால் தீமை விளையும் . ஆதலால் மலையில் ஏறி யானைப் போர் பார்ப்பது தற்காப்பு ஆகும். தற்சார்பான பொருள்நிலை உருவாக்கிக் கொள்ளும் வகையில் தொழில் செய்வது பாதுகாப்பான வாழ்க்கை முறை. அதாவது தற்சார்பான பொருளியல் என்பது கருத்து. 758.

759. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகுஅதனின் கூரியது இல்.

பொருளைச் செய்க. பகைவரின் செருக்கை அறுப்பதில் பொருளினும் கூரிய படைக்கலம் யாதும் இல்லை.

'பொருள்'- நுகர்பொருள்களாகும்.

உணவுப்பொருள்களில் தன்னிறைவு பெற்ற நாடு, பகைவரால் அழிக்கப் பெற முடியாது. இது பழைய கருத்து. இது ஏவுகணை யுகம். 759.

760. ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு.

பயன்படுபொருளை மிகுதியும் தேடிச் சேர்த்தவருக்கு மற்று அடைய வேண்டிய பொருள்கள் இரண்டும் ஒருங்கே வந்து சேரும்.

மற்று இரண்டாவன அறமும் இன்பமுமாம். 760.

## 77. படைமாட்சி

நாட்டினை உள்நாட்டுக் கலகங்களிலிருந்தும், வெளிநாடுகளிலிருந்து வரும் படையெடுப்புக்களிலிருந்தும் பாதுகாத்துக் கொள்ள மாட்சிமைப்பட்ட படை தேவை.

761. உறுப்புஅமைந்து ஊறுஅஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையுள் எல்லாம் தலை.

மாட்சிமைக்குரிய உறுப்புக்களுடன் அமைந்து துன்பம் உறுதலுக்கு அஞ்சாது விளங்கி வெல்லும் படை, அரசனின் செல்வங்களுள் எல்லாம் தலையானது.

படையின் உறுப்புக்கள்: காலாட்படை, யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை ஆகியன.

இன்று விமானப்படை, கப்பற்படை ஆகியவற்றையும் சேர்த்துப் பொருள் கொள்ளலாம்.

போர் வீரன் வாழ்வு என்பது துன்பத்தை எதிர் கொள்வதேயாம். ஆதலால், ''ஊறுஞ்சாது'' என்றார்.

செல்வத்தையும் ஆதிபத்தியத்தையும் காப்பாற்றினாலே நாடாள்பவர் என்ற தகுதி நிலைப்படும். ஆதலால் தலையாய செல்வம் என்றார்.

762. உலைவிடத்து ஊறுஅஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக்கு அல்லால் அரிது.

அரசனுக்குத் தோல்வி வரக்கூடிய தருணத்திலும் துன்பத்திற்கு அஞ்சாது, போரின்கண் நின்று போரிடும் இயல்பு, பழைமையான படைகளுக்கே உரியது. 761.

'பழைமை' காரணமாக நன்றிக் கடப்பாட்டுணர்வுடன் மரணத்தறுவாயிலும் நின்று போரிடுவர் என்பது கருத்து.

பலகால் பழகுதல், உறவினைக் கால் கொள்ளச் செய்கிறது. 762.

763. ஒலித்தக்கால் என்ஆம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்.

எலிகள் படைபோலத் திரண்டு நாகத்தின் முன் ஒலித்து என்னாவது? நாகம் மூச்சுவிட்டாலே எலிப்படை கெடும்.

கூட்டம் மட்டும் பயனில்லை. வலிமை தேவை என்பது கருத்து. 763.

764. அழிவுஇன்று அறைபோகாது ஆகி வழிவந்த
வன்கண் அதுவே படை

அரசனுக்கு, அழிவு வந்தபோது தோற்று ஓடாது பகைவரால் அழிக்கப்படாது, தூய வழி வந்த பேராண்மையை உடையதே படை.

'துன்பத்தின் கண்ணும் அழிவின்கண்ணும் துணை நிற்பதே அறம், மரபு. 764

765. கூற்றுஉடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்றல் அதுவே படை.

கூற்றுவனே வெகுண்டு மேலெதிர்ந்து வந்தாலும் அஞ்சாமல் கூடி எதிர்நின்று போர் செய்யும் ஆற்றலுடையதே படை.

மரணத்திலும் கொடிய துன்பம் ஒன்றும் இல்லை. அதற்கு அஞ்சாது நிற்பதே வீரம் என்பதுணர்த்தியது. 765.

766. மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு.

அசைவிலா வீரமும் மானம் போற்றும் வீரமும், பிணங்கள் மீதும் நடந்து போரிடும் துணிவும், அரசரால் தேற்றப்படுதலும் ஆகிய நான்கும் படைக்கு அரணாகும். வெற்றிகளைப் பெற்றுப் பெருமையைக் காப்பாற்றிக் கொள்வதை மானம் என்றார். போர்க்களத்தில் துன்பத்தில் தல்லப்படுபவர்கள் தங்களைத்தங்களே தேற்றிக் கொள்ளாதவாறு, அரசன் தேற்றவேண்டும். 766.

767. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்கும் தன்மை அறிந்து.

தம்மேல் வந்த பகையினை விலக்கி மேற்செல்லும் தன்மையறிந்து தார்மாலை தாங்கி மேற்செல்வது தானைத் தலைவனின் கடமை.

தன்னுடைய நாட்டின் மாலை தாழாது தாங்கித் தம்மேல் வந்த பகையைத் தாங்கி வெற்றி கொண்டு மேற்செல்வது தானைத் தலைவனின் கடமை என்றும் பொருள் கொள்ளலாம். 767.

768. அடல்தகையும் ஆற்றலும் இல்எனினும் தானை
படைத்தகையால் பாடு பெறும்.

பகை மேற்செல்லும் ஆற்றலும் பகை தம்மேல் வரும்பொழுது பொறுத்திடும் தகுதியும் இல்லையானாலும் தம் படைத் தோற்றத்தாலேயே மாற்றாரின் பகைப்படை படும்.

எடுப்பான தோற்றமும் அணிவகுப்பும் பகையை அச்சுறுத்தி வெற்றிகொளத் துணை செய்யும். 768.

769. சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்
இல்லாயின் வெல்லும் படை.

படைக்குச் சின்னப் புத்தியும், நீங்காத பிணக்கும், வறுமையும் இல்லையாயின் அப்படை பகைப்படையை வெல்லும்.

'சின்னப்புத்தி' பிணக்குகளுக்குக் காரணம். விரிவான மனப்பான்மையில்லை யெனில் தோன்றிய பிணக்கு அகலுவதில்லை. இதனால் படைக்குள்ளேயே கழுத்தறுப்புக்கள் நிலவவும், தோற்கவும் வாய்ப்புண்டு.

'வறுமை' நின்றழிக்கும் நோய். வறுமை எந்த ஒரு பெரிய காரியத்தையும் செய்யவிடாது. ஆதலால் படை வறுமையால் தோற்கும். 769.

770. நிலைமக்கள் சால உடைத்துஎனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல்.

போரின்கண் நின்று போராடக் கூடிய வீரர் மிகப்பலரைப் பெற்றிருந்தாலும் போரினை வழி நடத்தும் தலைவன் இல்லாதபோது பயனில்லை.

போர்க்குணம் வேறு, வழிநடத்தும் திறன் வேறு என்றவாறு. 770.

## 78. படைச் செருக்கு

படையின் ஆற்றலையும் செயற்பாட்டுத் திறனையும் எடுத்துக் கூறுவது. அதாவது, ஆற்றல் மிக்குடைய படை உடையோம் யாம் என்னும் குணம் ஈண்டுச் செருக்கு என்று கூறப்பட்டது.

771. என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று கல்நின்ற வர்.

என்னுடைய தலைவனாகிய அரசன் முன்னே நிற்காதீர்! நின்றால், என் அரசன் முன் நின்று நடுகல் ஆனவர் நிலையினை அறிக.

'நடுகல்' வீரர்கள் நினைவுச் சின்னம். 771.

772. கானமுயல் எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது.

காட்டினுள் முயலினைக் குறிவைத்து எய்த அம்பைத் தாங்குவதை விட, யானையைக் குறிவைத்துத் தவறிய அம்பைத் தாங்குதல் இனிது.

எல்லாரும் எளிதாக அடையக் கூடிய ஒன்றைக் குறிக்கோளாகக் கொள்ளுதலைவிட உயர்ந்த குறிக்கோளைக் கொள்ளவேண்டும் என்பதை மற்றவர் விரும்பவும் இயலாத யானையைக் குறிவைக்கும் என்பதனால் உணர்த்தியது. 772.

773. பேராண்மை என்ப தறுகண்ஒன்று உற்றக்கால்
ஊராண்மை மற்றுஅதன் எஃகு.

பகைவர்மேல் தொடுத்த போரைக் கண்ணோட்டமின்றிச் செய்தல் பேராண்மை. அதேபோழ்து அப்பகைவர்க்கு இடர்ப்பாடு வந்தக்கால் அப்பகைவருக்கும் உதவி செய்தல் ஊராண்மையாகும். இந்த 'ஊராண்மை' எஃகு போல் வலிவுடையதாகும்.

பகைவர்க்கு உதவி செய்தல் அஞ்சியன்று என்பதனை உணர்த்த 'ஊராண்மை' யென்றும் 'எஃகு' என்றும் கூறினார். 773.

774. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

தான் எறிந்த வேல் களிற்றினைக் குத்தி அவ்வேலைக் களிற்றோடு போக்கி வரும் வீரன் தன் உடம்பில் பாய்ந்துள்ள வேலைப் புன்சிரிப்புடன் பறிப்பான்.

தன் உடம்பில் பதிந்த வேல் தந்த துன்பம் அறியாது, பதிந்த அந்த வேலொடு போர் செய்துள்ளான் என்பதும் ''உயர்ந்த வீரத்திற்குத் துன்பமும் சாவும் இல்லை'' என்பதும் உணர்த்தியவாறு. 774.

775. விழித்தகண் வேல்கொண்டு எறிய அழித்துஇமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு.

பகைவன் வெகுண்டவுடன் பகைவன் மேல் வேலை எறியாமல் கண் இமைத்துப் பார்த்துப் பின் பகைவன்மேல் வேல் எறிதல் புறங்கொடுத்தலுக்கு நேர்.

பொதுவாக, 'இமைத்தல்' அச்சத்தின் அடையாளம். ஆதலால் புறங்கொடுத்தலுக்குச் சமம் என்றார்.

'துடிப்புள்ள வீர'த்திற்கு எடுத்துக்காட்டு. 775.

776. விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து.

தனது வாழ்நாளில் விழுப்புண்படாது கழிந்த நாள்களைப் பயன்படாத (வாழாத)நாள்களாக வீரர்கள் எண்ணுவர்.

இந்த நூற்றாண்டுக்கு, சாதனை இல்லாத நாள்களும் பயன்படாத நாள்கள் போலவாம்.

வாழ்தல் - பயன்தரத்தக்கவாறு வாழ்தல் என்பதேயாம். 776.

777. சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
சுழல்யாப்புக் காரிகை நீர்த்து.

இந்த மண்ணில் ஒருவரிடத்தில் நில்லாது சுழன்று கொண்டிருக்கும் தன்மையுள்ள புகழை விரும்பி, துறக்கத்திற்குரிய சாதனைகளைச் செய்யத் தவறும் வீரர்கள் கட்டிய வீரக்கழல் அலங்கார ஆபரணத் தன்மைத்தேயாம்.

''சுழலும் இசை'' என்பது இந்த மண்ணில் பெறும் புகழ் நிலையானதல்ல என்று உணர்த்தியது. 777.

778. உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்
செறினும்சீர் குன்றல் இலர்.

மரணத்திற்கு அஞ்சிப் போர்க்களத்திற்குச் செல்லத் தயங்காதவர்கள் மறவர்கள். அவர்கள் தம் தலைவன் வெகுண்டாலும் தம் இயல்பில் குறையமாட்டார்கள்.

தலைவனுக்கு வெகுளி வருதலுக்குரிய வாயில்கள் பலப்பல. தலைவன் வெகுண்டான் எனக்கூறித் தம் நிலையில் திரிதல் மறவர்களுக்கு இயல்பன்று. 778.

779. இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே
பிழைத்தது ஒறுக்கிற் பவர்.

எண்ணிச் சூளுரைத்ததைச் செய்து முடிக்காமல் இறந்துபடுவோரை யார்தான் ஒறுத்தல் செய்ய இயலும்.

''எண்ணியன முடித்தற்குரியவாறு உடல் உறுதியும் உள்ளத்து உறுதியும் பேணப்படுதல் வேண்டும்'' என்பது கருத்து.'எண்ணியது முடிக்காமல் சாவோர்'கணக்கில் இருப்பர்அல்லர். அதனால் ஒறுத்தலும் இல்லை.

'சாவாரை' என்றாலும் எண்ணியவற்றைச் செய்து முடிப்பதில் உள்ள இடர்ப்பாடுகளுக்கு அஞ்சிச் செய்யாமல் விடுவாரைச்'' 'செத்தார்' என்றே கருதுதல் வேண்டும் என்று உணர்த்தியது அறிவு. 779.

780. புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்து கோள் தக்கது உடைத்து.

தம்மை வளர்த்து ஆளாக்கியவர் கண்ணீர் மல்கி நிற்கும் வண்ணம் அவருக்கு முன்னே அவருக்காகச் சாகும் சாக்காடு இரந்தும் பெறத் தகுதியுடைய சாக்காடு ஆகும்.

தம்மை வளர்த்து ஆளாக்கியவர் கண்ணீர் செத்தாரின் தகுதியை உணர்த்துவது.

தம்மை வளர்த்து ஆளாக்குவோருக்காக உயிர் கொடுத்து அவரைக் (புரவலரை) காப்பாற்றாமல் சாகவிட்டால் இவரைப் பின் யார் புரந்து காப்பாற்றுவார் என்பதுணர்த்திற்று. 780.

## 79. நட்பு

இருவரும் ஒத்த உரிமைகளும் நலன்களும் உடையராக இடையறாத அன்பு பூண்டொழுகல் நட்பு. நட்பு மானிட வாழ்க்கையின் இன்றியமையாத்தேவை. காதல் வாழ்வைத் துறந்து வாழ்தல் இயலும். நட்பின்றி வாழ்தல் இயலாது.

781. செயற்குஅரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்குஅரிய யாவுள காப்பு.

நட்புச் செய்து கொள்ளுதல் போல் செயற்கரிய செயல் யாதுளது? ஒருவர் செய்யும் காரியங்களுக்கு நட்பைப் போல் வேறு காப்பு ஏது?

அரியவற்றுள் அரியது சிறந்த நட்பைப் பெறுதல், நட்புச் செய்தல்.

ஒருவர் செய்யும் பணிகளுக்குப் பாதுகாப்பு தருபவர்கள், சிறந்த நண்பர்கள் என்பது கருத்து. 781.

782. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு.

நல்லவர்கள் நட்பு , பிறை நிலா வளர்ந்து முழுமையாதல் போன்ற தன்மையுடையது. அறிவில்லாதவர் நட்பு முழுநிலா தேய்தல் போன்ற

தன்மையுடையது.

நட்பு வளரும் தன்மையது என்று உணர்த்தியது .

குறைவுடைய மனிதர்கள் நல்ல நண்பர்கள் மூலம் குறைகள் நீங்கப் பெற்று நிறை நலம் பெறுவர் என்பது கருத்து. 782.

783. நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

மற்றவர்க்கு எடுத்துக் கூறும் பொழுதெல்லாம் நூல்களின் திறமும் இனிமையும் வெளிப்படுவது போல், பண்புடையார் தொடர்பு பழகுந்தொறும் இன்பம் மிகுவதாகும்.

நூற்பயிற்சியிலும், பழகும் நட்பிலும் இடையீடு இருத்தல் கூடாதென்பது உணர்த்தியது.

''நவில்தொறும்'' என்பதற்குப் பயில்தொறும் என்று பொருள் கூறுதல் தவறன்று. ஆனாலும் சிறப்பன்று. 783.

784. நகுதல் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தல் பொருட்டு.

ஒருவரோடொருவர் நகைத்து விளையாடுதல் பொருட்டல்ல, நட்புச் செய்தல். பழகும் நண்பர் பொருந்தாச் செய்கையில் ஈடுபடும்பொழுது இடித்துக் கூறித் திருத்துதலுக்கும் நட்பு பயன்பட வேண்டும். 784.

785. புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்.

ஒருவரோடொருவர் நட்பாயிருத்தலுக்கு நெருங்கியிருந்து உண்பதும் உரையாடலுமாகிய புணர்ச்சி வேண்டற்பாற்றன்று. அகநிலை உணர்வினாலேயே நட்பின் உரிமையை வளர்த்துப் பாதுகாக்க இயலும்.

உணர்ச்சி வழி நட்பைப் பாதுகாத்தல் முறைகளாவன:

நாள்தோறும் எண்ணுதல், எண்ணி மகிழ்தல், நல்லன நடக்க எண்ணுதல் ஆகியன. 785.

786. முகநக நட்பது நட்புஅன்று நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு.

கண்ட வழி முகமலர்ச்சியைக் காட்டுவது மட்டும் நட்பன்று. நெஞ்சத்தில் நினைத்து நட்புச் செய்தலே நட்பு.

முன்னே முகமன் காட்டியும், கூறியும் நெஞ்சத்தில் நினைவிலாது நட்புச் செய்தலே நட்பு.

சிலர் முகத்தின் முன்னே மலர்ச்சியையும், பின்னே இகழ்ச்சியையும் காட்டுவர். இவர்கள் நட்புக்கு ஆகார். 786.

787. அழிவின் அவைநீக்கி ஆறுஉய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு.

அழிவு தரும் செயல்கள் படரும் பொழுது அவற்றைத் தடுத்து நிறுத்தி விலக்கிப் பாதுகாத்தலும், மீண்டும் அழிவு வழியில் செல்லாதிருக்க நன்னெறியில் நடக்குமாறு செய்தலும், ஆளுமை எல்லைகளைக் கடந்து அழிவு வருமாயின் உடனிருந்து அனுபவித்தலும் நட்பின் இலக்கணம்.

''அழிவினவை நீக்கி'' என்பதற்குத் தாமே அழிவிலிருந்தும் பாதுகாத்தல் என்றும் கொள்ளலாம்.

நண்பன் அல்லலின் வயப்பட்டு உழல நேரின் அவனுடனேயே உழலுதல் நல்ல நட்பிற்குச் சான்று. 787.

788. உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.

இடையிலுள்ள ஆடை இழந்தபோது, கை உடன் அந்த ஆடையை எடுத்து தந்து உதவுவது போல, நண்பனின் துன்பங்களைக் களைவதே நட்பு.

''உடுக்கை இழந்தவன் கை போல'' என்றிருப்பதால் இடையில் உள்ள ஆடை கிழிந்து விழுந்து விட்டபோது கை, மெய்யது பொத்தி மானத்தைக் காப்பாற்றுதல் போல என்று கூறுவது சிறப்புடைய பொருளாகும். 788

789. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் கொட்ன்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.

நட்பிற்குரிய சிறப்பு யாதெனில், எஞ்ஞான்றும் மாறுபாடின்றி இயன்றவாறெல்லாம் அறம், பொருள், இன்பச் செயற்பாடுகளில் தளராமல் தாங்குதலாகும்.

''வீற்றிருக்கை'' வாழ்க்கையில் சிறந்ததோர் இடம். 789.

790. இனையர் இவரெமக்கு இன்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு.

அவர் நமக்கு இத்துணையன்பினர், யாம் இவர்கட்கு இன்ன தன்மையான நட்பியல்புடையேயாம் என்றெல்லாம் கூறினும் நட்பு அற்பமயமானதாகத் தோன்றும்.

நயந்து பயிலும் நட்புப் பாராட்டுதலை விரும்பாது பழகுதலே பெரும்பேறு.

திருக்குறள் விலக்கிய இந்த நட்பு முறையே இன்று பரவி வருகிறது. இதனால் நட்புக் கெடும்; பகைவர்கள் தோன்றுவர். 790.

## 80. நட்பாராய்தல்

முன்னர் நட்புக் கூறப்பெற்றது . வாழ்க்கைக்கு ஓர் உறுப்பாக அமைந்து வாழ்க்கை முழுதும் துணையாக அமையக்கூடிய நட்பினை நல்லவண்ணம் ஆராய்ந்து தேர்வு செய்ய வேண்டும் என்று அறிவுறுத்துவது எந்த அதிகாரத்தின் நோக்கம். நட்பாராய்தலுக்கு எடுத்துக்கொள்ள வேண்டியவை மரபுவழி வளர்ந்த முறை, வாழ்க்கை நடந்து வந்துள்ள முறைமை ஆகியனவாம். முன் யாருடனாவது நட்பு உள்ளவரா அல்லது நட்புச் செய்து பிரிந்து வந்துள்ளாரா? என்பன ஆய்வுக்குரியன.

முன் பல நட்புடையோராயின் தவிர்த்தல் நலம். ஏன்? ஒருவர் எத்தனை பேருக்கு நட்பாக அமைந்திருந்து நட்புச் செய்ய இயலும்? நட்புச் செய்து பிரிந்தவராக இருந்தால் இவருடைய நட்பு நிலையானதல்ல. ஆதலால் தவிர்த்திடுக, முன் நட்புச் செய்து பிரிந்து வந்து நண்பரைப் பற்றிப் பழி தூற்றிக் கேடு பல செய்பவரை எந்தக் காரணம் பற்றியும் நட்புக்குரியராக்கிக் கொள்ளுதல் வேண்டாம்.

791. நாடாது நட்டலின் கேடுஇல்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

ஒருவரின் நட்புக்குரிய தகுதிகள் பற்றி ஆய்ந்தறியாது நட்புக் கொள்வது போல் கேடு தருவது பிறிதொன்றில்லை. நட்புக் கொண்டபின் விடுதல் நட்பு ஆள்பவருக்கு இல்லை.

நட்புக் கொண்டபின் பிரிதல் கூடாது. ஆதலால் ஆய்ந்து தொடர்பு கொள்க என்று அறிவுறுத்துகிறார். ஒரோவழி கொண்ட நட்பு தகுதியில்லாமற் போனாலும் நண்பருக்குத் தகுதிகளை உருவாக்க முயற்சி செய்ய வேண்டுமேயன்றிப் பிரிதல் கூடாது.

கெட்ட நண்பர்கள் உடனிருந்து செய்யும் தீமையை விட அவரைப் பிரியின் கூடுதலாகத் தீமைசெய்வர் என்பதூஉம் அறிக. 791.

792. ஆய்ந்துஆய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாம் துயரம் தரும்.

பலவகையாலும் பன்முறையும் ஆய்வு செய்து கொள்ளாத நட்புறவு, கடைசி வரை சாதலுக்கு நிகரான துன்பத்தைத் தரும் .

குணம், கொள்கை ஆகியவற்றை ஒரு தடவைக்குப் பலதடவை ஆராய்ந்து நட்புக் கொள்ளாவிடின் வாழ்வின் கடைசி வரையில் சாதலை நிகர்த்த துன்பம் தரும் என்றுணர்த்தியது.

''கடைமுறை'' என்றதால் மாறமாட்டான் என்பது கருத்தாயின்

மானிடவியல் பற்றிய அறிவியல் வழி ஆய்வு செய்தலுக்குரியதேயாம். ஏன்? எல்லாம் மாற்றங்களுக்குரியது என்பது அறிவியல் நியதி. 792.

793. குணமும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்துயாக்க நட்பு.

நட்பாகக் கொள்ளக் கருதும் ஒருவனுடைய குணநலன்களையும், பிறந்த குடி மரபையும், குற்றங்களையும், குறைவற விளங்கும் சுற்றத்தினையும் ஆய்வு செய்து நட்பினை மேற்கொள்க.

''குறைவற்ற சுற்றம்'' உறவுகளைப் பேணும் இயல்பும் ஒப்புரவு உடையவரின் சுற்றம் எண்ணிக்கையிலும் வளத்திலும் குறைவற்றதாக அமையும். ஆதலின் அவர் நட்பியலுக்குத் தகுதியானவர் என்று உணர்த்தியவாறு. 793.

794. குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு.

நற்குடியில் பிறந்தவனாகவும் தன்னிடத்து யாதொரு பழிவருதலுக்கும் நாணமுடையவனாகவும் விளங்கும் ஒருவனை, சில பொருள் கொடுத்தேனும் நட்புக் கொள்ளுதல் வேண்டும். குடிப்பிறந்தோராகவும், பழிநாணுவோராகவும் விளங்குபவர் எளிதில் நட்புக்குரியராக மாட்டார் என்பது உண்மை. ''சில கொடுத்து'' என்றதால் நட்பு விலைப்பொருள் என்று கருதுதல் கூடாது என்பதனை உணர்த்த ''குடிப்பிறந்தார் பழிநாணுவர்'' என்றும் கூறி விட்டார். 794.

795. அழச்சொல்லி அல்லது இடித்து வழக்குஅறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல்.

நட்புக்கொண்டாரிடம் நெறிமுறையிகந்த செயல்களைக் கண்டபொழுது அழக்கூடிய அளவுக்கு இடித்துக் கூறி நெறிப்படுத்தும் வழக்கமும் வல்லாண்மையும் உடையார் நட்பைத் தேர்வு செய்து கொள்க.

நட்புறவால் அழச்செய்வதற்கும் பகைமையால் அழச்செய்வதற்கும் உரிய வேற்றுமை அறிக. 795.

796. கேட்டினும் உண்டுஓர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல்.

நட்பின் உறுதிப்பாட்டை அளந்தறிதலுக்கு ஒருவருக்கு வரும் கேட்டினைப் போல பிறிதொரு அளவுகோல் இல்லை.

வாழும் காலத்தும் அல்லற்படுங் காலத்தும் நிற்பார் நல்ல நண்பன். அல்லற்படும் காலத்து நீங்குபவர் நண்பரல்லர்.

797. ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல்.

அறிவில்லாதார் தீமை செய்தல் இயல்பு ஆதலின் நீங்கி விடுக என்றார். நட்பிலிருந்து நீங்கச் சொன்னாரே ஒழிய, பகைமை பாராட்டும்படி கூறவில்லை. நட்பிலிருந்து நீங்கும் வழி, அவர் பகைமை பாராட்ட வாய்ப்பில்லாமல் நடந்து கொள்வது அறிவுடைமை. 797.

798. உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க
அல்லல்கண் ஆற்றறுப்பார் நட்பு.

ஒருவர் தம்முடைய மன எழுச்சி குறைவதற்குரியனவற்றை நினையாதொழிக. அதுபோல் தாம் அல்லற்படும்பொழுது நீங்கிச் செல்லும் இயல்புடையாரின் நட்பையும் கொள்ளாதொழிக. உள்ளம் விரிவடைவதும் முழுமைத் தன்மையடைவதுமே வாழ்க்கையின் நோக்கம். ஆதலால் உள்ளத்தைச் சுருக்கி, சின்னப் புத்தியுடையோனாக்கும் செய்திகளை நினைத்தல் தவறு என்றுணர்த்தியது. 798.

799. கெடுங்காலைக் கைவிடுவர் கேண்மை அடும்காலை
உள்ளினும் உள்ளம் சுடும்.

பழகிய நண்பன் வாழ்நிலை கெட்டு அல்லலுறும் பொழுது அவனை விட்டு நீங்குபவனின் உறவினை காலன் வந்துறும் போது நினைப்பினும் சுடும். தீ நட்பின் கொடுமை-வலியுறுத்தியது. 799.

800. மருவுக மாசற்றார் கேண்மைஒன்று ஈத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு.

தூய்மையுடையோர் நட்பினை அடைக. தூய்மையில்லாதார் நட்பினை ஒன்று கொடுத்தும் விலக்கிக் கொள்க.

''ஒன்று ஈத்தும் ஒருவுக'' என்றதால் பொருள் இழப்பை விட ஆன்ம நல இழப்பு பெரிது என்று உணர்த்தியது . நல இழப்பு என்று உணர்த்தியது.
நல இழப்பு பெரிது என்று உணர்த்தியது. 800.

## 81.பழைமை

பழைமை-பழகிய நட்பினைப் பாராட்டிப் பாதுகாத்தல். நட்பு அதிகாரத்தைத் தொடர்ந்து 'பழைமை' வைத்ததன் நோக்கம் பழகிய நட்பை

உடம்பில் உயிர் போலப் பாதுகாத்தல் வேண்டும் என்றுணர்த்துவதற்காகும். நட்பு அதிகாரத்தில் கூறப்பெறும் செய்திகள் பழைமைஅதிகாரத்தில் கூறப் பெறும் செய்திகளுக்கு முரண்பட்டவையல்ல. வையகத்தில் பிழையேயில்லாத மனிதன் இல்லை. ஆனால் பகுத்துணர வேண்டும். குறை வேறு; குற்றம் வேறு. குறைகள் மன்னிக்கத் தக்கன; குற்றங்கள் மன்னிக்கத்தக்கன அல்ல. எந்தச் சூழ்நிலையிலும் துரோகம், ஏமாற்று முதலியன ஏற்புடையனவல்ல என்பதறிக.

பழைமை-பல தலைமுறைகள் பழகிய நட்பு என்று -அதாவது உழுவலன்பு நட்பு என்று கொள்க.

**801. பழைமை எனப்படுவது யாதுஎனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.**

பழைமை எனப்படுவது யாதெனக் கேட்பின், பழைமையுடையர் உரிமையால் செய்வனவற்றைச் சினவாது உடன்படுவதேயாகும்.

உணவு, மருத்துவம், ஒப்புரவாண்மை ஆகிய துறைகளில் இத்தகு செயல்கள் நிகழ வாய்ப்புண்டு. 801.

**802. நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை மற்றுஅதற்கு
உப்பாதல் சான்றோர் கடன்.**

சிறந்த நட்பிற்கு உறுப்பாவது நண்பர் உரிமையாகச் செய்த அனைத்திற்கும் உடன்பட்டு உவத்தலாகிய கடமையே.

பழகிய நண்பர் உரிமையால் செய்தனவற்றிற்கு உடன்பட்டு உவத்தல் நட்பிற்குரிய உறுப்பாகும்.

கர்ணனின் சோழி விளையாட்டை நினைவு கூர்க. 802.

**803. பழகிய நட்புஎவன் செய்யும் கெழுதகைமை
செய்தாங்கு அமையாக் கடை.**

பழகிய நண்பர் உரிமையால் செய்த காரியங்களுக்கு உடன்பட்டு நிற்காத பொழுது பழகிய நட்பு என் செய்யும்?

கெழுதகை நட்புடையார் செய்யுங் காரியங்களுக்கு உடன்பட்டால்தான் மேலும் நட்பினால் ஆகக்கூடிய காரியங்கள் நடக்கும் என்பது உணர்த்தியது. 803.

**804.விழைதகையான் வேண்டி இருப்பர் கெழுதகையால்
கேளாது நட்டார் செயின்.**

பழகிய நட்புடையார் தம்மைக் கேளாது ஒரு காரியத்தைச் செய்யின் நட்பினால் பொருந்திய நலன் கருதி, கேளாது செய்த காரியத்தினையும் விரும்பி

இருப்பர்.

இதனால், பழகிய நட்பெனினும் கேட்டுச் செய்தலே மரபு என்றுணர்த்தி, ஒரோவழி கேளாது நிகழினும் பொறுத்துக் கொள்க என்று அறிவுணர்த்தியது . 804.

805. பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுஉணர்க
நோதக்க நட்டார் செயின்.

தம்முடைய பழகிய நண்பர் தாம் நோதற்குரிய செயல்களைச் செய்வாராயின் அதற்குக் காரணம் நட்பின் வழிவந்த உரிமை அல்லது அறியாமை என்று கருதி வாளா இருந்திடுக.

முன் அதிகாரத்தில் 'பேதையர் நட்பு' கைவிடுக என்றார். இங்குப் பேதைமை என்று கருதிப் பொறுத்துக் கொள்க என்கிறார். இவற்றிற்கிடையில் முரண்பாடு இல்லை. இங்குப் பெருங்கிழமையுடையோர் கேண்மை'' என்பதறிக. 805.

806. எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.

பழைமை நலஞ்செறிந்த நட்பின் எல்லை வரையில் நின்று பழகியவர்கள் கேடுற்ற பொழுது நின்றார் தொடர்பினை நீக்கமாட்டார்கள்.

''ஆழமான நட்பு'' என்றும் நீங்காது. 806.

807. அழிவந்த செய்யினும் அன்புஅறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

அன்பின் வழிவந்த பழைமையான நட்பு நலம் செறிந்த உறவினையுடையார் தமது நண்பர் அழிந்து போகக் கூடிய அளவு துன்பம் செய்யினும் அன்பிலிருந்து நீங்க மாட்டார்.

நட்பு நலஞ்சான்ற உறவு, அழிவினை ஈடு செய்யும் என்பதறிக. 807.

808. கேளிழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கம் நட்டார் செயின்.

தம்மொடு பயின்ற நண்பன் தவறு செய்ததைப் பிறர் வாயிலாகக் கேளாத பெருந்தன்மை உடையவருக்குப் பழகுபவர் பிழை செய்யும் நாட்கள் குறையும்.

''நாளிழுக்கம் நட்டார் செயின்'' என்றதால் பழகிய நண்பரிடத்தில் பிழைகள் செய்த நாளிலிருந்து நாள்கள் பழுதாகின்றன. முன்பு பழகிய நாட்களும் கூடப் பயனற்றுப் போகும் என்றுணர்த்தியதாகக் கொள்ளல் சிறப்பு.

நட்பால் பழகும் இருவருக்குமிடையில் மூன்றாவது மனிதரை அனுமதிப்பது நட்பைக் கெடுக்கும். 808.

809. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையும் உலகு.

உறவுகளுக்குக் கேடின்றிப் பழகி வந்த நட்புறவினை விடாது பேணுபவர் நட்பை உலகம் விரும்பும்.

பழகிய நட்பில் ஓரிரண்டு பிழைகள் இருப்பினும் நட்பைக் கைவிடாததே அழகு என்றுணர்த்தியது. 809.

810. விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பின் தலைப்பிரியா தார்.

பழகிய நட்புடையார் தவறுகளே செய்தாராயினும் பழகும் பண்பின்றும் நீங்காதவர்கள் நட்பைப் பகைவரும் விரும்புவர்.

நட்பு முதன்மைப்படுத்தப் பெற்ற இடத்தில் பொருளால் நட்பைப் பிரிக்க இயலாது. 810.

## 82. தீ நட்பு

தலை சிறந்த நட்பாகிய பழைமையை விளக்கியவர் அதற்கு நேர் எதிர் முறையான தீ நட்பை விளக்குகின்ற அதிகாரம் இது. கொள்ள வேண்டியதை முதலில் கூறி, அதன் பின் விலக்க வேண்டியதைக் கூறுவதே அறிவியல் மரபு. ஏன் எனில் நல்லதை அடையும் முயற்சியிலேயே தீமை விலகும்.

பொறுத்துக்கொள்ள இயலாத குற்றமுடையவர்களுடைய நட்பு ஆகாது. குற்றங்களாவன: திருந்த விரும்பாமை, கள்ளுண்ணல், சூதாடல், திருடுதல், மறை பிறர்க்குரைத்தல், அழுக்காறு கொள்ளுதல், வஞ்சித்து ஒழுகுதல், சோம்பித் திரிதல் முதலியன.

குற்றங்கள் உடையார் நட்பு ஆகாதென்றமையினால் குறைகள் உடையார் நட்பு ஆகும் என்றாயிற்று. 810.

811. பருகுவார் போலினும் பண்புஇலார் கேண்மை
பெருகலின் குன்றல் இனிது.

அனுபவிக்கத்தக்க காதல் நட்புடையராயினும் பண்பில்லாதவர்களுடைய நட்பு வளர்தலினும் குன்றுதல் இன்பந்தரும்.

நட்புக்கு இன்றியமையாதது தூய அன்பு. ஆயினும் பண்புள்ள இடத்தில்தான் நட்பு பயன்தரும். ஆதலால் பண்பிலார் தொடர்பு வேண்டாம் என்றார். 811.

812. உறின்நட்டு அறின்ஒருஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என்.

தனக்குப் பயனுள்ளபோது நட்புச் செய்தும் தனக்குப் பயனில் வழி நட்பிலிருந்து விலகியும் செல்வோர் நட்பு இருந்து என்ன பயன்? இழக்கும் போது என்ன கேடு வந்துவிடப் போகிறது ? 812.

813. உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர்.

நட்பின் வழிவரும் பயன் பற்றிய அளவு பார்ப்போர் நட்பும், கொடுப்பவரைப் பற்றிக் கருதாது அவர் தரும் பொருளையே கருதும் விலைமாதும், களவு செய்பவரும் ஒரே தன்மையுடையவர்கள்.

நட்பு, நட்புக்காகவேயாம். பயன் கருதிய நட்பு, நன்மை பயவாது. விலைமாது பெறுவதற்கே உரியவள். அவள் பொருள் தருபவனுக்கு யாதொன்றும் கொடுக்க மாட்டாள். 'கள்வர்' நம்பிக்கைக்குரியரல்லர். 813.

814. அமரகத்து ஆற்றுஅறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை.

செருகளத்தில் சுமக்காது தரையில் விழும் அறிவிலாக் குதிரைகளைப் போன்றவர்களின் நட்பை விடத் தனிமை இனியது. 814.

815. செய்துஏமம் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று.

நட்புச் செய்து வைத்தாலும் தமக்கு அரணாக அமையாதவர்களின் நட்பு உண்டாகித்தான் என்ன பயன்? இல்லாமல் போனால்தான் என்ன குறை?

நட்பின் பயன் நட்டாருக்கு அரணாக விளங்குவதே என்று உணர்த்தியது. 815.

816. பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்
ஏதின்மை கோடி உறும்.

அறிவில்லாதாருடன் பெரிய அளவில் கலந்து பழகிய நட்பினும் அறிவுடையவர்களின் பகை கோடி மடங்கு நன்று. 816.

817. நகைவகையர் ஆகிய நட்பின் பகைவரால்
பத்துஅடுத்த கோடி உறும்.

நகைத்தலுக்குரிய தூர்த்தரின் நட்பினால் வருங்கேடு, பகைவர் தரும் கேட்டை விடப் பலகோடி மடங்கு பெரியது. 817.

818. ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்ஆடார் சோர விடல்.

தம்மால் செய்து முடிக்கக் கூடிய கடமையினைச் செய்து முடித்தற்கு இயலாததாகச் சோர்ந்து பணியைக் கைவிட்டு உழல்வாரைக் காணின் அவர்களிடம் யாதொன்றும் கூறாது கை விடுக.

செய்யமுடிந்ததைச் செய்யாது விடுபவர் சோம்பேறிகள். சோம்பேறிகளால் என்றும் எதுவும் நடக்காது. கெட்டவர்களை விடச் சோம்பேறிகள் மோசமானவர்கள். ஆதலால் ''சோர விடுக'' என்றார். 818.

819. கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

சொல்லுக்கும் செயலுக்கும் வேறுபட்டு நிற்பார் உறவு கனவிலும் கூடத் தீயது.

கனவிலும் தீயது என்று கூறியதால் நனவில் தீயது என்று உணர்த்தியதாக உணர்க. 819.

820. எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.

வீட்டின்கண் பழகுதலும் பலர் கூடிய மன்றத்தில் பழித்தலும் உடையார் தொடர்பு எந்த அளவிலும் வேண்டாம். கை விடுக .

சிறந்த நட்பும் வெளிப்படும் இடம் மனையல்ல; பலர் கூடும் அவையே என்பது உணர்த்தியது. பழித்தல் மனையிலும் பலரறியப் பாராட்டுதல் மன்றிலும் நிகழ்தல் அறம்; சிறப்பு. 820.

## 83. கூடா நட்பு

தீய நட்புக்கு அடுத்துக் கூடா நட்பு. தீய நட்பு வெளிப்படையாகத் தெரியக் கூடியது. கூடா நட்பு என்பது நட்பு போலக் காட்டிப் பகையும் பழியும் வளர்ப்பது. இத்தகு நட்பில் தொடர்பு கொண்டு ஏமாந்து கெட்டோர் வரலாறு ஏராளம். ஏசுபெருமானைக் காட்டிக் கொடுத்த யூதாஸ் கூடா நட்புத்தானே! அகமும், புறமும் ஒத்து வெற்றியிலும் தோல்வியிலும் இன்பத்திலும் துன்பத்திலும் நிற்கும் நட்பே நட்பு. இத்தகு உயரிய நட்பில் கடமையும் உரிமையும் பொருதும். கூடா நட்பு கோடி பெறினும் வேண்டாம்.

821. சீர்இடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

இயல்பாக நட்புக்கொள்ள முன்வராதிருந்து தமக்கு வாய்ப்பென அமையும்போது நட்புக்கு வந்து கூடினார்போலப் பழகுவார் பட்டடையேயாம்.

நட்பு என்பது இயல்பாக அமைவது. நட்புக்குத் தற்சார்பான குறிக்கோள் இல்லை; இருத்தல் ஆகாது. நட்புச் செய்தலே நட்பின் குறிக்கோள் என்ற உயர்நெறி உணர்த்தப் பெறுகிறது. 821.

822. இனம்போன்று இனம்அல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

தமக்கு உற்றார்போலக் காட்டி, உண்மையில் உற்றாராக இல்லாதார் உறவு, அடிக்கடி மாறும் மகளிர் மனம் போல மாறுபடும்.

வலிமையில்லாத மகளிர் பாதுகாப்புக் கருதிய ஐயத்தால் அடிக்கடி மாறி நினைக்கும் மனமுடையர் என்பது அறிவியல் உண்மை. குறை, மகளிருடையதன்று; சமூகத்தினுடையது.

தமக்குரியார் போன்று பழகுதலும் ஆனால் அதேபோன்று அத்தகைய உறவைப் பேணுதலும் இந்த உலகில் அதிகம் என்பதறிக. 822.

823. பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது.

பல நூல்களைக் கற்றும் மனந்திருந்தி நட்பாகும் பழக்கம் பகைவருக்கு இல்லை. நூல்களைக் கற்றல் வாழ்க்கையில் திருத்தமும் நல்வாழ்க்கையும் காண என்றுணர்த்தியது அறிக.

ஒரோ வழி பகைவரானார் பின் மனம் திருந்தி நட்பாடல் தேற்றாதாராயின் பல கற்றும் என்ன பயன்? 823.

824. முகத்தின் இனிய நகாஅ அகத்துஇன்னா
வஞ்சரை அஞ்சப் படும்.

முகத்தில் இனிய புன்முறுவலையும் அகத்தில் பகையையும் வைத்திருக்கும் வஞ்சகர் அஞ்சத் தக்கவர்.

''அகத்தில் கறுத்துப் புறத்தே வெளுத்தவர்'' என்ற திருவருட்பா அறிக.
824.

825. மனத்தின் அமையா தவரை எனைத்துஒன்றும்
சொல்லினால் தேறற்பாற்று அன்று.

மனத்தினால் தம்மொடு மேவிப் பொருந்தாதவரை எந்த ஒரு சொல்லினாலும் தெளிந்தறிதல் இயலாது. 825.

826. நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை உணரப் படும்.

நட்பு செய்தார்போல் நல்லவைகளையே சொல்லினும் பகைவர் தம் சொல்லின் தன்மை உடன் உணரப்படும்.

சொற்களின் அமைப்பில் நட்புத் தோன்றும். ஆயினும் சொற்களின் வெளிப்பாட்டு முறை, ஒலி அமைவு ஆகியவற்றின் மூலம் சொற்கள் பகைமை வழியன என்பதை உணரலாம். 826.

827. சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான்.

வில்லின் வணக்கம் கொல்லுதல் உண்மையாதலால், பகைவர்களிடம் சொல்லில் காட்டப்பெறும் வணக்கம் கொள்ளற்க. 827.

828. தொழுதகை உள்ளும் படைஒடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து.

வணக்கம் செய்யும் பகைவர் கைகளுக்குள்ளும் கொல்லும் கருவி ஒளிந்து இருக்கும். பகைவர் நம்மிடம் அழும் கண்ணீரும் நடித்துக் கொல்லும் தன்மையுடையதே.

தொழுதலும் அழுதலும் நட்பின் அடையாளம் மட்டுமல்ல என்பது கருத்து. பகைவர் திறமையாகப் பகைமையை மறைத்துக் கொண்டு தொழுதலும் அழுதலும் செய்து வெல்வர். இது உலக வழக்கு. ஆதலால் விளையும் பயன்களைப் பொறுத்தே நட்பு, தேர்வு செய்யப் பெறுதல் வேண்டும். 828.

829. மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து
நட்பினுள் சாப்புல்லல் பாற்று.

மனத்தினுள் பகைமை கொண்டு, புறத்தே நட்புத் தொடர்பான உதவிகள் உபசரணைகள் மிகச்செய்து, நட்பாடல் செய்வோரிடம் அதுபோலவே பழகவேண்டுமேயன்றி உண்மையான உறவாக்கிக் கொள்ளக் கூடாது.

''உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதே'' என்பது அறநெறி; இது அரசு நெறி. அரசு நெறியில் விதி விலக்கு உண்டு . 829.

830. பகைநட்பாம் காலம் வருங்கால் முகம்நட்டு
அகம்நட்பு ஒரீஇ விடல்.

பகைவர் நட்பாகும் காலம் வந்தால், அவரோடு முகநக நட்புச் செய்க; அகங்கலந்த நட்புக் கொள்ளற்க.

அகங்கலந்த நட்பு, நம்பிக்கையளிப்பது. அந்த நம்பிக்கை அழிவுக்குக் காரணமாகி விடக்கூடாது என்பதால் 'முகம் நட்டு அகம்நட்பு ஒரீஇ'' என்று கூறினார். 830.

## 84. பேதைமை

பேதைமை - யாதும் அறியாமை என்று உரையாசிரியர் கூறியுள்ளார். யாதும் அறியாதார் எவரும் இல்லை என்பதால் அறிய வேண்டுவனவற்றை அறியாமல், அறிய வேண்டுவனவற்றை அறிந்து கொள்ளும் உணர்ச்சியில்லாமல் இருப்பது பேதைமை என்று கொள்ளல் சிறப்பு. அல்லது முறை பிறழ அறிவது பேதைமை என்றும் கொள்ளலாம். பேதைமை குற்றங்கள் யாவினும் பெரிய குற்றம்.

**831. பேதைமை என்பதுஒன்று யாதெனின் ஏதம்கொண்டு**
**ஊழியம் போக விடல்.**

பேதைமை என்பது யாது? துன்பத்தைக் கொள்முதல் செய்து கொண்டு ஆக்கத்தைக் கைவிடல்.

ஆக்கம் - கேடு இவற்றின் தன்மையும் அருமையும் அறியாமை பேதைமையால் நிகழ்வது. 831.

**832. பேதைமையுள் எல்லாம் பேதைமை காதன்மை**
**கையல்ல தன்கண் செயல்.**

பேதைமை யெல்லாவற்றுள்ளும் பேதைமையாவது, தனக்கு ஆகாத ஒழுக்கத்தை விரும்புவது.

பேதைமையுள் பேதைமை தனக்கில்லாதவற்றை விரும்புதல், செய்தல் என்றும் பொருள் கொள்ளலாம்.

மக்களாட்சி முறையில் ஆளவந்தோர் மக்களுக்காகவன்றித் தனக்காகத் தன் குடும்பத்துக்காக ஒன்றை விழைதல் பேதைமை. 832.

**833. நாணாமை நாடாமை நார்இன்மை யாதொன்றும்**
**பேணாமை பேதை தொழில்.**

நாணவேண்டுவனவற்றிற்கு நாணமில்லாமல் இருத்தலும் நாடித் தேட வேண்டியவைகளை நாடாமல் இருத்தலும் யாரும் தன்னிடம் அன்பில்லாமல் போவதற்குரிய செயல்களுடைமையும் பேணிக் காக்க வேண்டியனவற்றைப்

பேணிக் காக்காமையும் பேதையின் தொழில்.

''யாதொன்றும்'' என்ற சொல்லைக் கொண்டு கூட்டி, யாதொன்றும் நாணாமை, யாதொன்றும் நாடாமை, யாதொன்றும் நாரின்மை, யாதொன்றும் பேணாமை என்று எண்ணுதல் வேண்டும்.

பிறர் வசையால் வரும் உணர்ச்சி வெட்கம் அல்ல; தன்னுடைய தகுதி , செயலின்மை நோக்கி வருவதே வெட்கம். 833.

834. ஓதி உணர்ந்தும் பிறர்க்குஉரைத்தும் தான்அடங்காப்
பேதையின் பேதையார் இல்.

அடக்கத்தினைத் தரும் செயலாகிய நூல்களை ஓதியும், நூல்களின் பயனை உணர்ந்தும், அந்நூற் பயன்களைப் பிறர்க்கு உரைத்தும் தான் அடங்காது வாழும் பேதையைப் போல் வேறொரு பேதை இல்லை.

''கற்றதால் மட்டும் பயன் இல்லை'' என்பது கருத்து. 834.

835. ஒருமைச் செயல்ஆற்றும் பேதை எழுமையும்
தான்புக்கு அழுந்தும் அளறு.

பேதை எழு பிறப்புக்களிலும் நரகத்தில் அழுந்துதலுக்குரிய தீமைகளை இந்த ஒரு பிறப்பிலேயே செய்து கொள்கிறான் .

நாலும் அறிந்து செய்யாமல் ஒரு புத்தியிலேயே காரியங்களைச் செய்பவன் எழுமையும் நரகத் துன்பத்தில் அழுந்துதலுக்குரியனவற்றைச் செய்கின்றான்.

மதிநுட்பம் - நூலறிவு என்றார்போலக் கொள்க.

''அழிவதற்குக் காலம் அதிகம் தேவை இல்லை''. 835.

836. பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேல் கொளின்.

செய்யும் தொழிலின் செய்ம்முறை தெரியாத ஒருவன் அந்தத் தொழிலைச் செய்ய முற்படுவானாயின் அத் தொழிலின் பயன் கைகூடாது. மேலும் இகழ்ச்சியை அணியாகப் பெறுவான்.

செயல்கள், செய்யும் முறைமைகளினாலேயே வெற்றியைத் தருகின்றன என்பதை உணர்த்தியது. 836.

837. ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை.

அறிவிலாதவனிடத்தில் செல்வம் சேர்ந்தால் பகைவர் உண்டு மகிழ்வர். சுற்றத்தார் பசித்துன்பமுறுவர். 837.

838. மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன்று உடைமை பெறின்.

அறிவிலான் ஒருடைமை பெறுவானாயின் பித்தனைப் போலவும், கள் குடித்தவனைப் போலவும் களித்திடுவான்.

"ஒருடைமை பெறின்" என்றதால் பெற வேண்டுவன எல்லாம் பெறவில்லை என்றுணர்த்தியமை அறிக. 838.

839. பெரிதுஇனிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதுஒன்று இல்.

அறிவில்லாதார் நட்பு பெரிதும் இனிது; அவர் நட்புப் பிரிவின்கண் துன்பம்தருதல் இல்லை.ஆதலால் இனிது.

"பேதையார் நட்பு, தருவதொன்றில் " என்பது ஆய்வுக்குரியது.

பேதையார் பிரிவில் துன்பம் வராதா? அதாவது நமக்குத் துன்பம் இல்லை. பேதையார் துன்பமே செய்வார்கள். இதுவே உலகியல்.

அறிஞர் பிரிவு இழப்பைத் தரும் என்பது உண்மை. 839.

840. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

கால்களைத் தூய்மை செய்யாமல் படுக்கையில் வைத்த செயல் போன்றது சான்றோர் அவைக்குள் பேதை புகுதல். 840.

## 85. புல்லறிவாண்மை

அறியாமை உடையவன் அறிஞனைப் போல நடிப்பது புல்லறிவாண்மை .அறியாமையுடையான் அறிவுடையான் போலத் தன்னைக் காட்டிக் கொள்வதால் அறிந்தவர்கள் சொல்வதை மறுப்பான்; ஏற்க மாட்டான். இல்லாத ஒன்றை இருப்பது போலக் காட்டி நடந்து கொள்வதால் புல்லறிவாண்மை என்று கூறப்பெற்றது.

புல்லறிவாண்மையுடையார் என்றுமே அறிந்தோராதல் அரிது.

841. அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதுஇன்மை
இன்மையா வையாது உலகு.

ஒருவனுக்கு இல்லாமை பலவற்றுள்ளும் இல்லாமை அறிவின்மையே. வேறு எது இல்லையானாலும் அதனை இல்லாமை என்று உலகத்தார் கருதார்.

அறிவுடையார் எல்லாம் உடையார். ஆதலால் பிறிதின்மை ஒன்று

அமைய வழியில்லை. 841.

842. அறிவிலான் நெஞ்சுவந்து ஈதல் பிறிதுயாதும்
இல்லை பெறுவான் தவம்.

அறிவிலான் நெஞ்ச மகிழ்ச்சியுடன் தருதல் பெறுதல் தவத்தாலேயாம்.வேறொரு காரணமும் இல்லை. 842.

843. அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது.

நல்லறிவில்லாதவர் தாமே தமக்குச் செய்து கொள்ளும் வருத்தும் துன்பம் பகைவராலும் செய்தல் அரிது.

அறிவில்லாதார்க்குப் பகைவர் வேண்டாம்.அவர்களுடைய அறியாமையே போதும் என்றுணர்த்தியது.

கள், தவறு முதலியவற்றாலும் பெருந்தீனியாலும் உடல் நலம் இழத்தலை நினைவிற் கொள்க. 843.

844. வெண்மை எனப்படுவது யாதெனின் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு.

புல்லறிவுடைமை என்று கூறப்படுவது யாதெனில் அனிவுடையோம் யாம் எனறு செருக்குறுதல் ஆகும்.

''அறிவுடையோம்''- என்னும் செருக்கு அறிவு பெறுதலையும், அறிவில் வளர்தலையும் தடுத்து விடும். 844.

845. கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடுஅற
வல்லதூஉம் ஐயம் தரும்.

புல்லறிவாளர்கள் தாம் கல்லாத நூல்களைக் கற்றார்போல் காட்டி ஒழுகுதல் கற்றவற்றின் மீதும் ஐயந்தோன்ற ஏதுவாகும்.

அறியாமையும் தெரியாமையும் குற்றமல்ல. அறிவுடையார் போல் நடப்பதுவே குற்றம். 845.

846. அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்
குற்றம் மறையா வழி.

ஒருவர் உற்ற துன்பத்தை மறைத்தல் அறியாமையின்பாற்படும், அறியாமைக்குக் காரணமாய குற்றங்களை மறைக்காத பொழுது..

மறைக்க வேண்டிய குற்றங்கள் ஆணவம், அடக்கமின்மை. 846.

847. அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

பெறுதற்கரிய உபதேசப் பொருளைப் பெற்றாலும் சோர்வின் காரணமாக இழக்கும் அறியாமையுடையோன் தனக்குத் தானே வருத்தம் செய்து கொள்கிறான். 847.

848. எவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவும்ஓர் நோய்.

சொன்னாலும் செய்ய மாட்டான். தானாகவும் அறிந்து செய்யமாட்டான். அத்தகையோன் சாகும் வரையிலும் சார்ந்தார்க்கு நோய் போல்வான். 848.

849. காணாதான் காட்டுவான் தான்காணான் காணாதான்
கண்டானாம் தான்கண்ட வாறு.

மெய்ப்பொருளைக் காணாதவன் மற்றவர்க்குத் தெரிந்தவன் போலக் காட்டுதல் பிறரால் அறிந்து கொள்ளக் கூடிய தன்மையை இழந்தவன். பிறருக்கு அறிவிக்கப் புகுதல் இழிவைத் தரும். அறிவிலாதான் தான் கண்டதையே கூறுவான்.

அறிவிலாதான் அறிவுடையான் போல நடித்தல் கூடாது. அறிவு வளரும் தன்மையது. ஆதலால் தாம் கண்டதையே கழறிக் கொண்டிருக்கக் கூடாது. அங்ஙனம் வாழ்வது அறிவின் வளர்ச்சியைக் கெடுக்கும். 849.

850. உலகத்தார் உண்டென்பது இல்என்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்.

உலகத்தார் உண்டு என்று கூறுவனவற்றை இல்லை என்று கூறுபவன் இந்த உலகத்தில் பேயாகக் கருதப் பெறுவான்.

உண்டு என்று கூறப் பெறுவன கடவுள், ஊழ்- நியதி முதலியன. 850.

## 86. இகல்

அறியாமையைத் தொடர்ந்து வரும் தீமை, இகல் என்பது .இகல் என்பது இருவர் தம்முள் பொருது, வலிமையை இழத்தலுக்கு ஏதுவாக இருப்பது.

851. இகல்என்ப எல்லா உயிர்க்கும் பகல்என்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய்.

எல்லா உயிர்க்கும் பிற உயிர்களோடு கூடி வாழாமல் பகைப்படுத்தும் குற்றம் இகல் என்பர்.

இரவொடு பிரிந்து நிற்கும் பகல் போல, எல்லா உயிர்களிடத்திலிருந்தும் பிரிந்து நிற்கும் நோய் என்பது இகல்.

இகல் தொடர்ந்து துன்பந்தந்து வலிமையையும் பொருளையும் அழிப்பதால் நோய் என்றார். 851.

852. பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை.

தம்மோடு கூடாமை கருதி ஒருவன் வெறுப்பனவே செய்தான் எனினும் அவனோடு மாறுபட வேண்டியிருக்குமே என்று எண்ணி அவனுக்கு இன்னாதன செய்யாமல் இருப்பது உயர்வு.

நம்மை வெறுப்பவனுக்கு நாம் தீமை செய்தால் பகைமை வளரும்; தாழ்ச்சி வரினும் இகல் கொள்ளற்க; இகல் செய்யற்க. 852.

853. இகல்என்னும் எவ்வநோய் நீக்கின் தவல்இல்லாத்
தாவில் விளக்கம் தரும்.

மாறுபாடு என்று சொல்லப்படும் துன்பந்தரும் நோயை நீக்கி வாழின் குற்றம் நீங்கிய தாழ்வில்லாத புகழைத் தரும்.

யாரோடும் இகல் இன்மையால் காலம், பொருள் ஆகியன நல்லன செய்வதற்குரிய வாயில்களாக அமையும் என்பதறிக. 853.

854. இன்பத்துள் இன்பம் பயக்கும் இகல்என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.

துன்பத்துள் துன்பமாகிய மாறுபாட்டை நீக்கி விடின் இன்பத்துள் இன்பம் கிடைக்கும்.
மாறுபாடு எனும் துன்பத்துள் துன்பத்தை நீக்குதலே இன்பத்துள் இன்பத்தைத் தரும்.

மாறுபாடுகளை, தொடர்நிலை அழிவுக் காரியங்களில் ஈடுபடுத்துவதால் இன்பங்கெடும்.

மாறுபாடுகளைத் தள்ளி வைப்பது இன்பம் பயக்கும் முயற்சிகளில் ஈடுபடுத்துதலால் ''இன்பத்துள் இன்பம் கிடைக்கும்'' என்றார். 854.

855. இகல்எதிர் சாய்ந்துஒழுக வல்லாரை யாரே
மிகல்ஊக்கும் தன்மை யவர்.

ஒருவரோடு மாறுபாடு கண்ட வழி, மாறுபாடுகளை ஏற்றுக் கொள்ளாமல் மூர்க்கத்தனமான பிடிவாதம் செய்யாமல் ஒருவழியாக ஒதுங்கி ஒழுகவல்லாரை வெல்லக் கருதும் தன்மை உடையவர் யார்?

தம்மொடு மாறுபடுவார் மாறுபாட்டை ஏற்காமல் மாறுபாட்டை ஒதுக்கி வைத்து ஒழுகுந்திறன் கொண்டோரை வெல்லுவார் யார்? மாறுபாடுகளை ஒதுக்கி வாழ்வோரை யாவரும் நேசிப்பர்; வெல்ல நினையார் .855.

856. இகலின் மிகல்இனிது என்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் தணித்து.

பிறரோடு மாறுபாடு கொள்ளுதலே இன்பம் என்று மாறுபட்டுச் சண்டை செய்வானின் வாழ்க்கை தவறுதலும், ''செல்வம்'' கெடுதலும் சிறு பொழுதிலேயே அமையும்.
மாறுபாட்டின் காரணமாக ஆத்திரப்படுதலால் தாமே இதயப் பாதிப்பால் மரணமெய்தலும் மாறுபாடு முற்றிய வழி நடைபெறும் சண்டையில் கொல்லப்பட்டு உயிர் வாழ்க்கை தவறும்.

செல்வம் என்பது நாள்தோறும் உழைத்துச் சம்பாதித்துச் சேர்ப்பது. மாறுபாட்டில் ஈடுபடுவோர்க்கு உழைத்துச் சம்பாதிக்கக் காலம் ஏது? அதனால் செல்வம் கெடும். மேலும் மாறுபாட்டைத் தீர்த்துக் கொள்ளும் வழியில் செலவு உண்டாதலாலும் செல்வம் கெடும் என்றார். 856.

857. மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்
இன்னா அறிவி னவர்.

மாறுபாட்டினை மேற்கொண்டு செல்லும் துன்பியல் அறிவுடையோர், வெற்றி மேவுதலுக்குரிய மெய்ப்பொருளைக் காணாதவர் .

மிகல் மேவும் மெய்ப்பொருளுக்கு மெய்ப்பொருள் நாயனார் வரலாறு அறிக. 857.

858. இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் அதனை
மிகல்ஊக்கின் ஊக்குமாம் கேடு.

ஒருவன் மாறுபாடு கொண்டு எதிர்த்து வந்தவிடத்துத் தான் எதிராது சாய்ந்து ஒழுகும் இயல்பு ஆக்கம் தரும். அப்படிச் சாய்ந்து போகாது எதிர்த்து நிற்பாராயின் கேடு மிகும்.

கோழைத்தனம் ஆகாதோ எனின், மாறுபாட்டின் வழியாதலின் கோழைத்தனம் ஆகாது. 858.

859. இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை
மிகல்காணும் கேடு தரற்கு.

ஒருவன் செல்வம் வரும்பொழுது ஒருவருடன் மாறுபாடு கொள்ளக் கருதான். தனது செல்வத்துக்குக் கேடு வருங்காலத்திலேயே யாவருடனும்

மாறுபடுதலை ஏற்பான்.

செல்வம் சேர்க்கும் முயற்சியில் ஈடுபடுங்காலத்தில் மாறுபாடுகளை ஏற்க மாட்டான். செல்வத்தை அழித்துக் கொள்ள நினைப்புழி எவருடனும் மாறுபாடுகளை ஏற்பான். 859.

860. இகலானாம் இன்னாத எல்லாம் நகலானாம்
நன்னயம் என்னும் செருக்கு.

ஒருவனுக்கு மாறுபாடு ஒன்றினாலே பொல்லாதனவெல்லாம் உண்டாம். நட்பொன்றினாலேயே நல்ல செல்வம் என்னும் செருக்கு உண்டாம். 860.

## 87.பகை மாட்சி

தனது அறியாமை, செயல்திறன் இன்மை முதலியவற்றால் பகைவரைப் பெருமைக்குரியவராக்கல்.

பகைவனை அலட்சியப்படுத்தாது, பகைவனுடைய தகுதிப்பாடுகளை மதித்தல்.

''நல்லதோர் பகை'' என்ற கம்பன் வாக்குணர்க.

861. வலியார்க்கு மாறுஏற்றல் ஓம்புக ஓம்பா
மெலியார்மேல் மேக பகை.

தம்மினும் வலிமையுடையோரிடம் மாறுபாடு கொண்டு எதிர்த்தலைத் தவிர்த்திடுக; தம்மின் மெலியார்க்குப் பகைவராதலை விரும்புக.

'தம்மின் மெலியார் மேல் பகை மேவுக' -அறநெறிவழி ஏற்புடையதன்று. பகையைப் பராமரித்துக் கொள்க என்று கூறலாமா? 861.

862. அன்பிலன் ஆன்ற துணைஇலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு.

யார்மாட்டும் அன்பிலான், அதுவேயுமன்றி ஆழ்ந்த துணையுமில்லாதவன், தன் வாழ்க்கையில் குன்றுதல் ஆவான். இத்தகையோன் தன் மீது வந்த பகையாளியின் வலியை எப்படித் தொலைப்பான்? 862.

863. அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான்
தஞ்சம் எளியன் தமக்கு.

அஞ்சத்தக்கன அறிந்து அஞ்சாதவன், அறிய வேண்டுவனவற்றை அறியாதவன், அமைதி காக்கவும் மாட்டாதவன், ஈகையும் இல்லாதவன்-

இத்தகையோன் பகைவனுக்கு மிகவும் எளியனாகி விடுவான். 863.

864. நீங்கான் வெகுளி நிறைஇலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது.

கோபம் நீங்கப் பெறாதவனும் நிறையில்லாதவனுமாகிய ஒருவன் எந்நாளும் எங்கேயும் எவருக்கும் எளியவனாவான்.

இங்கு 'எளிமை' பண்பாட்டு எளிமையன்று; இழிவின்பாற்பட்ட எளிமை. 864.

865. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க்கு இனிது.

நீதி நூலை ஓதி, அந்நீதி நூல் ஓதும் வழியை நோக்கமாட்டான். வாய்த்த தொழிலைச் செய்யான்; வரக்கூடிய பழியை நோக்கான். பண்பு இல்லாதான் - இத்தகையோன் பகைவருக்கு இனியன்.

நிறைநலம் இல்லாதானைப் பகைவன் எளிதில் வெற்றி கொள்ள இயலும் என்பதால் இனிது என்றார். 865.

866. காணாச் சினத்தான் கழிபெரும் காமத்தான்
பேணாமை பேணப் படும்.

தன்னையும் பிறரையும் காண இயலாத கோபத்தையுடையவன், மிகுந்த காம உணர்ச்சியுடையோன் இவன்றன் உறவு பேணாத நிலை மேற்கொள்ளப்பெறும்.

வெகுளியின் உச்ச எல்லையில் ஒன்றும் அறியா நிலை ஏற்படுமாதலால் ''காணாச் சினத்தன்'' என்றார்.

''கழிபெருங் காமத்தான்''- மிகுந்த பெண் போகி என்றும் கூறுவர். ஆயினும் மிகுந்த பெண் போகம் தரும் துன்பத்தை விடப் பணக்காரனாகும் ஆசை, புகழ்வேட்டை, ஆதிக்க அதிகார வேட்கை முதலியனவும் கொடிய துன்பங்களை விளைவிக்கின்றமையை ஓர்க.

துறவிலும் கூட மண்ணை, பொன்னைத் துறவாது பெண்ணை மட்டும் துறப்பது ஏன்? இம்மூன்றில் எது சமூகத்திற்குப் பெருந்தீங்கு செய்யக் கூடியது? 867.

867. கொடுத்தும் கொளல் வேண்டும் மன்ற அடுத்துஇருந்து
மாணாத செய்வான் பகை.

தன்னை அடுத்திருந்து தனக்குப் பொருந்தாதன செய்வானின்

பகையை, ஒன்றைக் கொடுத்தாயினும் கொள்க.

இழப்பது ஒன்று. அறிவு பூர்வமானது. ஆனால், அடுத்திருந்து செய்வார் தீமை வழி இழப்பு கணக்கிலவாகும்.

உடனிருப்பார் போல் காட்டிச் சோதனைக் காலத்தில் உடன் வராமல் ஒதுங்கி நிற்பார் உறவு பயனற்றது. தீமையில் எல்லாம் தீமை வலுவிழக்கச் செய்தல் என்பதறிக. 867.

868. குணன்இலனாய்க் குற்றம் பலஆயின் மாற்றார்க்கு
இனன்இலன்ஆம் ஏமாப்பு உடைத்து.

ஒருவன் நற்குணங்கள் இல்லாதவனாகவும் குற்றங்கள் பலவுடையவனாகவும் இருப்பின் இவனின் இந்த நிலைமை மாற்றானுக்குத் துணையாக அமையும்.

நற்குணம் உடையராயின் ஆன்ம வலிவும் சுற்றத்தின் வலிமையும் இருக்கும். 868.

869. செறுவார்க்குச் சேண்இகவா இன்பம் அறிவுஇலா
அஞ்சும் பகைவர்ப் பெறின்.

அறிவிலாது அஞ்சும் பகைவரைப் பெறின் பொருது வெல்வாருக்கு உயர்ந்த இன்பங்கள் கிடைக்கும்.

அறிவிலாது அஞ்சுபவனிடம் பொருது வெற்றி பெறுதல் அறமாகுமா? 869.

870. கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்
ஒல்லானை ஒல்லாது ஒளி.

நீதி நூல்களைக் கல்லாதவனையும், வெகுளி உடையவனையும் சிறு பொருள்களை விரும்புபவனையும் என்றும் புகழ் மேவாது.

ஒருவனைப் பகைத்தலால் வரும் சிறு பொருளை விரும்புவானைப் புகழ் மேவாது. 870.

## 88. பகைத்திறம் தெரிதல்

பகையின் ஆற்றலை அறிதல் அல்லது பகையின் வகையும் துறையும் அறிதல்.

பகையின் வகையறிதலினால் போர்- பகையைத் தவிர்த்தல் ஆகும்.

871. பகைஎன்னும் பண்பு இலதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற்று அன்று.

ஒருவன் பகையென்ற பண்பிலதனை நகைச் சுவைக்காகக் கூட விரும்பக்கூடாது. ''விளையாட்டு வினையாயிற்று'' என்ற பழமொழி உணர்க. பாஞ்சாலியின் நகைப்பில் பாரதப் போரும், விளையாட்டாகக் கவிதை பாடியதில் மாதவியின் பிரிவும் கிட்டியது. 871.

872. வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை.

வில்லினைக் கருவியாக உடையவரிடம் பகை கொளினும் கொள்க. சொல்லினைக் கருவியாக உடையவர்களிடம் பகை கொள்ளற்க.

வில்லேருழவர் பகை, எல்லை கடந்த தீமையைத் தராது. சொல்லேருழவர் பகை காலங்கடந்தும், எல்லை கடந்தும் தீமை செய்யும். அதனால் சொல்லேருழவர் பகை கொள்ளற்க என்றது. 872.

873. ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்
பல்லார் பகைகொள் பவன்.

ஒருவன் பலரோடும் பகை கொள்வானாயின் பைத்தியக்காரனை விட அறிவிலியாவான். செய்வதறியாது செய்பவன் பைத்தியக்காரன். அதுபோலக் காரணமின்றிப் பலரோடும் பகை கொள்பவன் பைத்தியக்காரனை விட அறிவிலியாகின்றான். 873.

874. பகைநட்பாக் கொண்டுஒழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு.

பகையை நட்பாகக் கொண்டொழுகும் பண்புடைய அரசனின் பெருமைக்குள் இந்த உலகம் அடங்கும்.

ஒரோவழி சந்தர்ப்ப வசத்தால் யாருடனாவது பகை வந்துற்றால் அப்பகையை வளர்த்துக் கொள்ளாமல் நட்புச் செய்து கொண்டு ஒழுகுதல் வேண்டும் என்று உணர்த்தியது. 874.

875. தன்துணை இன்றால் பகைஇரண்டால் தான்ஒருவன்
இன்துணையாக் கொள்கவற்றின் ஒன்று.

ஒருவன் தனக்குத் துணை இல்லாத நிலையில் பகைவர் இருவராயின், பகைவர் இருவருக்குள் பொருந்தி வரக்கூடிய ஒருவரைப் பகைவரிடமிருந்து பிரித்து இனிய துணையாகக் கொள்க.

தமது வலிமை இல்லாமல் வீம்புச் சண்டை போடுதல் கூடாது என்பது கருத்து.

பகைவர் பலவீனமடைவதும் வெற்றிக்குச் சமம் என்றுணர்க. 875.

876. தேறினும் தேறா விடினும் அழிவின்கண்
தேறான் பகாஅன் விடல்.

பகைவனை ஆய்ந்தறிந்து தெளிந்தாலும் தெளியாவிட்டாலும் அழிவு வரும்பொழுது பகைவனை நட்பாகக் கொள்ளாமலும் அதேபோழ்து ஒதுக்காமலும் விடுக. இதுவே, நடுநிலைக் கொள்கை என்று கூறப்பெறும்.

அழிவு வரும்பொழுது பகைவனைப் பற்றிய முடிவுகள் எடுத்து உறவு கொள்ளல் அல்லது ஒதுக்குதல் ஆகியன அழிவை உறுதிப்படுத்தும். தவிர்த்திடுக. 876.

877. நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க
மென்மை பகைவர் அகத்து.

நொந்து கொள்ளுதல் வேண்டாம். தமது நொந்த நிலையை அறியாதாருக்குக் கூற வேண்டாம். தமது வலிமையின்மையைப் பகைவரிடத்துக் கூறுதல் வேண்டாம்.

நோதலால் பயனில்லையாதலால், 'நோவற்க' என்றார். 877.

878. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கண் பட்ட செருக்கு.

தன்மேம்பாட்டுககுரிய வகையறிந்து தன்னை வளர்த்துக்கொண்டு தற்காத்துகொள்ளும் போழுது பகைவரின் செருக்கழியும். பகைவரின் செருக்கை அடக்கும் முயற்சியைவிடத் தன்னை வளர்த்துக்கொள்ளும் முயற்சியே சிறந்தது என்றார். 878.

879. இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து.

களைய வேண்டிய முள் மரத்தை இளமையாயிருக்கும் பொழுதே களைக. அங்ஙனம் இளமையிலேயே களையத்தவறி முற்றிய நிலையில் அகற்ற முற்படின் கைகளைக் காயப்படுத்தும். 878.

880. உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

தம்முடைய பகைவரின் ஆற்றலைச் சிதைக்கும் ஆற்றலிருந்தும் அஞ்சிச் சிதைக்காது இருப்பவர் மூச்சு விடுவதனாலேயே மனிதர், உயிர் வாழ்வோராகக் கருதப் பெறமாட்டார். 880.

## 89. உட்பகை

உட்பகையாவது, புறத்தே வெளிப்படாமல் அகத்தே நின்று உடற்றும் பகை. மற்றும் நம்முடைய பகைவராயிருந்தவர் பின் உடன்பாடு ஏற்பட்டுப் பழகும்பொழுதும் பழைய பகையை மறந்து விடாமல் கரவாக உட்பகையைப் பேணுதலுமாகும். இது அறமன்று.

நம்முடைய பகைவர்கள் நாம் பெருந்தன்மையுடன் பகையை மறந்து உறவு கொண்டு பழகும் பொழுதும் பகையை மறந்து விடாமல் உட்பகையைப் பேணி வைத்திருத்தலுமாகும்.

881. நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின்.

இன்பமளிக்கும் நிழலும் நீரும் பின் விளைவாகத் துன்பம் தரும். அதுபோலத் தொடக்கத்தில் இனியவராகத் தழுவும் நண்பர்களும், உறவினர்களும் பின் துன்பம் விளைவிக்கலாம்.

நிழலும் நீரும் குளிர்ந்தே கேடு செய்தல் போல; முகம் பேசியும் புகழ்ந்து பேசியுமே கெடுப்பர் உட்பகை உடையவர். 881.

882. வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

வாள் போல் தோன்றும் பகைவரைக் கண்டு அஞ்ச வேண்டாம். உற்றார் போல் வாழும் பகைவர் தொடர்புக்கு அஞ்சுக.

''வாள்போல் பகைவர்''- வெளிப்படையாகத் தோற்றமளிக்கும் பகைவராதலால் இயல்பாகவே உள்ள தற்காப்புணர்வு மிக்குத் தோன்றிப் பாதுகாப்பு தரும். உற்றார்போலக் காட்டிக் கேடு செய்யும் பகைவரின் நயப்புடைய சொல், செயல்களால் மயங்குதல் ஏற்படுமாதலால் இயல்பாக உள்ள தற்காப்புணர்வும் செயற்படாது போய்த் துன்பம் மிகுதியாகும் என்பதால் ''கேள் போல் பகைவர் தொடர்''பை விலக்கும்படிக் கூறினார். 882.

883. உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவுஇடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

உட்பகையுடையாரை அஞ்சித் தற்காத்துக் கொள்க. அங்ஙனம் காத்துக் கொள்ளத் தவறின் நிலைகுலையும். தருணம் வந்துற்றபொழுது மண்பானை அறுக்கும் கத்தி போல் தீமை செய்வர்.

''மட்பகையின் மாணத் தெறும்'' என்றது பச்சை மண்ணை எளிதில்

குயவன் கத்தி அறுக்குமாறுபோல் எளிதில் துன்பம் செய்வர் என்றது. 883.

884. மனம்மாணா உட்பகை தோன்றின் இனம்மாணா
ஏதம் பலவும் தரும்.

ஒருவருக்கு மனம் அடங்காத உட்பகை தோன்றின் இனம் அடங்காத நிலையில் துன்பங்கள் பலவும் தரும்.

''இனம் அடங்காத'' சார்ந்தோர் இனம் தம் சொல்லுக்குக் கட்டுப்பட்டு ஒழுகாமையினால் ஏற்படும் துன்பங்களைக் குறித்தவாறு.

''இனம்''. இதனை, ''ஈனம்'' என்று பாடம் மாற்றிப் பொருள் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. 884.

885. உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான்
ஏதம் பலவும் தரும்.

உறவு முறையில் வாழ்ந்து உட்பகை தோன்றின் அந்த உட்பகை இறத்தல் முதலாய துன்பங்களைத் தரும்.

உறவு கொண்டு பழகியோரிடம் உட்பகை வந்திடின் மரணம் முதலிய துன்பம் வருதல் எளிது. 885.

886. ஒன்றாமை ஒன்றியார் கண்படின் எஞ்ஞான்றும்
பொன்றாமை ஒன்றல் அரிது.

உளம் ஒன்றிப் பொருந்திப் பழகாமல் உட்பகை கொள்வோர் உறவு பெற்று விட்டால் சாகாமல் சாதல் அரிது.

''சாகாமல் சாதல்'' ஆவது; செத்துப் போகாமல் நாளும் செத்துக் கொண்டே இருத்தல் என்பது கருத்து.

உட்பகை பெற்றார் சாதல் இல்லை, சாகடிக்கப்படுவர் என்று கூறலும் பொருந்தும். 886.

887. செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி.

செப்பு அடியும் மூடியும் பொருந்தியிருப்பது போலத் தோன்றும். ஆயினும் எளிதில் பிரிந்து விடும். அதுபோல உட்பகையிடையார் ஒன்றாதல் அரிது. செப்பின் அடிப்பாகத்தினை மூடி வைக்கப் பயன்படும் மூடி முறையாகப் பொருந்துவதில்லை. அதுபோல உட்பகை உடையார் உளமாரப் பொருந்தி உறவு கொள்வதில்லை. 887.

888. அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை உற்ற குடி.

அரத்தின் வயப்பட்ட இரும்பு தேய்தல்போல உட்பகையுடையாரால் குடி தேயும்.

இரும்பில் அரம் பொருதினால் தேய்மானம் ஆகும். உட்பகையுடையார் கூட்டினால் குடி கெடும். 888.

889. எள்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு.

உட்பகை எள்ளளவினதேயாயினும் அழித்தற்குரிய உள்ளீடு உள்ளது என்பதறிக.

''உட்பகை''- அளவினால் கணக்கிடப்படுவதன்று. உட்பகையின் எதிர் விளைவுகளே கணிப்பிற்குரியன. 889.

890. உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடன்உறைந் தற்று.

உளம் சார்ந்த உடன்பாடில்லாதவருடன் கூடி வாழ்தல் என்பது பாம்புடன் கூடி வாழ்தலை ஒத்தது.

பாம்பாயினும் பழக்கத்தால் தீமை செய்யும் இயல்பு மாறும். ஆனால், உட்பகையுடையார் மாறுவரோ என்ற ஐயம் எழும்புகிறது. 890.

## 90. பெரியாரைப் பிழையாமை

தம்மில் பெரியாரை மதித்து ஒழுகுதல்; அவமதிக்காமல் மதித்தல். பெரியார் என்பதற்குத் தவத்தர் என்று பொருள் கொள்ளல் பொருந்தாது. சினம் கொள்ளுதலும் அவ்வழித் துன்புறுத்தலும் தவம் ஆகா.

891. ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலுள் எல்லாம் தலை.

ஆற்றலோடு கடமைகளைச் செய்யும் வலிமையுடைய தக்காரை அவமதிக்காமல் மதித்துப் போற்றுதல் காப்பினுள் எல்லாம் சிறந்த காப்பாகும்.

கருதியது செய்து முடிக்கும் ஆற்றலுடையார் உறவினை மதித்துப் போற்றி ஒழுகினால் அவர்தம் ஆற்றல் காப்பாக அமையும். 891.

892. பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால்
பேரா இடும்பை தரும்.

தம்மில் பெரியாரை மதிக்காது ஒழுகின் அப்பெரியாரால் தீராத் துன்பங்கள் வரும்.

பெரியாரை மதிக்காத மனநிலையில் தாமே துன்பங்களை வரவழைத்துக் கொள்ளுதல் உண்டு. காப்பில் பயனில்லை. 892.

893. கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண் இழுக்கு.

ஒருவன் கெட்டுப் போக நினைத்தால் தம்மில் பெரியாரிடம் கேட்காமல் செய்க. உன்னை அழித்துக் கொள்ள வேண்டுமானால் உன்னிலும் பெரியாருக்கு அவமதிப்பினைச் செய்க. தம்மில் பெரியாரைக் கலந்து கேட்டுச் செய்தல் வெற்றிக்கு வாயில். 893.

894. கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல்.

தம்மில் வலிமையுடையாருக்குத் துன்பம் செய்தல் கூற்றுவனை அழைத்தது போன்றது. தம்மில் வலிமையுடையோரைப் பகைத்துக் கொள்ளல் மரணத்தை அணைத்துக் கொண்டது போல் என்பது கருத்து. 894.

895. யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் வெம்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

ஆற்றல் மிக்குடைய அரசரால் கோபிக்கப்பட்டவர்கள் எங்கும் சென்று உளராக வாழ்தல் அரிது. வேந்தன் இயல்பாகச் சினங்கொள்வான். அத்தகைய வேந்தனால் கோபிக்கப்பட்டவன் யாதொன்றுக்கும் ஆகான். அவன் யாண்டு செல்லலும் அரிது; வாழ்தலும் அரிது. 895.

896. எரியால் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

நெருப்பினால் சுடப்பட்டாலும் தப்பித்துக் கொள்ளலாம். தம்மில் வலியாரை அவமதிப்பவர்கள் வாழ்தல் அரிது. நெருப்பு தொடர்ந்து சுடுதல் இல்லை. வலியார் வஞ்சம் தீர்க்கும் வரை ஓயார். ஆதலால் வலியாரை அவமதிக்க வேண்டாம். 896.

897.வகைமாண்டவாழ்க்கையும் வான்பொருளும் என்னாம்
தகைமாண்ட தக்கார் செயின்.

ஒருவன் பெறுதற்குரியனவெல்லாம் பெற்று வாழும் வாழ்க்கையும் வளமும் வலியாரின் பகை வந்துறின் என்ன செய்ய இயலும்? 897.

898. குன்றுஅன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

குன்றனைய வலியார் மதிப்புக் குறைய நடப்பின் குடியொடு கூடி வாழ்ந்தவரும் கெடுவர் இந்த நிலத்தில். 898.

899. ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

காத்தற்கரிய, கொள்கையும் வலிமையுமுடையவர் கோபிப்பாராயின் அரசர்களும் பதவி இழப்பர். ''வேந்து கெடும்'' என்பதற்கு, தேவேந்திரன் என்று பொருள் கூறுதல் பொருந்தாது. 899.

900. இறந்துஅமைந்த சார்புடையார் ஆயினும் உய்யார்
சிறந்துஅமைந்த சீரார் செறின்.

மிகப் பெரிய சார்புகளைப் பெற்றிருப்பினும் சிறந்த வலிமையுடையோர் சினப்பின் உய்தல் அரிது. 900.

## 91. பெண் வழிச் சேறல்

ஒரு தலைமகன் காமத்தின் காரணமாக மட்டும் எடுத்துக் கொண்ட துறையில் தன் மனைவியின் பேச்சைக் கேட்டு நடத்தல் தீமையைத் தரும் என்றவாறு. இந்த அதிகாரம் பெண்ணடிமைத் தனத்தை உறுதிப்படுத்துமா எனின் இல்லை. தாம் எடுத்துக் கூறப் போகும் செய்திகளில் மனைவிக்கு அறிவும் தெளிவும் இருந்து தற்சார்பு இல்லாது கூறின் ஆண் ஆய்வுக்கு எடுத்துக் கூறப்போகும் செய்திகளில் மனைவிக்கு அறிவும் தெளிவும் இருந்து தற்சார்பு இல்லாது கூறின் ஆண் ஆய்வுக்கு எடுத்து கொள்ள கடைமை என்பதறிக.

901. மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது.

புலனுகர்ச்சி வழிப்பட்ட காமம் காரணமாக மனைவி சொல்வதைக் கேட்போன் மாட்சிமைக்குரிய பயனை அடைய மாட்டான். சிறந்த முயற்சிகளை விரும்புவாருக்கு, பெண்வழிச் செல்லுதலாகிய மனையறம் வேண்டற்பாற்றன்று.

''வேண்டாப் பொருள்'' - வாழ்க்கைக்கு மாண்பினைச் சேர்க்காத மனைவி, வேண்டாத பொருள் என்று உணர்த்தியது. 901.

902. பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

ஆண்மை நலம் பேணாது, காமத்தையே கருதி, பெண்ணை விரும்புவானின் செல்வம் நாணத்தைத் தரும். இயல்பாக மனைவி, வினைமேற்சென்று பொருளீட்டலையும் வழங்கி வசையொழிய வாழ்தலையும் விரும்புவதில்லை. அதனால் செல்வத்தின் பயன் இல்லாமற் போகிறது. அதனால் செல்வம் நாணுவதாகக் கூறினார். 902.

903. இல்லான்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும்.

தனது மனைவியிடம் தாழ்ந்து செல்லும் அச்சமுடையோன் எப்போதும் நல்லாரைக் காண்புழி நாணப்படுவான். இத்திருக்குறளில் இயல்பின்மை என்ற சொற்றொடரில், ''இன்மை'' என்ற சொல் வேண்டுவதன்று. 903.

904. மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்தல் இன்று.

மனைவியைக் கண்டு அஞ்சுபவன் மறுமையின்பத்தை இழப்பதுடன் தாம் செய்யும் செயல்களில் வெற்றி பெறுதலும் அரிது. 904.

905. இல்லாளை அஞ்சுவான் அஞ்சும்மற்று எஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்.

மனைவிக்கு அஞ்சுபவன் என்றும் நல்லவர்களுக்கு நல்லது செய்ய அஞ்சுவான். தாம் உழைத்து ஈட்டிய பொருளேயாயினும் காமம் மீதூர, மனைவிக்கு அஞ்சுபவன் உரிமையோடு நல்லது செய்யத் துணியாது அஞ்சுவான். 905.

906. இமையாரின் வாழினும் பாடுஇலரே இல்லாள்
அமைஆர் தோள் அஞ்சு பவர்.

தமது மனைவியின் தோளுக்கு அஞ்சுபவர்கள் தேவரைப் போலக் குறைவிலாத பெருமையுடன்வாழ்ந்தாலும் பெருமை இல்லை. ''தோளுக்கு அஞ்சுதல்''-தன் மனைவியின் தோளில் சாய்ந்து நுகரும் இன்பம் கிடைக்காமல் போய் விடுமோ என்ற அச்சம் என்று கொள்வதே சிறப்பு. ''அடிக்குப் பயப்படுதல்'' என்ற பொருள் தவறில்லையாயினும் சிறப்பு இல்லை. 906.

907. பெண்ஏவல் செய்துஒழுகும்ஆண்மையின் நாணுடைப்
பெண்ணே பெருமை உடைத்து.

தன் மனையாள் ஏவும் பணிகளைச் செய்து ஒழுகுவானினும் நாணமுடைய பெண்பிறப்பே பெருமையுடையது. 907.

908. நட்டார்குறைமுடியார் நன்றுஆற்றார் நன்னுதலாள்
பெட்டாங்கு ஒழுகு பவர்.

தன்மனைவியின் பேச்சைக் கேட்டு ஒழுகும் ஒருவன், தனது நண்பர்களின் குறையை நிறைவு செய்யமாட்டான்; நல்லது செய்யமாட்டான். 908.

909. அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ஏவல் செய்வார்கண் இல்.

மனைவியின் சொல் கேட்டு நடப்பவனிடத்தில் அறம் செய்தல் இல்லை; நிறைந்த பொருள் இல்லை; தாம் உவக்கும் செயல்கள் இல்லை. 909.

910. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்கு எஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை இல்.

பயனுடைய பணிகளை எண்ணிச் செய்யும் நெஞ்சுறுதியுடையோர்க்கு, என்றும் பெண்ணைச் சேர்தலாகிய பேதைமை இல்லை. ''பெண் சேர்ந்தாம் பேதைமை''- காமம் விழைதல்; ஏவல் கேட்டு ஒழுகுதல். 910.

## 92. வரைவின் மகளிர்

திருமணமாகாத மகளிரைக் கூடியிருத்தல் குற்றமென உணர்த்தும் அதிகாரம். திருமணம் அன்பினால் பிணைக்கப் பெற்ற பொறுப்புள்ள வாழ்க்கையின் பிரிக்கப்படாத ஓர் உறுப்பு. வரைவின் மகளிருடன் கூடி வாழும் வாழ்க்கையில் பங்களிப்பும் பொறுப்பும் அர்ப்பணிப்பும் காணல் அரிதென்று உணர்க. ஒரோவழி வரைவின் மகளிரிலும் ஒருவனையே சார்ந்து அர்ப்பணிப்புணர்வுடன் வாழ்வோர் உண்டு. மாதவி பற்றி எண்ணுக.

911. அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய் தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும்.

வரைவின் மகளிர் அன்பின் காரணமாக விரும்பமாட்டார்கள். பொருளின் காரணமாகவே விரும்புவர். வரைவின் மகளிரின் இன்சொல்லும் கூட இழப்பையும் அவமானத்தையுமே தரும். ''இன்சொல் இழுக்குத் தரும்'' என்றதால் இன்சொல் புனுகு தடவிய புண்ணே என்றுணர்க. 911.

912. பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல்.

ஒருவனிடம் பெரும்பயனைக் கருதிப் புகழ்ந்துரைத்து, பின் பயன் இல்லாத போழ்து, பண்பில்லாதவாறு நடந்து கொள்ளும் விலைமாதர் நிலை கண்டு அணுகாது கைவிடல் வேண்டும்.

911. அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய் தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும்.

வரைவின் மகளிர் அன்பின் காரணமாக விரும்பமாட்டார்கள். பொருளின் காரணமாகவே விரும்புவர். வரைவின் மகளிரின் இன்சொல்லும் கூட இழப்பையும் அவமானத்தையுமே தரும்.

''இன்சொல் இழுக்குத் தரும்'' என்றதால் இன்சொல் புனுகு தடவிய புண்ணே என்றுணர்க. 911.

912. பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல்.

ஒருவனிடம் பெரும்பயனைக் கருதிப் புகழ்ந்துரைத்து, பின் பயன் இல்லாத போழ்து, பண்பில்லாதவாறு நடந்து கொள்ளும் விலைமாதர் நிலை கண்டு அணுகாது கைவிடல் வேண்டும்.

பயனை மட்டுமே குறிக்கோளாக உடைய உறவுகள் வளரா என்பது கருத்து. 912.

913. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று.

பொருளுக்காக வாழும் மகளிரின் பொய்யான மயக்கத்தன்மையுடைய கூடல், இருட்டறையில் இனமல்லாத பிணத்தைத் தழுவியதைப் போன்றது.

உண்மையான உணர்வு வயப்பட்ட (கலவி) உடல் தெளிவு சார்ந்த இன்பநலன்கள் தரும். பொருட்பெண்டிரின் உடலைக் கூடல் முயக்கம், சோர்வு, நோய் முதலியன தரும். 913.

914. பொருட் பொருளார் புன்னலந் தோயார் அருட்பொருள்
ஆயும் அறிவின் அவர்.

இன்பப் பொருளை இகழ்ந்து பொருளையே பொருளாக எண்ணும் மகளிரின் நலனில் அருளினை விரும்பி ஆயும் அறிவினர் தோயார்.

''இன்பம்''- பொருளாதல் தொல்காப்பியத்தால் உணர்க. 914.

915. பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர்.

பொருள் கொடுப்போர் அனைவருக்கும் பொதுமையாகி நலன்அளிப்போரின் புன்மைத்தன்மையுடைய நலத்தில் தோய்தல் அறிவு நலத்தில் சிறந்தார்க்கு இல்லை.

''இன்பநலன்'' நுகர்வானின் உளநலம் சார்ந்தது. அதனால், வேறுபடுதல் இயற்கை. என்றும் இன்பநலன் பொதுமையாதல் இல்லை; இயலாது.. 915.

916. தந்நலம் பாரிப்பார் தோயார் தகை செருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

தனது நலத்தினை எண்ணிப் பாதுகாக்கும் எவரும் அழகு, கலை முதலியவற்றால் செருக்குடையவராக இருக்கும் பொருட்பெண்டிரின் புன்மையான நலம் தோய்தல் செய்ய மாட்டார்.

ஒவ்வொருவருடைய உடல் நலம், மனநலம், ஒழுக்க நலம் ஆகியன பிறர்க்குக் கேடு செய்யாத தந்நலம் ஆதலால் வரவேற்கத் தக்கது. 916.

917. நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.

உடலால் ஒருவரையும் நெஞ்சால் ஒருவரையும் புணரும் புன்மையரின் தோளில் தோய்பவர்கள் நிறைந்த நெஞ்சு இல்லாதவர்கள் .

பொருள் கருதிப் புணர்பவர்கள் சுழற்சி நிலையைக் கருத்திற் கொண்டு ''பிற நெஞ்சிற் பேணிப் புணர்பவர்'' என்றார். 917.

918. ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

ஆராய்ந்து அறியும் அறிவு பெறாதார்க்கு மாயம் செய்யும் மகளிரின் புணர்ச்சி பேயின் முயக்கம் போன்றது.

''பேய்'' பிடித்தால் அவ்வளவுதான். பேயாட்டம் ஆடியே தீரும். அதுபோலத்தான் மாய மகளிரும். 918.

919. வரைவிலா மாணிழையார் மென்தோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு.

மணமாகிய கட்டுப்பாடு இல்லாத மகளிரின் தோள் தோய்தல், கீழ் மக்கள் புகுந்து அழுந்தி அழியும் நரகமாகும். 919

920. இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

திருமகளால் ஒதுக்கப் பெற்றவர்களுக்கு இருமனப் பெண்டிரும் ,கள்ளும்,சூதும் உரியனவாம்.

ஒன்றிய காதலின்மையை உணர்த்த ''இருமனப் பெண்டிர்'' என்றார். 920.

## 93. கள்ளுண்ணாமை

கள் அறிவைக் கெடுக்கும்; உடல் நலத்திற்குத் தீங்கு செய்யும்; உறவைக் கெடுக்கும்; ஊரவர் கேண்மையைப் பாழ்படுத்தும்; திறன் மறைக்கும்; இன்பம் நீக்கும்; தீமை சேர்க்கும். ஆதலால் கள் குடியாதிருக்கும்படி திருக்குறள் வலியுறுத்துகிறது..

921. உட்கப் படாஅர் ஒளியிழப்பர் எஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழு வார்.

என்றும் கள்ளின் மேல் ஆசை கொண்டொழுகுவோருக்குப் பகைவர் அஞ்சார்; முன்பெய்திய புகழினையும் இழப்பர்.

கள் அறிவையும், ஆள்வினையையும் அழித்து விடுவதால் பகைவர் அஞ்சார். புகழுக்குரிய அறிவறிந்த ஆள்வினை அழிந்து பட்டதால் பழைய புகழும் கூட ஈட்டியதன்று. சந்தர்ப்ப சூழ்நிலையால் வாய்த்தது என்று எண்ணப்படுவதால் ''ஒளியிழப்பர்'' என்றார். 921.

922. உண்ணற்க கள்ளை உணிலுண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்.

கள்ளை உண்ண வேண்டாம், 'கள்ளை உண்டே தீர்வேன்' என்ற பிடிவாதம் பண்ணினால் சான்றோரால் மதிக்கப்படா நிலை தோன்றும் என்பதறிந்து உண்க.

திருவள்ளுவர் காலத்திலேயே கள்ளுண்ணாமைக்கு எதிரான சிந்தனையும் இருந்தது என்பது ''உணில்'' என்ற சொல்வழி உணரப்படுகிறது. 922.

923. ஈன்றாருள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

ஈன்ற தாயின் முன் கள் குடித்து மயங்குதல் பொல்லாதது. அங்ஙனமாயின் சான்றோர் முகக்களிவைக் காணுமாறு குடிப்பது ஏன்?

தாயின் முன் குடிமயக்கம் கூடாது என்றவாறு. 923.

924. நாணென்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளால்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.

பேணுதற்குரியதல்லாத பெரிய குற்றமாகிய கள்ளை விரும்புவார்க்கு நாணம் என்ற நல்லாள் ஒதுங்குவாள்.

மனிதனொடு நாணம் என்ற நல்ல குணம் ஒட்டிக் கொள்ளப் போராடும். ஆனால் குடிகாரனிடத்தில் தோல்வியை ஒத்துக்கொண்டு ஒதுங்கும். 924.

925. கையறி யாமை உடைத்தே பொருள் கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

கைப்பொருளைக் கொடுத்து உண்மை அறியாமையைக் கொள்முதல் செய்வது பழவினையின் காரணமாகச் செய்வதறியாது போனது போலும்.

தீமையை விலை கொடுத்து எவரும் வாங்கார்; என்ற துணிவில் ''பழவினை'' என்றார். 925.

926. துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

உறங்குவாருக்கும் செத்தாருக்கும் இடையே வேறுபாடு இல்லை. அதுபோலக் கள்ளுண்பாருக்கும் நஞ்சுண்பாருக்கும் இடையேயும் எப்போதும் வேற்றுமை இல்லை.

சாதல்-பயனற்றுப் போதல்; கள்ளுண்பாரும் பயனற்றுப் போதலால் வேற்றுமை இல்லை என்றார். 926.

927. உள்ளொற்றி உள்ளூர் நகப்படுவார் எஞ்ஞான்றும்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

எப்போதும் கள்ளை மறைவாகக் குடிப்பவர் அவரையும் அறியாமல் கண்ணொளி மங்க அறிவு தடுமாறுவதைக் கண்டு உள்ளூரார், ''இவன் கள்ளுண்டான்'' என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வர்.

கள்ளுண்ணாக் காலத்து இயல்பு அறிந்தார் உணர்த்த ''உள்ளூரார்'' என்றார். உடற்சார்பான ஒழுக்கங்களில் மறைவும், மறைத்தலும் பயன்படாது என்பதறிக. 927.

928. களித்தறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉம் ஆங்கே மிகும்.

குடியாத நிலையில் கள் குடித்துக் களித்தறியேன் என்று சொல்லற்க. கள் குடித்தமையை நெஞ்சத்தில் ஒளித்தமையை உடல் காட்டும்.

கள்குடி உடலை, அறிவை மிகுதியும் பாதிக்கும் என்பதனால் ''கள் குடிக்கவில்லை'' என்று கூறுவது நிற்காது. 928.

929. களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ அற்று.

கள்குடித்துக் களித்து வாழ்வானை, களித்து வாழும் வாழ்க்கைக்குக் காரணமாகக் காட்டுதல், நீருக்குள் மூழ்கியவனைத் தீப்பந்தம் கொண்டு தேடினாற் போன்றது.

நீருக்குள் தீப்பந்தம் எரியாது; தேடுதல் இயலாது. கள்ளுண்ணல் களிப்பைத் தராது(மயக்கம் களிப்பல்ல). களிப்பைக் கொல்வது கள் என்று உணர்த்தியவாறு. 929.

930. கள்ளுண்ணாப் போதில் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு,

கள்ளுண்டு மயங்கிக் கிடப்பானை,கள்கடிப்பழக்கம் உடையான் - *கள்ளுண்ணா*நிலையில் காண மாட்டானா? அப்படிக் காணும் பொழுது கள்ளுண்டவன் பெற்றுள்ள சோர்வைக் கண்டு புத்தியைக் கொள்முதல் செய்ய மாட்டானா?

கள்ளுண்ட நிலையில் சோர்ந்து கிடக்கும் ஒருவனை ,கள்ளுண்ணா நிலையில் காணும் குடிகாரன் கள்குடியின் தாக்கமாகிய சோர்வை உணர மாட்டானா? 930.

## 94. சூது.

சூது என்பது பணத்தை மையமாக வைத்து விளையாட்டின்வழியும் பிறவழிகளிலும் மற்றவர் பணத்தைக் கவர்தல். சூது உழைப்பினைக் கெடுக்கும்; பகை வளர்க்கும்; பண ஆசையைத் தூண்டும். சூதாடல் தீய பழக்கம்.பரிசுச் சீட்டுக்கள் வழிப் பொருள் தேடுதல் கூடச் சூதுதான்.

931. வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

சூதாட்டத்தினை விரும்ப வேண்டாம் .வெற்றி பெற்ற சூழ்நிலையிலும் சூதாட்டத்தினை விரும்ப வேண்டாம்.தூண்டிலின் இரையால் மறைந்த நுனி இரும்பை இரையென மீன் கருதி விழுங்கித் துன்புறவது போலச் சூது பொருளிழப்பைத் தரும்.

சூதில் காலம், அறிவு , உழைப்பாற்றல் , பொருள் அனைத்தையும் இழப்பதால் ''வேண்டற்க'' என்று ஐயத்திற்கிடமின்றிக் கூறினார். 931

932. ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு.

ஒன்றினைப் பெற்று நூறினை இழக்கும் சூதாட்டத்தை விரும்புபவர்களுக்கு நல்லன எய்தி வாழும் வழியும் உண்டோ?

ஒன்றினைப் பெறுதலும் நூறினை இழத்தலும் ஒருசேர நிகழாமல் சுழற்சி முறையில் நிகழ்தலால், ஒன்றினை அடைந்தவுடன் மேலும் அடைவோம் என்ற நம்பிக்கையிலேயே சூதாடுபவர்கள் முனைவார்கள். 932.

933 . உருளாயம் ஓவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

உருளும் சூதாடும் காயினை ஓயாது கூறிச் சூதாடுவோரின் பொருள், பகைவரிடத்திற்குப் போய்த் தங்கும்.

சூதாட்டத்தில் ஈடுபட்டமையால் பொருளைப் பேணுதலும் பொருளை ஈட்டலும் செய்யாமையின் பகைவரிடத்திலே குவியும் என்றார். 933.

934. சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
வறுமை தருவதொன் றில்.

அவமானம் தரக்கூடிய பலவற்றைச் செய்து சிறப்பினை அழித்து வறுமையைத் தருவதில் சூதினை நிகர்த்தது ஒன்றில்லை.
''சிறுமை'' - மதிப்பிழக்கச் செய்யும் தன்மை.
''சீரழித்தல்''- பெருமைக்குரிய குணங்களை அழித்தல்.
''வறுமை''- பொருளிலும் பணியிலும் வறுமை. 934.

935. கவறும் கழகமும் கையும் தருக்கி
இவறியார் இல்லாகி யார்

சூதாட்டத்தை மேற்கொண்டொழுகியவர்களில் கெடாதவர் யாராவது உண்டா? (கெட்டுப்போவார் என்பது கருத்து.)

''சூதாடுவோர் கழகம்'' சூதாடும் அவாவினைத் தூண்டி வளர்க்கும் என்பதே உண்மை. தனியே இருப்பவர் ஒரோவழி திருந்த வாய்ப்புண்டு. 935

936. அகடாரார் அல்லல் உழப்பர் சூதென்னும்
முகடியான் மூடப்பட் டார்.

சூதென்னும் மூதேவியால் கவரப்பட்டவர்கள் வயிற்றுக்குச் சோறும் உண்ணார்; அல்லலிலும் உழலுவர். 936

937. பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்.

துதாகும் வழக்கத்திற்கு பழகுதல் பழகிய செல்வத்தினையும் பண்பினையும் கொடுதல். ''பழகிய செல்வம்'' - என்பதால் வழி வழியாகவும், இளமைக் காலம் தொட்டும் உரிமை பூண்டு உழைத்து ஈட்டிய செல்வம் என்ற கொள்க. 937

938. பொருள்கெடுத்துப் பொய்மேல் கொளீஇ அருள்கெடுத்து
அல்லல் உழப்பிக்கும் சூது.

சூது, பொருளைக் கெடுக்கும்; பொய்யை மேற்கொள்ளச் செய்யும்; அருளைக் கெடுக்கும்; அல்லலில் உழலச் செய்யும். பொருள் இழத்தல் - வாழ்க்கையின் இன்றியமையாத் தேவைக்குப் பொய் கூறலும், பொய் பல சொல்லியும் பொருள் கிடைக்காது போயுழிக் களவு, கொலைப் மேற்கொள்ளுதலால் அருள் கெடுத்து என்றும், களவு, கொலைப் பழக்கத்தால் பெறும் துன்பத்தை அல்லல் என்றும் முறைப்படுத்திக் கூறிய அருமை அறிக.

ஒன்றிற்கு ஒன்று காரணமாதல் அறிக. 938.

939. உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்
அடையாவாம் ஆயம் கொளின்.

ஒருவன் சூதினை மேற்கொள்ளின் அவனை உடையும் செல்வமும் உணவும் புகழும் செல்வமும் கல்வியும் என்ற பேறுகள் ஐந்தும் வந்து பொருந்தாது. ஒளி என்பதற்கு உடல்- முகப்பொலிவு என்றும் பொருள் கொள்ளலாம். 939.

940. இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற்று உயிர்.

சூதில் பொருளை இழக்கும் தொறும் திரும்ப இழந்த பொருளைப் பெற முடியும் என்று சூதினை விரும்புவதைப் போல, உடம்பு துன்பத்தில் கிடந்து உழன்றாலும் உயிருக்கு உடம்பின் மீது உள்ள பற்று நீங்காது.

''திருந்துமாறு அரிது'' என்பது கருத்து. 940.

## 95. மருந்து

உடல் பிணியின்றி இருக்க உதவி செய்வது மருந்து. பிணி, பழவினையாலும் வரலாம். பழவினையால் வந்த பிணிக்கு - உடலுக்கு மருந்து; ஆன்மாவிற்கு நோன்பு. இம்மையில் பொருந்தாப் பழக்கங்களாலும் பிணி வரும். இப்பிணிக்கு உணவில் கட்டுப்பாட்டுடன் மருந்தும் தேவை.

இயற்கையோடிசைந்து வாழ்தலே சிறந்த மருத்துவம் சார்ந்த வாழ்க்கை. மண், நீர், தீ, வளி, கதிரவன் ஆகியன இயற்கை தந்த எளிமையான மருந்துகள். இவற்றைத் தூய்மை கெடாமல் பாதுகாத்துப் பயன்படுத்த வேண்டும்.

941. மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர
வளிமுதலா எண்ணிய மூன்று.

வாதம், பித்தம், சேத்துமம், ஆகிய மூன்றும் மிகினும் குறையினும் நோய் செய்யும் என்பது நூலோர் முடிவு. ''மிகினும் குறையினும்'' -என்பதில் உழைப்பை செயலைச் சேர்த்துக் கூறல் நன்மரபாகா. அதுவும் உழைப்பு மிகுதியாவதை மறுப்பது போல் அமைவது பொருந்தாது. 941.

942. மருநதென வேண்டாவாம் யாக்கைக்கு அருநதியது
அற்றது போற்றி உணின்.

ஒருவன் முன் உண்ட உணவு செரித்த பின் மீண்டும் உண்ணும் பழக்கம் மேற்கொள்ளின் மருந்து வேண்டாம். உண்ட உணவு செரித்தாலே அடுத்த உணவை வாங்கச் சிறுகுடல் ஆயத்தமாக இருக்கும். அதோடு உண்ட உணவு செரித்துச் செங்குருதியானாலே செரிமானம் செய்யும் ஆற்றல் கிடைக்கும். 942.

943. அற்றால் அளவறிந்து உண்க அஃதுஉடம்பு
பெற்றான் நெடிதுஉய்க்கும் ஆறு.

தேவைக்கேற்ப அளவறிந்து உண்க.அங்ஙனம் அளவறிந்து உண்டால் உடம்பொடு கூடி நெடுநாள் வாழ்தல் இயலும். உடம்பின் இயக்கத்திற்கு உணவு. ஆதலால் உடம்பின் இயக்க நிலைமைக்கு ஏற்ப, ஆற்றல் (கலோரி) தரும் உணவு உண்ண வேண்டும். ''அளவு'' - என்பது உணவின் அளவல்ல.ஆற்றல் - கலோரியின் களவு கனவின் கனிவைக் குறைத்தால் சிறுகுடல் ஒத்துழைக்காது காற்றுத் தொல்லைகள் ஏற்படும். 943.

944. அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

முன் உண்ட உணவு செரித்தமை அறிந்து உண்ணும் பழக்கத்தை மேற்கொண்டு ஒழுகின் உடல் நலத்திற்கு மாறுபாடில்லா உணவை மிகவும் பசித்தபின் உண்க.நல்லபசி, உடல் நலத்துக்குரிய சான்றுகளில் முதன்மையானது. 944.

945. மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு.

உடல் நலத்திற்கு மாறுபாடில்லாத உணவை, சுவை காரணமாக மேலும் உண்ணும் வேட்கை எழுந்தாலும் அந்த வேட்கையை மறுத்து அளவோடு உண்ணில் உயிர்க்கு யாதொரு இடையூறும் இல்லை. 945.

946. இழிவறிந்து உண்பான்கண் இன்பம் போல் நிற்கும்
கழிபேர் இரையான்கண் நோய்.

உணவு அளவில் கூடும்பொழுது, நோய் உண்டாகும் இயல்பறிந்து உண்பான்கண் இன்பம் நிற்கும். பெருந்தீனி தின்போனிடம் நோய் தங்கியிருக்கும். பெருந்தீனி தின்போனிடம் நோய் நிலையாக இடம்பெறுதல் போல, உணவு அளவால் கூடும்பொழுது நோய் உண்டாகும். இயல்பறிந்து உண்பானிடம் இன்பம் நிலை பெறும்.

நோய்க்குக் காரணம் மிகுதியான உணவே. 946.

947.தீயளவு அன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயளவு இன்றிப் படும்.

மிகுதியான உணவின் தீமையைத் தெரியாது பேருண்டி கொள்வான் உடம்பில் பல நோய்கள் இடம்பெறும். 947.

948. நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

நோய் இன்னதெனத் தெரிந்து தெளிந்து கொண்டு அந்நோய்க்குரிய காரணத்தையும் கண்டறிந்து அதன்பின் அந்நோயின் காரணத்தை மாற்றும் வாயில் அறிந்து அப்படியே செய்க.

இந்தக் குறள் 'மருந்து' அதிகாரத்தில் இடம்பெற்றிருந்தாலும் வாழ்க்கை முழுவதற்கும் பயன்படும் திருக்குறளாகும். 948.

949. உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல்.

மருத்துவன், நோயுற்றானின் பருவத்தையும் அவனுடைய நோயின் அளவையும் மருத்துவத்திற்குரிய கால அளவையும் எண்ணிச் செய்தல் வேண்டும். 'உற்றான் அளவு'-வயது; மருந்தினை ஏற்கும் உடல்திறன் அளவு; நோயுற்றானின் மருத்துவம் செய்து கொள்வதற்குரிய காலம்; பொருள் அளவுகள் என்றும் விரித்து எடுத்துக் கொள்க. 'பிணியளவு'- நோய் பற்றிய காலம்; நோயின் முதிர்ச்சி ஆகியவற்றையும் எண்ணுக. 949.

950. உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வான்என்று
அப்பால்நாற் கூற்றே மருந்து.

நோயுற்றவனே நோய்க்குத் தீர்வாளன்; அங்ஙனம் இருக்க மருந்து வழிச்

செல்வானேன்? முறை தப்பினால் சாவே மருந்து.நோயுற்றவன் தன் பழக்கவழக்கங்களை மாற்றினாலே நோய்க்குத் தீர்வு வந்து விடும். மருந்து அவசியம் இல்லை. 950.

## ஒழிபியல்

அறத்துப்பால், பொருட்பாலில் சொல்லாமல் விடப்பெற்று எஞ்சிநிற்பவைகளைக் கூற ஒழிபியல் என்று இயல் அமைத்துக் கொண்டார். ஒழிபியலில் ''சமூகம்'' அதிகமாகப் பேசப்படுகிறது.

### 96. குடிமை

குடிமை: ஒருவருடைய வழிவழித் தலைமுறையாக வரும் குடிமரபு. பிறிதொன்று நாட்டில் குறிக்கப்பெறும் குடி அமைப்பு. இவ்விரண்டும் ஏற்புடையனதான். ஏற்புழிக் கொள்ள வேண்டும். இன்று பழைய தடங்களின் வழியில்'குடும்பத் தலைமுறை குடிமரபே' ஏற்றுக் கொள்ளப் பெறுகிறது. இன்று நமது நாட்டில் ''குடிமைச் சீட்டு'', ''குடிமைப்பயிற்சி'' என்ற வழக்குகள் '' இந்தியக் குடியினர்'' என்பதையே குறிக்கின்றன.

951. இற்பிறந்தார் கண்ணல்லது இல்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு.

செம்மையும், நாணமும் உயர்குடிப் பிறந்தாரிடத்திலேயே இயல்பாக உண்டு. பிறரிடத்தில் இயல்பாகவே இல்லை.செப்பம்: சொல்லும் செயலும் ஒன்றாக அமைவது நாணம்: பழிபாவங்களுக்கு அஞ்சுதல். 951.

952. ஒழுக்கமும் வாய்மையும் நாணமும் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்.

உயர்குடியில் பிறந்தார் நல்லொழுக்கம், பொய் சொல்லாமை, நாணம் இம்மூன்றும் வழுவார்; காத்து வாழ்வர்.

''நாணும்'' என மீண்டும் கூறப் பெற்றமையால் ஒழுக்கம், பொய் சொல்லாமை, செப்பம் ஆகியன யாவும் நாணம் என்ற நல்லியல்பின் வழியே அமையும் என்ற குறிப்புணர்த்தியவாறு. 952.

953. நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

உயர்குடிப் பிறந்தார்க்குப் புன்முறுவல் பூத்த முகத்துடன் ஈகைப் பண்பும் இன்சொல்லும் மற்றவர்களை இகழாமையும் நான்கும் உரியனவாகும்.

இரப்பாரை இகழ்ந்து நோக்கிக் கடுஞ்சொற்களுடன் கொடுத்தால்

அது ஈகையன்று. 953.

954. அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர்.

உயர்குடியில் பிறந்தார் அடுக்காக உள்ள கோடி செல்வம் பெறினும், குடிப்பிறப்புக் குன்றும் இழி செயல்களைச் செய்யார்.

''கோடி பொருளினும் குடிப் பண்பு பெரியது''. 954.

955. வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பின் தலைப்பிரிதல் இன்று.

பழங்காலந்தொட்டு வழிவழி வரும் குடிமரபினர் வழங்குவது சுருங்கிய நிலையிலும் பண்புடைமையிலிருந்து நீங்கார்.

''கொடுப்பது சுருங்குதலே உயர் குடியினருக்கு வறுமை''. 955.

956. சலம்பற்றிச் சால்புஇல செய்யார்மாசு அற்ற
குலம்பற்றி வாழ்தும்என் பார்.

குற்றமிலா நற்குடிப்பிறந்து வாழும் பெற்றியுடையார் தாழ்வு வந்துழியும் வஞ்சனை செய்யார்.நேரடியான வாயில்கள் மூடப்பட்டுழி , வஞ்சனை வாயில்களைத் தேடுவது இயற்கை. ஆயினும் நற்குடிப் பிறந்தார் வஞ்சனை செய்யார் என்பது வலியுறுத்தியவாறு. 956.

957. குடிப்பிறந்தார்கண் விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து.

ஆகாயத்தில் உள்ள சந்திரனிடத்தில் உள்ள கருப்புப்போல, நற்குடிப் பிறந்தாரிடம் காணப்படும் குற்றம் விளங்கித் தோன்றும்.

உயர்ந்த குடியின் கண் தோன்றும் சாதாரணக் குற்றமும் விளங்கித் தோன்றும் ஆதலால் விழிப்புத் தேவை என்பதை உணர்த்தியது. 957.

958. நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும்.

உயர்குடிப் பிறந்தான் ஒருவனிடம் நலம் பயக்கும் பண்புகளுக்கு மாறான இயல்புகள் தோன்றினால் அவன் குடிப்பிறந்த குடிமரபு ஐயத்திற்குரியதாகும்.

உயர்குடிப் பிறந்தான் ஒருவன், தன் தவறால் தன்னுடைய குடியை ஐயத்திற்குரியதாக ஆக்க வேண்டாம் என்றவாறு. 958.

959. நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல்.

படுத்துக் கிடந்த நிலத்தின் இயல்பைக் கால்கள் காட்டும். அதுபோல நற்குடிப் பிறந்தாரை அவர்தம் வாய்ச் சொல் காட்டும்.

நிலத்தின் புழுதி அல்லது இயல்பு கால்களில் ஒட்டுதல் வழி புலப்படும். அதுபோல் நற்குடிப் பிறந்தாரைஅவர்தம் சொற்கள்புலப்படுத்தும். நெஞ்சு = நிலம் ; சொல் = கால். 959.

960. நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின
வேண்டுக யார்க்கும் பணிவு.

ஒருவன் நலம் வேண்டுவானாயின் நாணுதலை விரும்ப வேண்டும் உயர்குடிப் பிறப்பு வேண்டுவானாயின் எல்லோர்க்கும் பணிதல் வேண்டும். 960.

## 97.மானம்

தமக்கும் தாம் பிறந்த குடிக்கும் தாழ்வு வராது காக்கும் உணர்வு மானமாகும். செய்ய வேண்டுவனவற்றைச் செய்யாது இழிவுபடுதல், செய்ய வேண்டாதது செய்து இகழ்ச்சியுறுதல். தாமும் தம் குடியும் அறியாமையிலும் வறுமையிலும் கிடந்துழலும் கொடுமை கண்டு வருந்தல்; மாற்றம் விரும்புதல் ஆகியன மானமாம்.

961. இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்
குன்ற வருப விடல்.

உயர்குடிப் பிறந்தான் ஒருவன் தமது குடிப்பிறப்பின் பெருமை கெடாதவாறு வரும் சிறப்பு ( பெருமை) இன்றியமையாதவையாக இருப்பினும் ஏற்க மாட்டார்கள்.

வாழ்தலுக்கும் மேலும் வளர்தலுக்கும் உரிய சிறப்பு இன்றியமையாச் சிறப்பு.

ஒரு காரியம் செய்யாவிடத்துச் சிறப்பு வரும் என்றாலும் ''உயர் குடிப்பிறந்தார் செய்யா தொழிலின் '' என்றும் கூறுவர். தவறில்லையாயினும் சிறப்புடைப் பொருளாகாது. 961.

962. சீரினும் சீர்அல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

புகழ் தேடும் வழியிலும் சீரல்லதைச் செய்யார் சீரொடு பேராண்மை வேண்டுபவர்.

''பேராண்மை'' என்பது வஞ்சம் தீர்த்தல் அல்ல; அகிம்சையும் பேராண்மையே. 962.

963. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு.

செல்வப் பெருக்கத்தின் போது பணிவு வேண்டும். சிறுமையுடன் கூடிய வறுமை வந்த பொழுது பெருமித உணர்வு வேண்டும். ''செல்வச் செருக்கு'' பணிய ஒட்டாது. ஆதலால் செல்வ ஆக்கம் வந்த பொழுது பணிவு வேண்டும் என்றார். வறுமையின் உடன் வரும் இரத்தல் முதலிய இழிவுகளைத் தவிர்க்க ''உயர்வு வேண்டும்'' என்றார். 963.

964. தலையின் இழிந்த மயிர்அனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை.

தலையினை விட்டு நீங்கிய மயிரினை ஒப்பர் தம் நிலையின்றிழிந்த மாந்தர். ''இழிந்த'' என்பதால் தானே உதிர்ந்தது என்று கொள்க. வேண்டாத மயிரினை நீக்கவும் செய்கின்றனர். தலையினின்று பிரிந்த மயிர் இன்று சவுரியாக விலை போகிறது என்பதனை மறவாதீர். சவுரிக்கு நல்லமதிப்பு. 964.

965. குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின்.

குடிப்பிறப்பில் குன்று போல உயர்ந்து விளங்குவோரும் ஒரு சிறு குன்றிமணியளவு குடிப்பிறப்புக்கு ஒவ்வாத காரியங்களைச் செய்யின் குன்றி விடுவர்.

'' குன்றி - குன்றி மணி'' சிந்திக்கத்தக்கது. 965.

966. புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை.

புகழ் இல்லை; தேவருலகில் செலுத்துதலும் இல்லை. அஃது தெரிந்தும் தம்மை இகழ்வார் பின் சென்று நிற்றல் ஏன்?புகழ்பட வாழ்தல் வேண்டும். அங்ஙனம் புகழ் படவும் வாழாமல் இகழ்வார்பின் சென்று நிற்றல் தகாது. 966.

967. ஒட்டார்பின் சென்றுஒருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று.

ஒருவனுக்குத் தன்னை ஒட்டி உறவு கொள்ளாது இகழ்வார் பின் வாழ்வதை விட, அவன் கெட்டுப் போனான் என்ற சொல்லோடு வாழ்தல் நன்று.

விரும்பி உறவு கொள்ளாது இகழ்வாரின் பின் செல்வதில் என்ன பயன்? ஒன்றுமில்லை. மானமிழப்பதுதான் மிச்சம்.

''கெட்டான்'' பொருள் முதலிய வளத்தில் குன்றிப் போன நிலை. 967.

968. மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த இடத்து.

ஒருவருக்குப் பெருந்தன்மையும் பெருமையும் அழியும் சூழல் வந்துற்ற போழ்தும் சாவாமல் உடலோம்பி வாழ்தல் சாவாமைக்கு மருந்தோ?

''சாவாமைக்கு மருந்து'' பெருந்தகைமையுடன் வாழ்தலேயாம். ''ஊனோம்பும் வாழ்க்கை'' என்றது ''உயிர் இல்லை'' என்றுணர்த்த. 968.

969. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

கவரிமான் தன் உடலில் உள்ள ஒரு மயிர் நீங்கினாலும் வாழாது. அதுபோல அவமானம் வந்துழி உயிர் நீப்பர் சான்றோர்.

''மானம் உயிர்நிலை'' என்று வாழும் நெறி. 969.

970. இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு.

அவமானம் வந்த பொழுது வாழ்தல் செய்யாது மரணத்தைத் தழுவுவோரின் புகழை உலகு தொழுது வாழ்த்தும்.

''மானத்துடன் வாழ்தலே புகழ்'' என்றுணர்த்தியது. 970.

## 98. பெருமை

மற்றவர்களால் தகுதி நலங்கருதிப் பாராட்டப் பெறுதல் பெருமை எனப்படும். மானத்துடன் வாழ்தலின் மூலம் அடையக் கூடியது பெருமை.

971. ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை இளிஒருவற்கு
அஃதிறந்து வாழ்தும் எனல்.

ஒருவனுக்குப் பெருமையாவது செயற்கரிய செயல் செய்யும் ஊக்கமுடையான் என்று மதிக்கப்படுதல். ஒருவனுக்கு இழிவாவது செயலிழந்தும் வாழ்வோம் என்று எண்ணுதல்.

செயற்கரிய செய்கள் மூலம்தான் புவியை நடத்த இயலும். அதற்குரிய ஊக்கம் உடையவராய் இருத்தலும் அந்நிலையைப் பிறர் மதித்தலும் பெருமை.

''செயலற்ற நிலையில் வாழ்தல் இழிவு''. 971.

972. பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

எல்லா உயிர்களும் பிறப்பால் ஒத்தன. செய்கிற தொழில் வேற்றுமையால் சிறப்புரிமை பெற உரிமையுடையன அல்ல. பிறப்பில் எல்லா உயிர்களும் இயல்பில் - உரிமையில் ஒரே தன்மையுடையன. ஆயினும் வளர்ச்சியின் காரணமாக தொழில் வேறுபாட்டால் - அவ்வேறுபாட்டின் காரணமாகச் சிறப்புரிமைகள் பெறத் தகுதியுடையன அல்ல. 972.

973. மேல்இருந்தும் மேல்அல்லார் மேல்அல்லர் கீழ்இருந்தும்
கீழ்அல்லார் கீழ்அல் லவர்.

உயர்ந்த இடத்தில் இருப்பவர்கள் பெரியவர்கள் அல்லர். ஒருவர் தாழ்ந்த நிலையிலிருந்தாலும் பெருமைக்குரியரல்லர் என்று கூறல் இயலாது.

பெரிய இடத்தில் சின்னப் புத்தியுடையவர்களும் சின்ன இடத்தில் மிகப் பெரிய பண்புடையவர்களும் இருக்கிறார்கள் என்பது கருத்து.இருக்கும் இடம் - நாற்காலி பெருமைக்குரியன அல்ல.பண்புடைமைதான் காரணம். 973.

974. ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு.

ஒருவனிடமே உள்ளத்தை வைக்கும் மகளிரைப் போல் ஒருவன் தான் மேற்கொண்டுள்ள பண்பு நழுவாமல் வாழ்ந்தால் பெருமை உண்டு. மகளிர்க்குக் கற்பு; ஆடவர்க்குப் பண்பாடு பெருமைக்குரிய ஒழுகலாறாகும் 974.

975. பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல்.

பெருமைக்குரியவர்கள் எந்தச் சூழ்நிலையிலும் செயற்கரிய அருமையுடைய செயல்களையே செய்வர் செயற்கரிய செயல்களைச் செய்து முடித்தலிலேயே பெருமை தங்கி இருக்கிறது. 975.

976. சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணிக்கொள் வோம்எனும் நோக்கு.

தம்மில் பெரியோரைப் பேணி ஒழுகும் இயல்பு சிறியவர் உணர்வில் இல்லை. "சிறியோர்" - தம்மைத் தாமே வியந்து கொள்ளும் இயல்பினர். ஆதலால் பெரியாரைப் பேணும் நெறி அறியார். 976.

977. சிறப்பே புரிந்த தொழிற்றாம் சிறப்புந்தான்
சீரல் லவர்கண் படின்.

பெரியாருக்குரிய சிறப்புத் தானும் சிறியோர்கண் வந்து பொருந்திடின் தருக்கின் வழிப்பட்ட செயல்களையே செய்வர்.

978. பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து.

பெருமையுடையவர் என்றும் பணிவுடன் நடப்பர். சிறியோர் தன்னைத் தானே வியந்து தருக்கித் திரிவர்.

''பெருமைக்கு அடையாளம் பணிவு''.

''சிறுமைக்கு அடையாளம் செருக்கும், தற்புகழ்ச்சியுமாம்''. 978.

979. பெருமை பெருமிதம் இன்மை சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல்.

செருக்கின்றி எல்லோருக்கும் தாழ்ந்து வணங்கி மகிழ்தல் பெருமை. சிறுமை தருக்கித் திரிதல்.

வணங்கிய வாயினராதலின் மிகு பயன் உண்டு. 979.

980. அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

பெருமையுடையார் பிறர் குற்றங்களை மறைப்பர். சிறுமையுடையார் பிறர் குற்றங்களையே கூறுவர்.

''சிறமை குற்றமே கூறி விடும்'' என்றதால் பெருமையுடையோர் பெருமைகளைக் கூறுவர் என்று கொள்ள வேண்டும்.

பெருமை, குற்றங்களை மறைத்துப் பெருமைகளைக் கூறும். சிறுமை பெருமைகளை மறைத்துக் குற்றங்களைக் கூறும்.

மானுடப் பிறப்பில் குற்றங்கள் இல்லாதவர் இல்லை என்பதறிக. 980.

## 99. சான்றாண்மை

நன்மையான குணங்கள் பலப்பல. ஒருவர் எந்தெந்தக் குணங்கள் நற்குணங்கள் என்று தெரிந்து வைத்திருப்பாரோ அந்த நற்குணங்களைப் பற்றிப் பேசுவார்;விரித்துரைப்பார். ஆனால், அந்த நற்குணங்களைத் தம்முடைய வாழ்க்கையில் ஆளுமையுடன் அனுட்டிக்க மாட்டார். நற்குணங்களைத் தம் வாழ்க்கையில் ஆளுமையுடன் கடைப்பிடித்தல் சான்றாண்மை எனப்படும்.

981. கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

ஒருவருடைய கடமையாவது நல்லனவற்றையெல்லாம் அறிந்து ஆளுமையுடன் ஒழுகுதல். அவ்வாறு செய்வார்க்கு நல்லியல்புகள் தாமே வந்தமையும்.தன்னுடைய கடமையாகிய நல்லனவற்றை ஆளுமையுடன் சார்ந்து

ஒழுகுதல் செய்வாருக்கு நல்லவையெல்லாம் இயற்றுதல் கடமை என்று கூறலாம்.
''அமைதி'' சால்புகளில் எல்லாம் சிறந்தது. அமைதி வாய்ப்பின் மற்ற குணங்களும் வந்தமையும். 981.

982. குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத்து உள்ளதூஉம் அன்று.

சான்றோரின் நலம் நற்குணங்களால் ஆய நலம். பிற நலன்கள் ஒரு நலத்தினும் உள்ளதன்று.
''பிறநலம்'' உடல் உறுப்புக்கள் அமைதல், அறிவு, செல்வம் முதலியன. 982.

983. அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண்.

அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்ற ஐந்து நற்குணங்களும் ஊன்றிய தூண்களாக சான்றாண்மை தாங்கி நிற்கின்றன.
அன்பு என்பது தன்னலம் பாராட்டாது, மற்றவர்களிடம் பரிவு காட்டுதலாகும்.
தகாதன செய்ய அஞ்சுதல் நாணம். ஒத்ததறிந்து கூடி வாழ்தல் ஒப்புரவு. தொடர்புடையார் மாட்டுத் தவறுகள் கண்டபோது கடுந்தண்டம் வழங்காது அறிவுறுத்தல் முதலிய முயற்சிகளால் மேம்படுத்தல கண்ணோட்டம். 983.

984. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

கொல்லாமையை மேற்கொள்ளுதலே நோன்பு. பிறர் குற்றத்தைச் சொல்லா நலமே சான்றாண்மை.
பிறர் குற்றம் கூறுதல் மூலம் தீமைகள் விளைதலினும் நலம் விளைவதற்குரிய வாயில்கள் தடைப்படுவதனாலும் ''பிறர் தீமை சொல்லா நலத்தது சால்பு'' என்றார். 984.

985. ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

ஓர் அறச் செயலைச் செய்வோரின் ஆற்றல் பணிவுடைமையில் இருக்கிறது. சால்புடையார் தம்முடன் ஒத்து வராதாரை மாற்றும் கருவியாகத் தழுவித் துணையாகக் கூட்டிக் கொள்ளுதலேயாம்.
உடன்படாதாரைப் பகைவர் நிலையிலேயே நீட்டித்து வைத்துக் கொண்டிருந்தால் வீண் வம்பும் சண்டையும் தான் மிகும். காரியம் எதுவும் செய்ய இயலாது. 985.

986. சால்பிற்குக் கட்டளை யாதெனின் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்.

ஒருவருடைய சால்பினை அறிதற்குரிய சோதனை அவர் தமக்கு ஒப்புமை இல்லாதாரிடத்தும் ஏற்பட்ட தோல்வியை ஒத்துக் கொள்ளல்.

சாதாரணமாகத் தோல்வி, பெரிய இடத்தில் ஏற்படுமாயின் எல்லோரும் ஏற்றுக் கொள்வர். (குட்டுப்பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்படுதல் என்ற பழமொழியை ஒப்பு நோக்குக) தம்மில் தாழ்ந்தாரிடத்தில் தோல்வியுறின் தோல்வியை ஒப்புக் கொள்ளார். அதாவது, தம்மின் தாழ்ந்தார் பெற்ற வெற்றியைக் கொச்சைப்படுத்துவர்.

''துலையல்லார்'' -ஒப்பு நோக்கக் கூடி தகுதி இல்லாதவர். 986.

987. இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.

தமக்குத் தீமையே செய்தார்க்கும் இனியவே செய்வதைத் தவிர்த்தால் சால்பினால் ஆய பயன் என்ன?

''தீமைக்கு நன்மை'' என்ற நியதியே மனித உலகத்தை வாழ்விக்கும். 987.

988. இன்மை ஒருவற்கு இளிவுஅன்று சால்புஎன்னும்
திண்மைஉண் டாகப் பெறின்.

ஒருவனுக்குச் சால்பென்னும் வலிமை உண்டாயின் அவருக்கு வறுமை இழிவன்று.

சால்பின் வழி வாழ்வோருக்குச் செல்வத்தினால் யாதொன்றும் ஆகப் போவதில்லை. அதனால் ''இன்மை இளிவன்று'' என்று கூறினார்.

சாண்றாண்மையே நற்பண்புகளின் உறுதிப்பாடுதான். மேலும் சால்புக்குத் திண்மை என்று கூறிச் சால்பினை வலியுறுத்துகின்றார். 988.

989. ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார்.

சான்றாண்மைக்குக் கடல் என்று சொல்லப்படுபவர்கள் ஊழி மாறினாலும் தாம் சால்பிலிருந்து தவறார்.

'' ஊழி பெயர்தல்''- துன்பங்களுக்கு ஏதுவான உலக மாற்றம் ''கடல்'' எனப்படுதல் - கடலுக்குக் கரை இல்லை. கடல் சாதாரணமாகக் கரையைக் கடப்பதும் இல்லை. அதுபோலக் கட்டுப்பாடுகள் இல்லாமலே சால்பினை மேற்கொள்பவர் என்பது கருத்து. 989.

990. சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை.

சால்புடையார் தமது சால்பில் குறைபடுவோராயின் இந்தப் பூமியும் சுமையைப் பொறுமையுடன் தாங்காது.

புவி பொருத்துத் தாங்கும் இயல்பை நிகர்த்தது சால்பு. 990.

## 100. பண்புடைமை

பெருமை, சான்றாண்மை முதலிய இயல்புகளினின்று வழுவாமல் மற்றவர்களுடைய ஆர்வம், விருப்பம் முதலியன அறிந்து அவர்கள் உவப்பப் பழகுதல் பண்புடைமை.

நன்றாக உழுது வளப்படுத்தப் பெற்ற நன்செய் தப்பாது வளம் தருதல் போல, நல்ல வண்ணம் புலன்களிலும், பொறிகளிலும், பக்குவம் பெற்ற இதயம் சிறந்த பண்பாடுடையவர் நன்மையே செய்வர்.

991. எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு.

யார்மாட்டும் அணுகுதலுக்கு எளியராகப் பழகும் இயல்பு அமைந்துவிட்டால் அவர் பண்புடையராதல் எளிது.

அணுகுதலுக்கு எளியராக இருக்கும் இயல்பு, எல்லாரிடத்தும் இருப்பதில்லை. அணுகுதலுக்கு எளியராக இருப்பர். அந்த இயல்பின்வழி பலருடனும் பழகும் வாயில்கள்அமைவதால் பண்புடைமையும் அமையும் என்பதறிக. 991.

992. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடைமை என்னும் வழக்கு.

கல்வி, கேள்விகளில் சிறந்த குடிப்பிறத்தலும் அன்புடையராதலும் ஆகிய இவ்விரண்டும் ஒருவருக்கு அமையின் அதுவே பண்புடைமையாக அமையும் என்பது உலக வழக்கு.

கல்வி, கேள்விகளில் சிறந்த குடிப்பிறத்தல் வழி தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து பழக்கப்பட்ட குடியாதலால் அக்குடியின் கண் தோன்றுவாரிடத்து இயல்பாகவே அன்பு பொருந்தியிருக்கும் என்பது கருத்து.

''ஆன்றகுடி'' - வளர்ந்த குடும்பம் என்றும் பொருள் கொள்ளலாம் 992.

993. உறுப்புஒத்தல் மக்கள்ஒப்பு அன்றால் வெறுத்தக்க
பண்புஒத்தல் ஒப்பதாம் ஒப்பு.

உறுப்புகளால் ஒத்து இருப்பதால் மக்களுடன் ஒப்பாதல் இல்லை. உறுப்புகள் அமைவு மட்டும் பெற்று விளங்குவது வெறுக்கத்தக்கது. பண்பாட்டில் ஒத்திருத்தலே மக்களொடு ஒப்புடையது.

மானுட உறுப்புக்கள் பெற்றும் மானுடப்பண்பு பெறாதொழியின் மானுடர் அல்லர் என்பது கருத்து. 993.

994. நயனொடு நன்றி புரிந்த பயன்உடையார்
பண்புபா ராட்டும் உலகு.

நீதியையும், நன்மையையும் விரும்பிச் செய்யுமாற்றால் பயனுடையராக வாழ்பவரின் பண்பை உலகு பாராட்டும்.

நீதிச் சார்புடையார் செய்வதே நன்மை. அந்நன்மையே பயனுடையது என்ற உண்மை உணர்த்தியவாறு. 994.

995. நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்
பண்புஉள பாடறிவார் மாட்டு.

நகைத்து மகிழ்வுடன் இருக்கும்போழ்தும் ஒருவரை இகழ்தல் தீது. பகைமையுடையாரிடத்தும் உள்ள பண்புகளையே காட்டல் வேண்டும். இன்னாதன கூடா.

மகிழ்ந்து வாழும் காலத்திலும் சரி. பகைமை வந்த போதும் சரி. இன்னாதன செய்யாமையே பண்பாடு. 995.

996. பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அது இன்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

பண்புடையார்கள் இடத்தில் உலகியல்பும் உலக இயக்கமும் உண்டு. பண்புடையாரிடத்தில் உலகியல்பு இல்லையாயின் இந்த உலகம் மண்ணுக்குள் புகுந்து அழிவதாகும்.

உலகியல்பாவது ஒப்புரவும் நட்புமாம். இவையிரண்டும் உலகை இயக்குவன. உலகை நடத்துவன. 996.

997.அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர்.

அரத்தைப்போன்ற கூர்த்த புத்தியுடையவராயினும் மக்கட் பண்பில்லாதவர் மரத்தினை ஒப்பர்.

அரம் இரும்பை அரித்து அழிப்பது போலக் கூர்த்த மதியுடையார் பண்பாடு பெறாது ஒழியின் தம்மைச் சார்ந்தாருக்குப் புத்திக் கூர்மையினால் தீமையே செய்வர். 997.

998. நண்புஆற்றார் ஆகி நயம்இல செய்வார்க்கும்
பண்புஆற்றார் ஆதல் கடை.

தம்மிடம் நட்புப்பாராட்டாது பகைமை செய்தொழுகுவாருக்கும் தாம் பண்புடையராக ஒழுகுதல் இல்லாதவர் கடையரே.

தீமைக்குத் தீமை கடையர் கொள்கையாதலால் பகைவர் மாட்டுப் பண்பொடு பழகாதாரையும் 'கடை' என்றார். 998.

999. நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள்.

ஒருவரோடொருவர் கலந்து பேசி நகைத்து மகிழ்ந்து வாழ்வதறியாருக்குப் பகலும் இருள் நிறைந்த இரவு போலவேயாம்.

மனமுரண்பாட்டால்-பகையால் கண்டும் காணாமலும், ஒரோவழிக் கண்டாலும் நெஞ்சொடுபட்ட சொற்கள் பேசாமலும் மகிழாமலும் வாழ்தல் இருள்நிறைந்த வாழ்க்கை என்பது உணர்த்தியது. 999.

1000. பண்புஇலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலம்தீமை யால்திரிந் தற்று.

நல்ல பால், வைக்கப்பெற்ற பாத்திரத்தினால் கெட்டுப்போவதைப்போலப் பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம், கெட்டுப்போம். செல்வத்தின் பயன் நன்மை செய்தலே. பண்பிலான்பெற்ற செல்வம், வம்புக்கும் வழக்குக்குமாதலால் செல்வம் கெட்டது என்று என்றார். 1000

## 101.நன்றியில் செல்வம்

நல்லவனவற்றிற்குப் பயன்படாத செல்வம் நன்றியில் செல்வம். நன்றியில் செல்வம்- செல்வமுடைமையின் குறை. செல்வத்தின் மேலும் வைத்துக் கூறப்பட்டது. ஆயினும் செல்வம் சடப்பொருளேயானாலும் கிரியா ஊக்கியாக இருக்கும் இயல்பு அதற்கு உண்டு.

1001. வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள்அஃதுஉண்ணான்
செத்தான் செயக்கிடந்தது இல்.

உண்ணாது துய்க்காது சேர்த்து வைத்த செல்வத்தைக் கொண்டு யாதொன்று செய்யமாட்டாமையினால் செத்தான் என்றே கொள்ளுதல் வேண்டும்.

செல்வத்தின் பயனைத் துய்க்காமையினால் செத்தான என்றார். 1001.

1002. பொருளான்ஆம் எல்லாம்என்று ஈயாது இவறும்
மருளான்ஆம் மாணாப் பிறப்பு.

கைப்பொருளால் எல்லாம் ஆம் என்று அறிந்து பெரும்பொருள் திரட்டி அங்ஙனம் திரட்டிய பொருளைப் பிறருக்கு உதவாமல் ஆசையால் செல்வத்தை இவறிக் கூட்டிச் சேர்ப்பானாகில் மறுமையில் பேயாய்ப் பிறப்பான்.

பேய், தானும் வாழ்தல் இல்லை.மற்றவர்கள் வாழத்துணை செய்வதுமில்லை. 1002.

1003. ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை.

பொருள் சேர்க்கும் ஆசையால், புகழை விரும்பாத ஆடவர்களின் பிறப்பு நிலத்திற்குச் சுமையே.

பிறப்பின் சிறப்பு புகழேயாம். புகழற்றவர்கள் நிலத்திற்குச் சுமையே என்ற உண்மையை உணர்க. 1003.

1004. எச்சம்என்று என்எண்ணும் கொல்லோ ஒருவரால்
நச்சப் படாஅ தவன்.

எவரும் அணுகமுடியாதவனாய்ப் பொருள் சேர்த்தவன், தான் செத்த பிறகு, தன்னுடன் வருவது எது என்று எண்ணானோ?

பொருள் தொடர்வதுமன்று; நிலையானதுமன்று. அறமும் புகழும் தொடரக் கூடியன; நிலைத்து நிற்பனவும் கூட! 1004.

1005. கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடிஉண் டாயினும் இல்.

பிறருக்குக் கொடுத்தலும், தாம் துய்த்தலும் இல்லாதவனுக்கு, கோடி அடுக்கிய செல்வம் இருப்பினும் அச்செல்வத்தால் என்ன பயன்?

செல்வத்தின் பயனாகிய ஈதலையும் துய்த்தலையும் இழந்தமையின் செல்வத்தால் பயனில்லை என்றார். 1005

1006. ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்கு ஒன்று
ஈதல் இயல்பு இலா தான்.

தானும் அனுபவிக்காமலும் உதவிசெய்யத் தகுதியுடையார்க்கு உதவுதலும் ஆகிய இயல்புகள் இல்லாதவனுக்கு அவன் பெற்ற பெருஞ்செல்வம் பெருந்துன்பமேயாம்.

செல்வத்தைப் பிறர் கவராமல் காத்தலாகிய பெருந்துன்பம் வரும்.

பயன்படும் செல்வமாயின் எவரும் தமது தமது எனப் போற்றிப்பாதுகாப்பர் என்பதறிக. 1006.

1007. அற்றார்க்குஒன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று.

வறியோருக்குக் கொடுத்து உதவாதவன் செல்வம் எழில்நலமனைத்தும் பெற்ற பெண் ஒருத்தி, தனியே வாழ்ந்து மூப்படைதலை ஒக்கும்.

பெண்ணின் எழில்நலம் திருமணம்வழி, கணவனின் அனுபவத்திற்குரியதாகி அவ்வழி மக்கட்பேறு கிட்டுகிறது. பெண்ணின் எழில்நலம், மக்கட்பேறு என்ற பயனைத் தருகிறது. அதுபோலச் செல்வத்தின்பயன் வறியோருக்கு உதவுதலும் அவ்வழி புகழ்- புத்தேள் உலகு பெறுதலும் ஆம். 1007.

1008. நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

ஒருவராலும் விரும்பப்படாத செல்வம், நடுவூருள் நச்சுமரம் பழுத்தது போன்றது.

நஞ்சுமரம் தம்மை நண்ணினார்க்குத் துன்பம் தருதல் போல, அணுகி உதவிகள் பெற முடியாத செல்வன் ஊராருக்குத் துன்பங்கள் விளைவிப்பான்.

''நச்சப்படாதவன் செல்வம்'' - உதவாமை மட்டுமன்று. சுரண்டுதலின் மூலம் செல்வம் அடைவான் தரும் துன்பமும் சேரும். 1008.

1009. அன்புஒரீஇத் தற்செற்று அறம் நோக்காது ஈட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.

சுற்றத்தாரிடம் அன்பை விலக்கியும், தான் துய்க்காமல் வருந்தியும் அறநெறியில் உதவாமலும் தேடிக் காத்து வைத்த செல்வத்தை அந்நியர் தாமே எடுத்துச் செல்வர்.

''பிறர்'' -என்றதால் உரிமை வழியும் அறநெறிவழியும் உரிமையுடையாரல்லாத கள்வர், பகைவர் எடுத்துச் செல்வர் என்று உணர்க.

சுற்றத்தாருடன் கூடி உண்டு கலந்து மகிழ்தலினும் அறநெறிவழி உதவுதலினும் செல்வத்தின் பயன் கிடைத்து மகிழ்ச்சி கிடைக்கிறது. சுற்றத்தால் சூழப்படுதல் கிடைக்கிறது. இங்ஙனம் வாழ்ந்தால் செல்வம் இழப்பல்ல. பிறர் கவர்தலில் செல்வம் இழப்பு மட்டுமல்ல;மானமும் போகிறது. 1009.

1010. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங் கூர்ந்து அனையது உடைத்து.

சிறப்புடைய செல்வர் வறியவருக்கு எல்லாம் கொடுத்துத் தாம் வறியராதல், மேகம் மக்களுக்கு மழை பொழிந்து வற்றி விடுவது போன்றது.

வான்மழை பொழிந்து வையகத்தை வளமாக்கி வறிதாவதுபோல், மேலான செல்வர் வறியோர்க்குதவி, வளம் தந்து வறியவராவர்.

இத்தகு வறுமை ஏற்றுக் கொள்ளத்தக்கது. 1010.

## 102. நாணுடைமை

நன்மைக்கு மாறாகவும் நன்னெறிக்கு ஒவ்வாதனவும் செய்ய நாணுதல். நாணுதல்-வெட்கப்படுதல்.

1011. கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற.

நன்மக்கள் இழிந்த செயல்களைச் செய்ய நாணப்படுவர். குலமகளின் நாணம் வேறு.

மகளிர் நாணம் மனம், மொழி, மெய்யால் மேம்பட்டுக் காண்பது. சான்றோர் நாணம் செயல்களில் வெளிப்படுவது. 1011.

1012. ஊண்உடை எச்சம் உயிர்க்குஎல்லாம் வேறல்ல
நாண்உடைமை மாந்தர்க்கு இயல்பு.

உணவும் உடையும் இன்னபிறவும் உயிர்களுக்கெல்லாம் வேறுபடா. நாணம் உடைமை மாந்தருக்குச் சிறப்பாகும்.

''எச்சம்'' என்றது காமம் என்று கொள்ளலாம்.

''உடை''- சொல்லியிருப்பதால் மாந்தர் என்று கொள்வதே சரி. பொதுவாகவன்றி, நாணுடையவராக இருத்தல் மாந்தருக்குச் சிறப்பு என்று கொள்ளுதல் நல்லது. 1012.

1013. ஊனைக் குறித்த உயிர்எல்லாம் நாண்என்னும்
நன்மை குறித்தது சால்பு.

எல்லா உயிர்களும் உடம்பினைப் பற்றுக் கோடாக உடையன. நாணம் என்ற நன்மையைப் பற்றி நிற்கும் சால்பு.

உயிர் உடம்பினைக் கருவியாகப் பெற்றாலே பயன்.

சால்பும் நாணொடு கூடியல்லது பயன் இல்லையாம்.

உயிர், உடம்பினைப் பிரிதல் சாவு. நாணை இழந்தால் சால்பும் போகும். 1013.

1014. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு அஃதின்றேல்
பிணியன்றோ பீடு நடை.

சான்றோர்க்கு நாணம் உடைமை அணியாகும். சான்றோரிடம் நாணம் இன்றேல் அவர்தம் பெருமிதத்துடன் கூடிய நடை பிணியாகும்.

நாணம் இல்லாதாரின் பெருமிதம் பிணி என்றுணர்த்தியது அறிக. 1014.

1015. பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு.

பிறருக்கு வரும் பழியையும் தமக்கு வரும் பழியையும் ஒப்ப மதித்து நாணுவாரை, நாணத்தின் உறைவிடமாவர் என்று உலகு பாராட்டும்.

பிறர்பழியும் தம்பழிபோல் என்பதாவது, ''கொடுக்க இயலாதாரிடம் இருந்து கேட்டு அவர் கொடாமையினால் வரும் பழியைச் சுமக்க வைத்தல் போல'' என்று கொள்ளலாம். அல்லது தாம் செய்த பழிபடு செயலை மறைத்துப் பிறர்மேல் கூறார் என்று கொள்ளலாம். 1015.

1016.நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

மேலானவர்கள் நாணத்தை வேலியாகக் கொள்ளாது அகன்ற உலகத்தை விரும்ப மாட்டார்கள்.மேலானவர்கள் ஞாலத்தினும் நாணத்தையே விரும்பி ஏற்பர் என்றவாறு. 1016.

1017. நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப் பொருட்டால்
நாண்துறவார் நாணாள் பவர்.

நாணத்திற்காக உயிரைத் துறப்பர். உயிர் காப்பதற்காக நாணினைத் துறக்க மாட்டார்கள். நாணினை ஆளும் சான்றோர்கள். 1017.

1018. பிறர் நாணத் தக்கது தன்நாணான் ஆயின்
அறம்நாணத் தக்கது உடைத்து.

பிறர் நாணக் கூடியவைகளுக்குத் தான் நாணாது இருப்பானாயின் அவனை அறம் நாணும். பிறர் நாணக் கூடியவைகளுக்கு நாணாதான் இயல்பு அறம் கண்டு நாணத்தக்கதாகும். 1018.

1019. குலம்சுடும் கொள்கை பிழைப்பின் நலம்சுடும்
நாண்இன்மை நின்றக் கடை

கொள்கையில் பிழை செய்தால் குலம் சுடும். நாணினை நீக்கியவிடத்து நலமனைத்தும் சுடும். கொள்கையிலும் நாணம் உயர்ந்தது. 1019.

1020. நாண்அகத்து இல்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி அற்று.

அகத்தே நாணம் இல்லாதார் உயிர் வாழ்தல், மரப்பாவை உயிருடையார்போல மயக்கியதாகும்.
நாணம் இல்லாதார் மரப்பாவையனையர். 1020.

## 103. குடிசெயல்வகை

ஒருவன் தான்பிறந்த குடியை வளமாக வளர்த்தல்; உயர்த்துதல்.

1021. கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்
பெருமையில் பீடுஉடையது இல்.

ஒருவன் தான் பிறந்த குடியுயரக் கூடிய பணிகளைச் செய்யும்பொழுது கைப்பணி களிலிருந்து விலகாமல் தொடர்ந்து செய்யும் பெருமை பெறின் அப்பெருமையால் அவன் பிறந்த குடி பெருமைக்குரியதாகும்.

குடியாக்கத்திற்குரிய பணிகளைச் செய்யும்பொழுது ஒன்றிரண்டுடன் நிற்காமல் இடையில் கைகட்டாமல் தொடர்ந்து செய்தால் அவன் பிறந்த குடி பெருமை பெறும். 1021.

1022. ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்
நீள்வினையான் நீளும் குடி.

ஆள்வினையுடைமையாலும் அனுபவமிக்க அறிவினாலும் தொடர்ச்சியாகச் செய்யும் பணிகளால் குடி வளரும்.

அறிவும் ஆள்வினையும் சேர்ந்து செயல்பட்டாலே பயன் உண்டு. பிறிதோரிடத்து ''அறிவறிந்த ஆள்வினை'' என்றார்.

உலகியலில் அறிவுடையோர் பலர். ஆள்வினையுடையாரைக் காண்பதரிது. 1022.

1023. குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான் முந்துறும்.

தாம்பிறந்த குடியை வளர்ப்பேன் என்று முன்முயற்சி எடுக்கும் ஒருவனுக்கு, தெய்வம் உடையை மடித்துக் கட்டிக் கொண்டு துணை செய்ய முன்வரும்.

தாம் பிறந்த குடியை வளர்க்கும் முயற்சியில் ஈடுபடுவோருக்குக் கடவுள் துணை உண்டு. 1023.

1024. சூழாமல் தானே முடிவுஎய்தும் தம்குடியைத்
தாழாது உஞற்று பவர்க்கு.

ஒருவன் தான் பிறந்த குடியை ஆக்கும் முயற்சியைத் தாழாமல் செய்வானாயின் அம்முயற்சி வெற்றி பெறும். அக்குடி உயர்தல் ஒருதலை.

தாழாது செய்யும் முயற்சிகளால் குடிமேம்பாடு உறுதி என்றுணர்த்தியவாறு. 1024.

1025. குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாய்ச் சுற்றும் உலகு.

தான் பிறந்த குடியினருக்குக் குற்றம் செய்யும் இயல்பு இல்லாதவனாகக் குடிமேம்பாட்டுப் பணிகளைச் செய்து வாழ்வோனை இந்த உலகத்தவர் சுற்றமாக ஏற்றுச் சுற்றுவர்.

சுற்றஞ்சூழ வாழ்தலுக்குக் குடி செய்தல் பயன்தரும். 1025.

1026. நல்லாண்மை என்ப ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல்.

ஒருவனுக்கு நல்லாண்மை என்று சிறப்பித்துச் சொல்லப்பெறுவது தான் பிறந்த குடியைத் தனக்குரிமையாக்கித் தலைவன் ஆதல் ஆம்!

ஒருவனுக்கு அவன் பிறந்த குடியில் பெரும்பாலும் மதிப்பு இருப்பதில்லை. அதனால் இல்லாண்மையை நல்லாண்மை என்று கூறினார். 1026.

1027. அமர்அகத்து வன்கண்ணர் போலத் தமர்அகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை.

போர்க்களத்தில் வீரமுடையான் ஒருவன் போராடிப் பலரையும் காப்பான். அதுபோலத் தன்னைச் சார்ந்த சுற்றத்தார் பலரின் பொறுப்பையும் ஏற்றுச் செயற்படுவான்கண் பொறுமை உண்டு.

சுற்றத்தார் பலவகை. வாழத் தெரிந்தவர்களும் இருப்பர். வாழ

இயலாதவர்களும் இருப்பர். வாழ இயலாதவர்களுக்கும் பொறுப்பேற்று வாழ்விப்பதே குடிசெயல்.

மற்றவர் சுமையையும் பொறுப்பையும் முணுமுணுக்காது தாங்குதலால் ''பொறை'' என்றார்.

உலகவழக்கில், ''பாரந்தாங்கல்'' என்பர். ''தமக்கன்பு பட்டவர் பாரமும் பூண்பர்'' என்ற அப்பரடிகள் வாக்கு நினைவுக்குரியது. 1027.

1028. குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும்.

தன்குடியை உயரச் செய்யும் பணிகளில் ஈடுபடுவோருக்குப் பணி செய்தலுக்குரிய காலம் இல்லை; காலங் கருதிக் கடத்தலாகிய சோம்பல் இல்லை; மானமும் இல்லை. காலம், சோம்பல், மானம் கருதினால் குடியை உயரச் செய்தலாகிய பணி கெடும்.

பருவம்: நல்ல நாள் பார்த்துக் காத்திருத்தல், மூடத்தனம் முயற்சியுடையார்க்கு ஆகாது.

மடிசெய்தல்: வாழ்க்கையின் இயல்பு சுறுசுறுப்பு. சோம்பல் செயற்கை. சோம்பல் தோன்றும் களம் காலம்பார்த்துக் காத்திருத்தல். விதியின்பால் உள்ள நம்பிக்கை; துன்பத்தைச் சந்திக்கும் துணிவின்மை.

மானம்: உதவும் உரிமையும் உடையார்மாட்டுப் பெருமை பாராட்டுதல் அல்லது மதிப்பினை எதிர்பார்த்தல். 1028.

1029. இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு.

தனது குடும்பத்தைச் சார்ந்த குற்றத்தை நீக்கும் தொழிலில் ஈடுபடுவானின்உடல் துன்பத்துக்கே ஆளாகுமா?

தான் பிறந்த குடும்பத்தின் குற்றங்களாகிய வறுமை, வேற்றுமை இவைகளை மாற்ற உழைப்பானை, குடும்பத்தின் மற்ற உறுப்பினர்கள் அங்கீகரிப்பதில்லை. மாறாக, ஐயப்பாட்டுத் தொல்லைகள் தருவர். அதனால் குடும்ப மேம்பாடு கருதி உழைப்பவன் துன்பத்திற்கே ஆளாவான். இது உலக நியதி.

இத்தகைய துன்பம் வரவேற்கத் தக்கது என்பதே திருக்குறள் கருத்து. 1029.

1030. இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்துஊன்றும்
நல்ஆள் இலாத குடி.

தலைமுறைதோறும் தாங்கிக் காப்பாற்ற நல்ல ஆள் இல்லாத குடும்பம் இடுக்கண்ணின் காரணங்கள் தோன்றும் பொழுது வீழ்ந்து படும்.

ஒரு குடும்பம் தொடர்ந்து மேம்பாட்டுடன் விளங்க, அடுத்துவரும் தலைமுறை ஆற்றல் மிக்கதாக விளங்கவேண்டும் என்றுணர்த்தியவாறு. 1030.

## 104. உழவு

உழவுத் தொழில் பற்றியும் உழவுத் தொழிலின் மேம்பாடு பற்றியும் கூறும் அதிகாரம்.

1031. சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை.

பல்வேறு முயற்சிகளுக்குப் பின்னும் உலகம் ஏரின் பின்னாகவே நிற்கிறது. ஆதலால் எங்கு சுற்றியும் உழவுத்தொழிலே தலையாய தொழில்.

உலகம் பல்வேறு முயற்சிகளின் பின் சுற்றினாலும் உழவினாலாய உணவு தேவை என்பதால் எல்லா முயற்சிகளும் உழவுத் தொழிலுக்குப் பின்னேதான் என்று கூறியது. 1031.

1032. உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃது ஆற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து.

உழுவார் உலகத்தாருக்கு ஆணி. மற்றெல்லோரையும் தாங்கி நிற்றலால். ''ஆணி'' தாங்கும் உறுப்பு. அச்சாணி என்றும் கூறுவர். உழவுத் தொழில் செய்வோரே மற்றைத் தொழில் செய்வோருக்கும் உணவளித்தலால் 'ஆணி' என்று சிறப்பித்தார். 1032.

1033. உழுதுஉண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றுஎல்லாம்
தொழுதுஉண்டு பின்செல் பவர்.

உழுதுண்டு வாழ்பவர்களே வாழ்பவர்கள் என்று கருதப்படுவார்கள். மற்றையோர் பிறரைத் தொழுது உண்டு அவர் பின் செல்பவர்.

உழுதுண்பவர் வாழ்நிலை சுதந்திரமானது. மற்றைத் தொழில் செய்வாரும் உணவுக்கும் உடைக்கும் மற்றவரைச் சார்ந்திருக்க வேண்டும் என்பதால் ''தொழுதுண்டு'' என்றார். 1033.

1034. பல்குடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
அல்குடை நீழல் அவர்.

பல அரசர்களின் வெண்கொற்றக் குடைகளும் தம் குடைக்கீழ்க் காண்பர், நெற்கதிர் விளைவிக்கும் தொழிலுடைய உழவர்.

உழவர் பெரும்பாலும் குடை பிடிப்பதில்லை. உழவர் குடையின் கீழ், அரசர்களின் வெண்கொற்றக் குடைகள், ஆம்! அரசர்களுக்கும் உணவு இன்றியமையாதது. 1034.

1035. இரவார் இரப்பார்க்குஒன்று ஈவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

தம் கையால் உழுதொழில் செய்து உண்பதை இயல்பாகக் கொண்டவர்கள் யாசிக்க மாட்டார்கள். யாசிப்பவர்க்கு ஈவர்.

உழுதுண்பவர்களுக்கு இரந்து வாழும் நிலை இல்லை. மாறாக வழங்கி வாழ்வர் என்றவாறு. இந்த நிலை இன்று மாறுபட்டுக் கிடக்கிறது. 1035.

1036. உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேம்என் பார்க்கும் நிலை.

உழவுத் தொழில் செய்வோர் உழுதொழில் செய்யாது கைகட்டி வாளா இருப்பின் துறந்தாருக்கும் நிலைப்பாடு இல்லை.

துறந்தாரும் உணவைத் துறவாமையின் காரணமாக உழுதொழிலைச் சார்ந்தே துறவிகளும் வாழ்கின்றனர் என்றவாறு.

துறவிகளை, ''விழைவதூஉம் விட்டேம் என்பார்'' என்று கூறியவாறு விரும்பி உண்பதில்லை; தேவைக்கு உண்பவர் என்று உணர்த்த. 1036.

1037. தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

ஒருபலம் எடையுள்ள புழுதி, கால்பலம் ஆகும் வரை உழுது காயப்போட்டால் ஒரு கைப்பிடிகூட எருப்போட வேண்டிய அவசியமல்லாமல் விளையும்.

உழுத நிலம் கட்டிகள் இல்லாமல் நன்கு புழுதியாகும் வண்ணம் உழுதல் நல்ல விளைச்சலுக்கு அவசியம் என்ற உழவுத் தொழிலின் நுட்பம் உணர்த்தியவாறு. 1037.

1038. ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்
நீரினும் நன்றதுஅதன் காப்பு.

உழுதலே நன்று; அதனினும் நன்று எருவிடுதல்; அதனினும் நன்று களை எடுத்தல்; அதனினும் நன்று நீர்விடுதல்; அதனினும் நன்று பயிர்ப் பாதுகாப்பு.

திருக்குறள் உழவுத்தொழில் நுட்பம் அத்தனையையும் முறைப்படியும் அவசியமுறையிலும் உணர்த்திய அமைவை எண்ணுக.

''அதன் காப்பு'' என்பது நோய்களாலும் பூச்சிகளாலும் விலங்குகளாலும் பயிருக்குக் கேடுவராதபடி பாதுகாத்தல்.

முன் 1037ஆம் குறளில் ''பிடித்தெருவும் வேண்டாம்'' என்ற திருவள்ளுவர், ''ஏரினும் நன்றாம் எருவிடுதல்'' என்றது ஏன்? முன்குறள் புழுதிபட நன்றாக உழ வேண்டும் என்ற நியதியை வலியுறுத்தக் கூறப்பட்டது என்று உணர்க.

மேலும், எருவிடாது போனாலும் விளையும் நிலம் வளம் குன்றும் என்பதை அறிக. 1038.

1039. செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்.

நிலத்திற்குரியவன் நிலத்திற்குச் செல்லாமல் இருப்பானாகில் இல்லத்திற்கு வராத தலைமகனிடம் தலைமகள் ஊடல் செய்வது போல நிலம் ஊடி வளம் தராது.

நிலத்தை, கணவன் - மனைவி உரிமை உணர்வுடன் இணைத்துக் கூறிய பாங்கினால் நிலம் உழுவாரிடத்திலேயே இருக்கவேண்டும் என்ற கருத்துப் புலனாகிறது. 1039.

1040. இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலம் என்னும் நல்லாள் நகும்.

யாதொன்றும் இல்லை என்று சோம்பிக் கிடப்பாரைக் காணின் நிலம் என்று போற்றப்படும் நன்மகள் வெட்கி நாணுவாள்.

நிலத்தில் உழவுத் தொழில் செய்தார் வறியவராதல் இல்லை என்றுணர்த்தியது.

இன்று இந்தக் குறள் பொருந்தாது. இயற்கை மாறுபட்டுக் கிடக்கிறது. 1040.

## 105. நல்குரவு

வறுமை. அஃதாவது உண்பன, உடுப்பன இல்லாமை. திருவள்ளுவர் காலத்தில் நுகர்வு எல்லைக்குட்பட்டதேயாம். இன்றோ நுகர்வு எல்லை கடந்து விரிந்துள்ளது. சமுதாயத்தில் ஏழ்மை என்ற புதிய சொல் வழக்கு ஒன்று வழங்கி வருகிறது. உண்பனவும் உடுப்பனவும் இன்மையை ஏழ்மை என்றும் நாகரிக உலகத்தின் சராசரித் தேவைகள்(காலணி, கடிகாரம், ஈருருளை வண்டி, தொலைக்காட்சிப் பெட்டி முதலியன) பெறாத நிலையை வறுமை என்றும் பகுத்துணரலாமா என்பதை ஆய்வு செய்ய வேண்டும்.

மனிதனைக் கொல்லும் ஏழ்மை, உணவின்மையேயாம். ஆதலால், உணவுக்குக் காரணமாய உழவினை அடுத்து நல்குரவு வைத்தார்.

1041. இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது.

ஒருவனுக்கு வறுமையைப் போலக் கொடுமையானது எது எனில் வறுமையைப் போலக் கொடுமையானது அவ்வறுமைதானேயாம். பிறிதொன்று இல்லை.

உலகில் கொடுமைகளில் கொடுமை வறுமையேயாம். வறுமை வருத்துவது போலப் பிறிதொன்று வருத்தல் இயலாது.

உழைப்பு, செல்வத்தின் அருமையை உணர்த்தவே வறுமை கொடுமையாயிற்று. ஆயினும் உணர்வார் யார்? 1041.

1042. இன்மை எனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும்.

வறுமை என்று அழைக்கப்படும் ஒரு பாவி, இம்மை, மறுமை இன்பங்கள் இல்லாமல் செய்ய வரும்.

வறுமை என்ற பாவி வந்தடைந்தபின்தான் இம்மையும் மறுமையும் இல்லாமல் போகிறது. ஆனால், ''மறுமையும் இம்மையும் இன்றி வரும்'' என்று கூறியது உறுதிப்பாட்டை நோக்கியேயாம்.

மறுமையை முதலில் கூறியது சிறப்பு நோக்கியே. இம்மையின் விளைவே மறுமை. 1042.

1043. தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக
நல்குரவு என்னும் நசை.

ஒருவனிடத்து நல்குரவு என்னும் ஆசை வந்து பிடித்தால் அவனுடைய பழைய குடி மரபினையும் பழைய புகழினையும் ஒருமித்துக் கெடுக்கும்.

இன்மையைப் பொருட்படுத்தாதவர்களுக்கு வறுமையும் இல்லை. அவ்வழி துன்பமும் இல்லை. ஆதலால், ஆசையே வறுமை என்று கூறினார். 1043.

1044. இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
சொற்பிறக்கும் சோர்வு தரும்.

நற்குடி பிறந்தாரிடத்தும் வறுமை இகழ்ச்சிக்குரிய சோர்வினைத் தரும்.

நற்குடிப் பிறந்தார் வறுமையின் காரணமாகத் தனது மரபைக் காப்பாற்றிக் கொள்ள இயலாமையால் சோர்வு படுவர். 1044.

1045. நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

வறுமை என்ற துன்பம் வரவே, அதனைத் தொடர்ந்து பல துன்பங்கள்

வந்து பொருந்தும்.

வறுமையின் வழி உடல் நோய் வசப்படுதல், ஊக்கமிழத்தல், மானமிழத்தல் முதலியன தொடரும். 1045.

1046. நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

வறுமையுடையார், நல்லறச் செய்திகளை நன்றாக உணர்ந்து கூறினும் அவர்தம் சொல் மதிப்புப் பெறாது; பயனற்றுப் போகும்.

சொல்லப்படும் பொருளை நோக்காது, சொல்லுவாரை நோக்கும் நிலை உள்ளவரை இந்த அவலம் இருக்கும். 1046.

1047. அறம்சாரா நல்குரவு ஈன்றதா யாயினும்
பிறன்போல நோக்கப் படும்.

புண்ணியம் சேராத வறுமையுடையான் ஈன்ற தாயாலும் அந்நியன் போலப் பார்க்கப் படுவான்.

அறஞ்செய்தலுக்குரிய வாயில்கள் வறுமையால் அடைபட்டுப் போதலின், ''அறஞ் சாரா நல்குரவு'' என்றார்.

வறுமையுடையோனால் பயனில்லாமையாலும் அதுமட்டுமன்றி உதவி செய்ய வேண்டிய கடப்பாடு வரும் என்ற அச்சத்தாலும், ''பிறன்போல நோக்கப் படும்'' என்றார். 1047.

1048. இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு.

நேற்று வருத்திய வறுமை இன்றும் வந்து வருத்துமோ? வந்தால் என்ன செய்வது? ''இன்றும் வருவது கொல்லோ'' என்றதால் இன்றும் வறுமை வருத்தும்படி வாழ்வது அறிவற்ற செயல் என்பதுணர்க. நேற்றைய பாடு இன்றைய அறிவு அல்லவா? 1048.

1049. நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதொன்றும் கண்பாடு அரிது.

நெருப்பிற்குள் கிடந்தும் உறங்கலாம். ஆனால் வறுமையின்கண் உறங்குவது அரிது.

நெருப்புடனும் கூடி வாழலாம். ஆனால் வறுமையுடன் கூடி வாழ்தல் இயலாது என்று வறுமையின் கொடுமை உணர்த்தியவாறு. 1049.

1050. துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று.

துய்ப்பன பெறாதார் முற்றத் துறக்காமை மற்றவர்களுடைய உப்புக்கும் கஞ்சிக்கும் கூற்றுவராம்.

துய்ப்பன இல்லாதான் இரந்து வாழ்தலினும் துறத்தல் பெருமையுடையது என்றவாறாயிற்று. முற்றத் துறவாதார் ஆசை வயப்படுவர் என்றுணர்த்த ''துவரத் துறவாதார்'' என்றார்.

துவரத் துறந்தார் பசியை வெல்வார். மற்றவர் அடுத்த வீட்டில் எதிர்பார்ப்பர். 1050.

## 106. இரவு

இரத்தல்-பிச்சை எடுத்தல். வாழ்தலுக்குரிய தேவைகளை நெறிமுறைகளுடன் அடைய முடியாதவர் பிச்சை எடுத்து வாழ நினைப்பர். இரத்தல், புகழுமன்று; இழிவும் கூட!

வறுமையின் காரணமாக இரத்தல் நிகழும். ஆதலால் வறுமையின் பின் வைத்தார்.

இந்த அதிகாரம், ''இரவு'' என்று, தலைப்புக் கொண்டிருந்தாலும் திருக்குறள்கண் ஈவாரின் சிறப்பியல்புகளைப் பற்றியே மிகுதியும் பேசுகின்றது.

1051. இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்
அவர்பழி தம்பழி அன்று.

இரந்து கேட்கத் தகுதியுடையாரைக் காணின் இரந்திடுக. இரந்தவர்க்கு இல்லை என்றாராயின் பழி அவருக்கே. இரந்தவர்க்கன்று.

''இரத்தக்கார்க் காணின்'' என்றதால் காண்பதரிது என்றஅருமை உணர்த்தினார்.

இரக்கத் தக்காரை இரக்கும் பொழுது அவர் ஒளித்தால் அவருக்கே பழி. இரப்பவருக்கு வராது.

ஈதற்பண்புக்குச் செயலாக்கம் தருபவர் கரவாது அளிப்பவர்களிடம் இரத்தல் தவறன்று என்று உணர்த்தியவாறு. 1051.

1052. இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை
துன்பம் உறாஅ வரின்.

ஒருவருக்கு இரத்தல் இன்பம்! எப்போது? இரந்து கேட்டவை துன்பந்தராமல் கிடைக்குமானால்!

பொதுவாக, இரத்தல் துன்பம். ஆனால், துன்பமாகிய இரத்தலும் இன்பமாவது இரக்கப்படுவாரின் தகுதியைப் பொறுத்தது. 1052.

1053. கரப்புஇலா நெஞ்சின் கடன்அறிவார் முன்நின்று
இரப்புமோர் ஏஎர் உடைத்து.

ஒளித்தல் இல்லாது நெஞ்சொடு கொடுக்கும் முறைமையறிந்து கொடுப்பாரிடம் இரத்தலும் இரப்பவர்க்கு அழகேயாம்.

''நெஞ்சிற் கடனறிவார்'' நெஞ்சொடு கொடுத்தல் - ஒப்புக்குக் கொடுக்காமல் உள்ளத்துடன் கொடுத்தல் என்பது கருத்து.

சங்ககாலப் புலவர்கள்-அரசர்கள் உறவு எண்ணத்தக்கது. 1053.

1054. இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு.

தம்மிடம் உள்ளதை ஒளித்தல் பற்றிக் கனவிலும் அறியாதாரிடம் இரத்தலும் ஈதல் போன்றது.

ஈதலில் உள்ள பெருமை போல இரத்தல் பெருமை என்பதால் ''ஈதலே போலும்'' என்றார். 1054.

1055. கரப்பிலார் வையகத்து உண்மையால் கண்நின்று
இரப்பவர் மேற்கொள் வது.

இந்த உலகத்தில் ஒளிக்காமல் உதவும் பண்புடையார் இருப்பதால் இரப்பவர் இரக்கும் இயல்பினராயினர்.

ஒளித்து வாழ விரும்பாமல் இரந்து வருவோர்க்கு உதவும் பண்புடையார் உலகத்திலுள்ளனர். அதனாலேயே இரத்தல் தொழில் அற்றுப் போய்விட வில்லை. 1055.

1056. கரப்புஇடும்மை இல்லாரைக் காணின் நிரப்புஇடும்பை
எல்லாம் ஒருங்கு கெடும்.

ஒளித்து வாழும் துன்பமில்லாரைக் காணின் இரந்து வாழும் துன்பமுடையாரின் துன்பமெலாம் ஒருங்கே கெடும்.

செல்வத்தை ஒளித்துக் காத்து வாழ்தலும் துன்பமே என்பதனை உணர்த்தக் ''கரப்பிடும்பை'' என்றார். கரப்பினால் வரும் இடும்பையாவது, களவு முதலியவற்றால் செல்வம் அழியாமல் காக்கும் துன்பம்.

வறுமை முழுதும் கெடும் என்பதை உணர்த்த ''நிரப்பிடும்பை யெல்லாம் ஒருங்கு கெடும்'' என்றார். 1056.

1057. இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்
உள்ளுள் உவப்பது உடைத்து.

இரப்பாரை இகழ்தலும் அவமதித்தலும் செய்யாது கொடுத்து உதவுவாரைக் காணின் இரப்பவர் உள்ளம் உவப்பில் திளைக்கும்.

பொதுவாக, வறுமையால் வாடுவாரை இகழ்தலும் அவமதித்தலும் உலகியல்பாதலின் அந்த இயல்பை மறுத்து ''இகழ்ந்தெள்ளாது ஈதலை'' வற்புறுத்தினார்.

இகழ்ந்து எள்ளலுடன் உதவினால் பயனுமில்லை; புகழுமில்லை! என்பதை உணர்த்துவது இந்தக் குறள். 1057.

1058. இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று.

இரப்பார் இந்த உலகில் இல்லாமற் போயின், இந்தப் பெரிய உலகம், உயிர்ப்பற்ற மரப்பாவைக் கூத்துப் போன்றதாகும்.

மரப்பாவைக் கூத்து உயிர்ப்பு இல்லாதது. அதுபோல உதவுதல் - ஒத்துழைத்தல் ஆகிய மானுடத்திற்குரிய உயிர்ப்புக் குணங்கள் இல்லாத மனிதர்கள் கூட்டம் மரப்பாவை போலத்தான் என்பதுணர்த்தியது.

வாழ்க்கைக்கு உயிர்ப்பு உதவுதலும் ஒத்துழைப்புமேயாம். 1058.

1059. ஈவார்கண் என்உண்டாம் தோற்றம் இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை.

கொடுத்து உதவுவாரிடம் இரப்பவர் சென்று கேட்காதிருப்பின் கொடுக்கும் இயல்புடையாரிடம் என்ன புகழ் இருக்க இயலும்? புகழில்லை.

''இரப்பார்க்கு ஒன்று ஈவதே புகழ்'' என்றுணர்த்தியது. இரப்பவர் சாதாரணப் பொருளைப் பெற்றுக் கொண்டு ஈவாருக்கும் இம்மையும் மறுமையும் அளிக்கும் புகழினை அளிப்பதை அறிந்துணர்க. 1059.

1060. இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயும் சாலும் கரி.

இரந்து கேட்பவனுக்கு இரந்தது கிடைக்காதபொழுது கோபப்பட வேண்டாம். வேண்டிய பொழுது உதவி கிடைக்காது என்பதற்கு வறுமையே சான்று.

ஏமாற்றத்தின்பொழுதும் வெகுளாமை வேண்டும் என்று உணர்த்த, ''இரப்பான் வெகுளாமை வேண்டும்'' என்றார். 1060.

## 107. இரவச்சம்

மானத்திற்கு அஞ்சி இரந்து வாழ்தலுக்கு அஞ்சுதல். உழைத்து வாழ்வதே வாழ்வு. இரந்து வாழ்தல் உயர்வன்று என்று விளக்கும் அதிகாரம்.

1061. கரவாது உவந்து ஈயும் கண்அன்னார் கண்ணும்
இரவாமை கோடி உறும்.

தம்மிடம் உள்ளதை ஒளிக்காது கொடுக்கும் கண் போன்று உரிமை உடையோரிடத்தும் இரந்து கேட்காமல் இருப்பது கோடி இன்பம் தரும்.

இரத்தலால் பெற முடியும் என்ற நம்பிக்கை இருப்பின் இரத்தல் நன்று என்று முன் சொன்னதை மறுக்கின்றார்.

பொதுவாக, இரத்தல் கூடாது என்பதே திருக்குறள் முடிவு. 1061.

1062. இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்.

இரந்து தான் உயிர் வாழ்தல் வேண்டும் என்ற நிலையிருப்பின் இந்த உலகை இயக்குகின்றவன் கெட்டுத் தொலைக.

''இரந்தும்'' இழிவுச் சிறப்பு உம்மை. ''உயிர் வாழ்தல்'' என்றமையால் சோற்றுக்கே பஞ்சம் என்றுணர்த்தினார்.

''உலகியற்றியான்'' - உலகை இயற்றும் அரசனும் தலைவனும் என்பது கருத்து. இறைவன் என்ற உரை பொருந்தாது. கடவுள் படைப்பில் பொதுமையே இருக்கும். 1062.

1063. இன்மை இடும்பை இரந்துதீர் வாம்என்னும்
வன்மையின் வன்பாட்டது இல்.

வறுமையின் துன்பத்திற்கு ஒருவரிடம் இரந்து வாங்கித் தீர்வு காணலாம் என்று கருதும் வன்மைபோலப் பிறிதொரு வன்மை இல்லை.

இரக்கப்படுவாருக்குத் துன்பமும் இழப்பும் தருதலின் இரந்து தீர்வு காணலை,''வன்மை'' என்றார். 1063.

1064. இடம்எல்லாம் கொள்ளாத் தகைத்தே இடம்இல்லாக்
காலும் இரவுஒல்லாச் சால்பு.

வாழ்வதற்குரிய ஒன்றும் இல்லாத பொழுதும் இரந்து வாழ்தலுக்கு உடன்படாதாரின் பெருமை, இந்த உலகில் நிறைந்து விளங்கும்.

வாழ்தலை முதன்மையாகக் கருதாமல் மானத்தைப் பெரிதாகக் கருதி இரவாமை பெருமை என்று கூறியது. 1064.

1065. தெள்நீர் அடுபுற்கை ஆயினும் தாள்தந்தது
உண்ணலின் ஊங்குஇனியது இல்.

தெளிந்த தண்ணீரைப் போன்று சமைத்த கூழேயாயினும் உழைப்பு தந்ததை உண்பதினும் இனியது ஒன்றும் இல்லை.

கூழ் குடிப்பது இழிவல்ல. உழைக்காமல் உண்பதே இழிவு என்ற நெறி உணர்த்தியது. 1065.

1066. ஆவிற்கு நீர்என்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல்.

பசுவிற்குத் தண்ணீர் என்று இரந்தாலும் நாவிற்கு இரவால் வந்த இழிவு வந்ததேயாம்.

இரப்பது தண்ணீர். இரக்கப்படுவது பசுவைக் காப்பாற்ற. ஆயினும் இரவினால் இழிவு வருவதில் மாற்றமில்லை.

ஆவிற்கும் தண்ணீர் தேடியே தர வேண்டும்.

அறமும் இரவின் மூலம் செய்தல் நன்றன்று. இன்றைய சமுதாயம் இரத்தலை இரவாகக் கருதவில்லை. ''நன்கொடை''களே நாட்டை இயக்கிக் கொண்டிருக்கின்றன. 1066.

1067. இரப்பான் இரப்பாரை எல்லாம் இரப்பின்
கரப்பார் இரவன்மின் என்று.

இரந்து வாழ்வோரிடமெல்லாம் யான் இரக்கின்றேன்; இரத்தலைத் தவிர்க்க இயலாத போதும் ஈயாது ஒளித்து வாழ்வோரிடம் இரத்தல் வேண்டாம்.

இரத்தலே இழிவு. அந்த இரத்தலும் கரப்பாரிடம் நிகழுமாயின் பெருமை மட்டுன்று. எள்ளலும் இழிவும் ஏமாற்றமும் வருதலின் கரப்பாரிடம் இரவன்மின் என்றார். திருவள்ளுவர் இரந்து கேட்பதைத் தவறாது ஈவோமாக! 1067.

1068. இரவுஎன்னும் ஏமாப்பில் தோணி கரவுஎன்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

இரந்து தீர்வு காண்போம் என்ற இறுமாப்பு என்னும் தோணி, இரப்பாருக்கு ஒளித்தல் என்ற பாறை தாக்க உடைந்து போகும்.

இரத்தல் ஒருபோதும் இறுமாப்புத் தருதல் ஆகா. ஆயினும் இரந்து கிடைக்கும் என்ற நம்பிக்கையின்வழி இரத்தலும் ஏமாப்பாகிறது. 1068.

1069. இரவுஉள்ள உள்ளம் உருகும் கரவுஉள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும்.

உடையார்முன் இல்லாதவர் நின்று இரக்கும் செயல் உருக்கத்தைத் தருகிறது. இரக்கப்படுவார் இல்லை என்று கூறியவுடன் உள்ள இல்லாததாகிவிடும்.

செல்வத்தின் பயன் ஈதல்; ஈதல் நிகழாமையால் ''உள்ளதூஉம் இன்றிக் கெடும்'' என்றார். 1069.

1070. கரப்பவர்க்கு யாங்கொளிக்கும் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர்.

இரப்பவரின் உயிர் இரந்தது கிடைக்காது, வெற்றுச் சொற்களே கிடைத்தபொழுது உயிர்போய்விடும். இரப்பார்க்கு ஈவது செய்யாது ஒளிப்பவர் உயிர் எங்கு ஒளிந்து கொள்ளும்.

பொருள் ஒளிக்கப்படுதலைப் போல உயிரும் ஒளிக்கப் படுமோ? என்றார். இரப்பார்க்கு ஈத்துவந்து வாழ்தலே உயிர் வாழ்க்கையின் பொருள் என்று உணர்த்தியது. 1070.

## 108.கயமை

அறத்துப்பாலிலும் பொருட்பாலிலும் சொன்ன அறநெறிகளை ஏற்று வாழாத அற்ப மனிதர்கள் கயவர்கள். கயவர்கள் பொல்லாத குணங்கள் பலவும் ஒருங்கே கொண்ட கீழ் மனிதர்கள்.

1071. மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பார் யாம்கண்டது இல்.

மக்களைப் போல்தான் கீழ்மக்களும் இருப்பர். ஆயினும் அவர்களைப் போல மோசமானவர்களை நாம் கண்டதில்லை.

உறுப்புக்களால் மக்கள் போல் இருப்பர். ஆயினும் மக்கள் அல்லர். அதுமட்டுமல்ல, கீழ்மக்களைப் போன்றவர்களைப் பார்த்தலும் அரிது. 1071.

1072. நன்றுஅறி வாரில் கயவர் திருவுடையர்
நெஞ்சத்து அவலம் இலர்.

நல்லன தெரிந்தவர்களிலும் கீழ்மக்கள் செல்வமுடையார். கயவர்களுக்கு நெஞ்சத்தில் யாதொரு கவலையும் இல்லை.

புண்ணிய பாவங்களுக்கு அஞ்சும் இயல்புடையோர் கவலைப்படுவர். இவர்களுக்கு நற்சிந்தனை இன்மையால் கவலையுமில்லை என்றார். 1072.

1073. தேவர்அனையர் கயவர் அவரும்தாம்
மேவன செய்து ஒழுக லான்.

தேவர்களுக்கு ஒப்பானவர்கள் கீழ்மக்கள். தேவர்களைப் போலவே கீழ்மக்களும் தாம் விரும்பியனவற்றைச் செய்தொழுகலான்.

கயவர்களும் தாம் விரும்பியன செய்து ஒழுகலான் என்றதால் செய்தற்குரியன விரும்புவனவே ஒழிய நல்லன என்ற வரையறையில்லை

என்பதாயிற்று.

தேவர்கள் நல்லனவே விரும்புபவர்கள். ஆதலால் அவர்கள் விரும்புவன செய்தால் தவறில்லை என்று உணர்த்தும் பாங்கறிக. ஆனால் புராணங்களில் வரும் தேவர்கள் கீழ்மக்கள் போலத்தான் விரும்பிச் செய்து வாழ்ந்திருக்கிறார்கள். 1073.

1074. அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ்.

கீழ்மக்கள், தமக்கு அடங்கிநடப்பாரைக் கண்டால் தாம் அவரினும் மிக்கோர் என்று செருக்கு அடைவர்.

சிறுமைகள் பல செய்வதில் போட்டி. அதில் வெற்றிப் பெருமிதத்தைக் காட்டுதல் கயமையின் இயல்பு. 1074.

1075. அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்
அவாஉண்டேல் உண்டாம் சிறிது.

கீழ்மக்களது ஒழுக்கம் அச்சமே. அடுத்துச் சிறிது அவாவும் உண்டு.
''தாம் செய்யும் தீமைகளால் துன்பம் வருமே என்ற அச்சம்''
கள்வருக்குப் புதரும் போலீஸ்காரரேயாம். 1075.

1076. அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க்கு உய்த்து உரைக்க லான்.

தாம் கேட்டறிந்த பிறருக்கு உரைக்கலாகா மறைவான செய்திகளைப் பிறருக்கு எடுத்துச் சொல்லுதலில் கீழ்மக்கள் பறையினை ஒப்பர்.

மறைவானவை, மறைவானவையாகவே பேணப்படுதல் வேண்டும். இரகசியங்களை வெளிப்படுத்துபவர் மனிதர் அல்லர்; பறை போன்றவர். 1076.

1077. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுஉடைக்கும்
கூர்ங்கையர் அல்லா தவர்க்கு.

தமது கதுப்பினை (கன்னத்தினை) உடைக்கும் கொடியவர்களுக்கே உண்ட கையைத் தெறிப்பர் கீழ்மக்கள். மற்றவர்களுக்கு உண்ட கையைத் தெறிக்கச் செய்யார்.

கயவர் இயல்பாகக் கொடுக்க மாட்டார்கள். அடிக்கும் உதைக்கும் அஞ்சிக் கொடுப்பர். 1077.

1078. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ்.

சான்றோர்கள் சொல்லிய அளவிலேயே பயன்படுவர். கீழ்மக்களோ கரும்பை இடித்துச் சாறு எடுப்பது போல் கொலையனைய துன்பம் தந்தாலே பயன்படுவர்.

மிக உயர்ந்தவர்கள் சொல்லப்பயன்படுவார்கள். மிகவும் கீழானவர்கள் கொல்லப் பயன்படுவார்கள். 1078.

1079. உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்
வடுக்காண வற்றாகும் கீழ்.

பிறர் உடுத்தும் உண்டும் வாழ்வதைக் காணின் அவர்மீது குற்றங்களைக் காண்பர் கீழ்மக்கள்.

உண்பதிலும் உடுப்பதே சமுதாயத் தேவை என்பதால் முதலில் உடுப்பதைக் கூறினார்.

உடுப்பதூஉம் உண்பதூஉம் பெறாது வறிதே வாழ்தலின் தமது மாட்டாமையை மறைப்பான் வேண்டிப் பெற்றான் மீது குற்றம் சுமத்திடுவர். 1079.

1080. எற்றிற்குஉரியர் கயவர்ஒன்று உற்றக்கால்
விற்றற்கு உரியர் விரைந்து.

கயவர், ஒரு துன்பம் வந்துற்ற பொழுது தம்மையே விற்று விடுவர். அவர் (கயவர் எத்தொழிற்கு உரியர்?) ஒன்றுக்கும் உரியரல்லர் என்பது கருத்து.

கயவர் தம்மையே விற்றுப் பிழைப்பர் என்றால் நம்பிக்கைக்கு உரியவர் அல்லர் என்பது உணர்த்தியது. 1080.

(பொருட்பால் மூலமும் உரையும் முற்றுப் பெற்றது)



## இன்பத்துப்பால்

### களவியல்

### 109.தகையணங்குறுத்தல்

1081. அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு.

1082. நோக்கினாள் நோக்குஎதிர் நோக்குதல் தாக்குஅணங்கு
தானைக்கொண் டன்னது உடைத்து.

1083. பண்டுஅறியேன் கூற்றுஎன் பதனை இனிஅறிந்தேன்
பெண்தகையால் பேரமர்க் கட்டு.

1084. கண்டார் உயிர்உண்ணும் தோற்றத்தால் பெண்தகைப்
பேதைக்கு அமர்த்தன கண்.

1085. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து.

1086. கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்குஅஞர்
செய்யல மன்இவள் கண்.

1087. கடாஅக் களிற்றின்மேல் கண்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில்.

1088. ஒள்நுதற்கு ஓஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்கும்என் பீடு.

1089. பிணைஏர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணிஎவனோ ஏதில தந்து.

1090. உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று.

## 110. குறிப்பு அறிதல்

1091. இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்குஒன்று அந்நோய் மருந்து.

1092. கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்
செம்பாகம் அன்று பெரிது.

1093. நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர்.

1094. யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்.

1095. குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

1096. உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும்.

1097. செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்
உறாஅர்போன்று உற்றார் குறிப்பு.

1098. அசைஇயற்கு உண்டுஆண்டுஓர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும்.

1099. ஏதிலார்போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலர் கண்ணே உள.

1100. கண்ணொடு கண்ணினை நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல.

## 111.புணர்ச்சி மகிழ்தல்

1101. கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்
ஒண்தொடிக் கண்ணே உள.

1102. பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து.

1103. தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு.

1104. நீங்கின் தெறூஉம் குறுகும்கால் தண்என்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள்?

1105. வேட்ட பொழுதின் அவைஅவை போதுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்.

1106. உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்ற தோள்.

1107. தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு.

1108. வீழும் இருவர்க்கு இனிதே வளிஇடை
போழப் படாஅ முயக்கு.

1109. ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன்.

1110. அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு.

## 112. நலம் புனைந்துரைத்தல்

1111. நல்நீரை வாழி அனிச்சமே நின்னினும்
மெல்நீரள் யாம்வீழ் பவள்.

1112. மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று.

1113. முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேல்உண்கண் வேய்த்தோ ளவட்கு.

1114. காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாணிழை கண்ஒவ்வேம் என்று.

1115. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

1116. மதியும் மடந்தை முகனும் அறியா
பதியின் கலங்கிய மீன்.

1117. அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுஉண்டோ மாதர் முகத்து.

1118. மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி!

1119. மலர்அன்ன கண்ணாள் முகம்ஒத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி!

1120. அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.

## 113. காதற் சிறப்பு உரைத்தல்

1121. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வால்எயிறு ஊறிய நீர்.

1122. உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு.

1123. கருமணியில் பாவாய்நீ போதாய்; யாம்வீழும்
திருநுதற்கு இல்லை இடம்.

1124. வாழ்தல் உயிர்க்குஅன்னள் ஆயிழை சாதல்
அதற்குஅன்னள் நீங்கும் இடத்து.

1125. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம்.

1126. கண்உள்ளின் போகார்; இமைப்பின் பருவரார்;
நுண்ணியர்எங் காத லவர்.

1127. கண்உள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பார்க்கு அறிந்து.

1128. நெஞ்சத்தார் காத லவராக வெய்துஉண்டல்
அஞ்சுதும் வேபாக்கு அறிந்து.

1129. இமைப்பின் கரப்பார்க்கு அறிவேல் அனைத்திற்கே
ஏதிலார் என்னும்இவ் வூர்.

1130. உவந்துஉறைவர் உள்ளத்துள் என்றும் ; இகந்துஉறைவர்
ஏதிலார் என்னும்இவ் வூர்.

## 114. நாணுத் துறவு உரைத்தல்

1131. காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
மடல்அல்லது இல்லை வலி.

1132. நோனா உடம்பும் உயிரும் மடல்ஏறும்
நாணினை நீக்கி நிறுத்தி.

1133. நாணொடுநல்லாண்மைபண்டுஉடையேன்இன்றுஉடையேன்
காமுற்றார் ஏறும் மடல்.

1134. காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு
நல்லாண்மை என்னும் புணை.

1135. தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்கும் துயர்

1136. மடல்ஊர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற
படல்ஒல்லா பேதைக்குஎன் கண்.

1137. கடல்அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்
பெண்ணின் பெருந்தக்கது இல்.

1138. நிறைஅரியர் மன்அளியர் என்னாது காமம்
மறைஇறந்து மன்று படும்.

1139. அறிகிலார் எல்லாரும் என்றேஎன் காமம்
மறுகின் மறுகும் மருண்டு.

1140. யாங்கண்ணின் காண நகுப அறிவுஇல்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

## 115. அலர் அறிவுறுத்தல்

1141. அலர்எழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலர்அறியார் பாக்கியத் தால்.

1142. மலர்அன்ன கண்ணாள் அருமை அறியாது
அலர்எமக்கு ஈந்ததுஇவ் வூர்.

1143. உறா அதோ ஊரறிந்த கௌவை? அதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து.

1144. கவ்வையால் கவ்விது காமம் ; அது இன்றேல்
தவ்வென்னும் தன்மை இழந்து.

1145. களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது.

1146. கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்பு கொண் டற்று.

1147. ஊரவர் கௌவை எருஆக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய்.

1148. நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல்.

1149. அலர்நாண ஒல்வதோ அஞ்சல்ஓம்பு என்றார்
பலர்நாண நீத்தக் கடை .

1150. தாம்வேண்டின் நல்குவர் காதலர்; யாம்வேண்டும்
கௌவை எடுக்கும் இவ் வூர்.

## 116. பிரிவு ஆற்றாமை

1151. செல்லாமை உண்டேல் எனக்குஉரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை.

1152. இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவுஅஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு.

1153. அரிதரோ தேற்றம் அறிவுஉடையார் கண்ணும்
பிரிவுஓர் இடத்துஉண்மை யான்.

1154. அளித்துஅஞ்சல் என்றுஅவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க்கு உண்டோ தவறு.

1155. ஓம்பின்அமைந்தார் பிரிவுஓம்பல் மற்றவர்
நீங்கின் அரிதால் புணர்வு.

1156. பிரிவுஉரைக்கும் வன்கண்ணர் ஆயின் அரிதுஅவர்
நல்குவர் என்னும் நசை

1157. துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை

1158. இன்னாது இனன்இல்ஊர் வாழ்தல் அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு.

1159. தொடின்சுடின் அல்லது காமநோய் போல
விடின்சுடல் ஆற்றுமோ தீ.

1160. அரிதுஆற்றி அல்லல் நோய் நீக்கிப் பிரிவுஆற்றிப்
பின்இருந்து வாழ்வார் பலர்

## 117. படர்மெலிந்து இரங்கல்

1161. மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை; இறைப்பவர்க்கு
ஊற்றுநீர் போல மிகும்.

1162. கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு
உரைத்தலும் நாணுத் தரும்.

1163. காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
நோனா உடம்பின் அகத்து.

1164. காமக் கடல்மன்னும் உண்டே; அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல்.

1165. துப்பின் எவன்ஆவர் மன்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர்.

1166. இன்பம் கடல்மற்றுக் காமம்; அஃதுஅடுங்கால்
துன்பம் அதனின் பெரிது.

1167. காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே உளேன்.

1168. மன்னுயி ரெல்லாம் துயிற்றி அளித்துஇரா;
என்அல்லது இல்லை துணை.

1169. கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா.

1170. உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோஎன் கண்.

## 118. கண் விழிப்பு அழிதல்

1171. கண்தாம் கலுழ்வது எவன்கொலோ? தண்டாநோய்
தாம்காட்ட யாம்கண் டது.

1172. தெரிந்துஉணரா நோக்கிய உண்கண் பரிந்துஉணராப்
பைதல் உழப்பது எவன்?

1173. கதுமெனத் தாம் நோக்கி த் தாமே கலுழும்
இதுநகத் தக்கது உடைத்து.

1174. பெயல்ஆற்றா நீர்உலந்த உண்கண் உயல்ஆற்றா
உய்வுஇல்நோய் என்கண் நிறுத்து.

1175. படல்ஆற்றா பைதல் உழக்கும் கடல்ஆற்றாக்
காமநோய் செய்தஎன் கண்.

1176. ஓஒஇனிதே எமக்குஇந்நோய் செய்தகண்
தாஅம் இதற்பட் டது.

1177. உழந்துஉழந்து உள்நீர் அறுக விழைந்துஇழைந்து
வேண்டியவர்க் கண்ட கண்.

1178. பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றுஅவர்க்
காணாது அமைவில கண்.

1179. வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண்.

1180. மறைபெறல் ஊரார்க்கு அரிது அன்றால் எம்போல்
அறைபறை கண்ணா ரகத்து.

## 119. பசப்பு உறு பருவல்

1181. நயந்தவர்க்கு நல்காமை தேர்ந்தேன் பசந்தஎன்
பண்பியார்க்கு உரைக்கோ பிற?

1182. அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்துஎன்
மேனிமேல் ஊறும் பசப்பு.

1183 சாயலும் நாணலும் அவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையும் தந்து.

1184. உள்ளுவன் மன்யான் உரைப்பது அவர்திறமால்
கள்ளம் பிறவோ பசப்பு.

1185. உவக்காண்எம் காதலர் செல்வார் இவக்காண்என்
மேனி பசப்புஊர் வது.

1186. விளக்குஅற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்குஅற்றம் பார்க்கும் பசப்பு.

1187. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன்; அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு.

1188. பசந்தாள் இவள்என்பது அல்லால் இவளைத்
துறந்தார் அவர்என்பார் இல்.

1189. பசக்கமன் பட்டாங்குஎன் மேனி நயப்பித்தார்
நல்நிலையர் ஆவர் எனின்.

1190. பசப்புஎனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றார் எனின்.

## 120. தனிப்படர் மிகுதி

1191. தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி.

1192. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி.

1193. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுநம் என்னும் செருக்கு

1194. வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅர் எனின்.

1195. நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாம் காதல் கொள்ளாக் கடை.

1196. ஒருதலையான் இன்னாது காமங்காப் போல
இருதலை யானும் இனிது.

1197. பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான்.

1198. வீழ்வாரின் இன்சொல் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணார் இல்.

1199. நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்
டிசையும் இனிய செவிக்கு.

1200. உறாஅர்க் குறுநோய் உரைப்பாய் கடலைச்
செறாஅய் வாழிய நெஞ்சு.

## 121. நினைந்தவர் புலம்பல்

1201. உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது.

1202. எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்.

1203. நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினப்பது போன்று கெடும்.

1204. யாமும் உளேங்கொல் அவர் நெஞ்சத்
தோஒ உளரே அவர்.

1205. தம்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்
எம்நெஞ்சத் தோவா வரல்.

1206. மற்றியான் என்னுளேன் மன்னோ அவரொடுயான்
உற்றநாள் உள்ள உளேன்.

1207. மறப்பின் எவனாவன் மற்கொல் மறப்பறியேன்
உள்ளினும் உள்ளம் சுடும்.

1208. எனைத்து நினைப்பினும் காயார் அனைத்தன்றோ
காதலர் செய்யும் சிறப்பு.

1209. விளியுமென் இன்னுயிர் வேறல்லம் என்பார்
அளியின்மை ஆற்ற நினைந்து.

1210. விடாது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி.

## 122. கனவு நிலை உரைத்தல்

1211. காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாதுசெய் வேன்கொல் விருந்து.

1212. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சின் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்.

1213. நனவினான் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டென் உயிர்.

1214. கனவினான் உண்டாகும் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு.

1215. நனவினாற் கண்டதூஉம் ஆங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது.

1216. நனவென ஒன்றில்லை ஆயின் கனவினாற்
காதலர் நீங்கலர் மன்.

1217. நனவினான் நல்காக் கொடியார் கனவினான்
என்னெம்மைப் பீழிப் பது.

1218. துஞ்சுங்கால் தோள்மேலர் ஆகி விழிக்குங்கால்
நெஞ்சத்தவர் ஆவர் விரைந்து.

1219. நனவினான் நல்காரை நோவர் கனவினான்
காதலர்க் காணா தவர்.

1220. நனவினான் நம்நீத்தார் என்பர் கனவினான்
காணார்கொல் இவ்வூ ரவர்.

## 123. பொழுது கண்டு இரங்கல்

1221. மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது.

1222. புன்கண்ணை வாழி மருள்மாலை எங்கேள்போல்
வன்கண்ண தோநின் துணை.

1223. பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்.

1224. காதலர் இல்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்.

1225. காலைக்குச் செய்தநன் றென்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை.

1226. மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்த திலேன்.

1227. காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

1228. அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை.

1229. பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.

1230. பொருள்மாலை யாளரை உள்ளி மருள்மாலை
மாயுமென் மாயா உயிர்.

## 124. உறுப்பு நலன் அழிதல்

1231. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண்.

1232. நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண்.

1233. தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்த நாள் வீங்கிய தோள்.

1234. பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

1235. கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

1236. தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடியர் எனக்கூறல் நொந்து.

1237. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூசல் உரைத்து.

1238. முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.

1239. முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

1240. கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு.

## 125. நெஞ்சொடு கிளத்தல்

1241. நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கு மருந்து.

1242. காத லவரிலர் ஆகநீ நோவது
பேதைமை வாழியென் நெஞ்சு.

1243. இருந்துள்ளி என்பரிதல் நெஞ்சே பரிந்துள்ளல்
பைதல்நோய் செய்தார்கண் இல்.

1244. கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவையென்னைத்
தின்னும் அவர்க்காணல் உற்று.

1245. செற்றார் எனக்கை விடலுண்டோ நெஞ்சேயாம்
உற்றால் உறாஅ தவர்.

1246. கலந்துணர்த்தும் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்தியென் நெஞ்சு.

1247. காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு.

1248. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் நெஞ்சு.

1249. உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ
யாருழைச் சேறியென் நெஞ்சு.

1250. துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
இன்னும் இழந்தும் கவின்.

## 126. நிறை அழிதல்

1251. காமக் கணிச்சி உடைக்கு நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

1252. காமம் எனவொன்றோ கண்ணின்றென் நெஞ்சத்தை
யாமத்தும் ஆளும் தொழில்.

1253. மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போல் தோன்றி விடும்.

1254. நிறையுடையேன் என்பேன்மன் யானாவென் காமம்
மறையிறந்து மன்று படும்.

1255. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றார் அறிவதொன் றன்று.

1256. செற்றவர் பின்சேறல் வேண்டி அளித்தரோ
எற்றென்னை உற்ற துயர்.

1257. நாணென ஒன்றோ அறியலம் காமத்தால்
பேணியார் பெட்ப செயின்.

1258. பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோதம்
பெண்மை உடைக்கும் படை.

1259. புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு.

1260. நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்போம் எனல்.

## 127. அவர்வயின் விதும்பல்

1261. வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்.

1262. இலங்கிழாய் இன்று மறப்பினென் தோள்மேல்
கலங்கழியும் காரிகை நீத்து.

1263. உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்
வரல்நசைஇ இன்னும் உளேன்.

1264. கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் நெஞ்சு.

1265. காண்கமன் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்குமென் மென்தோள் பசப்பு.

1266. வருகமன் கொண்கன் ஒருநாட் பருகுவன்
பைதல்நோய் எல்லாம் கெட.

1267. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்.

1268. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை அயர்கம் விருந்து.

1269. ஒருநாள் எழுநாள்போல் செல்லுசேண் சென்றார்
வருநாள் வைத்தேங்கு பவர்க்கு.

1270. பெறினென்னாம் பெற்றக்கால் என்னாம் உறினென்னாம்
உள்ளம் உடைந்துக்கக் கால்.

## 128.குறிப்பறிவுறுத்தல்

1271. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் உண்கண்
உரைக்கல் உறுவதொன் றுண்டு.

1272. கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்நிறைந்த நீர்மை பெரிது.

1273. மணியில் திகழ்தரு நூல்போல் பேதை மடந்தை
அணியில் திகழ்வதொன் றுண்டு.

1274. முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதொன் றுண்டு.

1275. செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கும் மருந்தொன் றுடைத்து.

1276. பெரிதாற்றிப் பெட்பக் கலத்தல் அரிதாற்றி
அன்பின்மை சூழ்வ துடைத்து.

1277. தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை.

1278. நெருநற்றுச் சென்றாரெம் காதலர் யாமும்
எழுநாளேம் மேனி பசந்து.

1279. தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி
அஃதாண் டவள்செய் தது.

1280. பெண்ணினாற் பெண்மை உடைத்தென்ப கண்ணினால்
காமநோய் சொல்லி இரவு.

## 129. புணர்ச்சி விதும்பல்

1281. உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

1282. தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்
காமம் நிறைய வரின்.

1283. பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்
காணா தமையல கண்.

1284. ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து
கூடற்கண் சென்றதென் னெஞ்சு.

1285. எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கண்
பழிகாணேன் கண்ட இடத்து.

1286. காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால்
காணேன் தவறல் லவை.

1287. உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்தல் அறிந்தென் புலத்து.

1288. இனித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.

1289. மலரினும் மெல்லிது காமம் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

1290. கண்ணின் துளித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினும் தான்விதுப் புற்று.

## 130. நெஞ்சொடு புலத்தல்

1291. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே
நீயெமக் காகா தது.

1292. உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்
செறாஅரெனச் சேறியேன் நெஞ்சு.

1293. கெட்டார்க்கு நட்டாரில் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செல்.

1294. இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

1295. பெறாஅமை அஞ்சும் பெறின்பிரி வஞ்சும்
அறாஅ இடுபைத் தென்நெஞ்சு.

1296. தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்
தினிய இருந்ததென் நெஞ்சு.

1297. நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாவென்
மாணா மடநெஞ்சிற் பட்டு.

1298. எள்ளின் இளிவாமென் றெண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு.

1299. துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சத் துணையல் வழி.

1300. தஞ்சம் தரமல்லர் ஏதிலார் தாமுடைய
நெஞ்சம் தமரல் வழி.

## 131. புலவி

1301. புல்லா திராஅப் புலத்தை அவருறும்
அல்லல்நோய் காண்கம் சிறிது.

1302. உப்பமைத் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்.

1303. அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மை
புலத்தாரைப் புல்லா விடல்.

1304. ஊடி யவரை உணராமைய வாடிய
வள்ளி முதலரிந் தற்று.

1305. நலந்தகை நல்லவர்க் கேஎர் புலந்தகை
பூஅன்ன கண்ணார் அகத்து.

1306. துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று.

1307. ஊடலின் உண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவதன்றுகொல் என்று.

1308. நோதல் எவன்மற்று நொந்தாரென் றஃதறியும்
காதலர் இல்லா வழி.

1309. நீரும் நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது.

1310. ஊடல் உணங்க விடுவாரோ டென்னெஞ்சம்
கூடுவம் என்ப தவா.

## 132. புலவி நுணுக்கம்

1311. பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பார்
நண்ணேன் பரத்தநின் மார்பு.

1312. ஊடி இருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

1313. கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று.

1314. யாரினுங் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று.

1315. இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்நிறை நீர்க்கொண் டனள்.

1316. உள்ளினேன் என்றேன்மற் றென்மறந்தீர் என்றென்
புல்லாள் புலத்தக் கனள்.

1317. வழுத்தினாள் தும்மினேன் ஆக அழுத்தழுதாள்
யாருள்ளித் தும்மினீர் என்று.

1318. தும்முச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல்
எம்மை மறந்தீரோ என்று.

1319. தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்கும்நீர
,இந்நீர் ஆகுதிர் என்று

1320. நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீர் என்று.

### 133. ஊடலுவகை.

1321. இல்லை தவறவர்க் காயினும் ஊடுதல்
வல்ல தவரளிக்கும் ஆறு.

1322. ஊடலின் தோன்றும் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்.

1323. புலத்தலிற் புத்தேள்நா டுண்டோ நிலத்தொடு
நீரியைத் தன்னார் அகத்து.

1324. புல்லி விடாஅப் புலவியுள் தோன்றுமென்
உள்ளம் உடைக்கும் உடை.

1325. தவறிலர் ஆயினும் தாம்வீழ்வார் மென்றோள்
அகறலின் ஆங்கொன் றுடைத்து.

1326. உணலினும் உண்ட தறலினிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது.

1327. ஊடலின் தோற்றவர் வென்றார் அதுமன்னும்
கூடலிற் காணப் படும்.

1328. ஊடிப் பெறுகுவம் கொல்லோ நுதல் வெயர்ப்பக்
கூடலில் தோன்றி ய உப்பு.

1329.ஊடுக மன்னோ ஒளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ இரா.

1330. ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

(திருக்குறள் இன்பத்துப்பால் முற்றுப் பெற்றது)



# செய்யுள் முதற்குறிப்பு அகர வரிசை.

(எண் : அதிகார எண்)



அருள்நெறித்தந்தை தமிழ்மாமுனிவர் நமது குருமகா சந்நிதானம் அவர்கள் திருக்குறள் நெறியைப் பட்டி தொட்டி எங்கும் பரவும் வகை செய்தார்கள்; திருக்குறள் பேரவை கண்டு ஒல்லும் வகையில் எல்லாம் திருக்குறள் தொண்டு ஆற்றினார்கள்; திருக்குறள் காட்டிய துறவு நெறியைத் தம் வாழ்நாளில் உயர்த்திப் பிடித்து அளவிடற்கரிய பெருமை பெற்றார்கள்; திருக்குறளின் தெளிவாய் வாழ்ந்த நமது மகாசந்நிதானம் அறம், பொருள் இரண்டிற்கும் அற்புதமாய் உரை தீட்டி உள்ளார்கள்.

தவத்திரு பொன்னம்பல அடிகளார்


# அருள்நெறிப் பதிப்பகம்

குன்றக்குடி - 630 206.

சிவகங்கை மாவட்டம்.